# கோவிலூர் மரபு வேதாந்த நூல்கள்

இரண்டாம் பாகம்

## மகாராஜா துறவு
## வைராக்கிய சதகம்
## வைராக்கிய தீபம்




**கோவிலூர் ஆதீனம்**

**கோவிலூர்**

# கோவிலூர்மரபு வேதாந்த நூல்கள்

## இரண்டாம் பாகம்

மகாராஜா துறவு

வைராக்கிய சதகம்

வைராக்கிய தீபம்

வெளியீடு

**சீர்வளர்சீர் நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்**

*கோவிலூர் ஆதீனம்*

**கோவிலூர் மடாலயம்**

**கோவிலூர் – 630 307**

**2006**

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலஉ லாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சி லம்படி வாழ்த்தி வணங்குவோம்.

வானவ ரசமாந் தொடர்பினால் உலகோர் வழுத்துறும் வன்னி ஐங்கரனை
வாநவ ரதந மணியறு முகனை மாசறு கொற்றவாள் இறையை
வானவர் முதுவன் பாலன வலவன் வணங்குநற் றிருநெலை மாதை
வானவ ரதனா முத்திரா மேச வள்ளலை வணங்கி வாழ்த் திடுவாம்.

தந்தைதாய் ஆவானும் சார்கதிஇங் காவானும்
அந்தமிலா இன்பநமக் காவானும் – எந்தம்உயிர்
தான்ஆகு வானும் சரணாகு வானும் அருட்
கோனாகு வானுங் குரு.

உ

சிவமயம்

## ஆசியுரை

### கோவிலூர் ஆதீனம்
### ஸ்ரீ ல ஸ்ரீ நாச்சியப்ப ஞான தேசிக சுவாமிகள்

பாரத நாட்டின் தலையாய பெருமை நமது ஆன்மீக உயர்வு பற்றியதாக உள்ளது. ஆன்மீகத்தில் தலையாயது வேதாந்தம். நாமனைவரும் 'இன்பம் எங்கே உள்ளது' எனத் தேடுகிறோம். 'அது உனக்குள்ளேயேதான் இருக்கிறது' என்பது வேதாந்தம். இன்பமும் மன அமைதியும் பெற்று, அவற்றை நிரந்தரமாக்கிக் கொள்வதில் தொடங்கி, உண்மையான தேடுதல் யாது என அறிவுறுத்தி, 'உயிருடன் உள்ளபோதே முத்தி' என்பதற்கான வழிகாட்டலை அருளுவது வேதாந்தம் மட்டுமே. இவற்றையெல்லாம் வாழ்வில் நடைமுறைப்படுத்த உதவுவன வேதாந்த சாத்திர நூல்கள்.

ஆயிரக் கணக்கான ஆண்டுகளாக வேதாந்த நூல்கள் சமஸ்கிருத மொழியில் கற்றுக் கொடுக்கப்பட்டன. வேதாந்த விருப்ப முடையவர்களில், தமிழ் மட்டுமே அறிந்தோர், சமஸ்கிருதம் பயிலுவதில் உச்சரிப்பு இடர்ப்பாடுகள் உண்டு. சாமான்ய மக்களும் புரிந்து கொள்ள வேண்டும் என்ற உயரிய நோக்கோடு, இக் கருத்துக்களை எளிமையாக்கிக் கொடுத்த பல பெரியோர்களும் உண்டு. சுமார் 700 ஆண்டுகட்கு முன்னர் வாழ்ந்த தவத்திரு தத்துவராய சுவாமிகள் இத்தகையவர். தமிழ்மற்றும் சமஸ்கிருத மொழிகளில் வல்லவரான சுவாமிகள், அவரது குருவை மகிழச்செய்ய, சங்கரரின் அத்வைத வேதாந்தக் கருத்துக்களையெல்லாம் திரட்டி, அவற்றை தமிழ்ச்செய்யுட்களாக உருவாக்கினார். இவ்வாறு பல ஞான நூல்கள் சுவாமிகளால் இயற்றப்பட்டன. இந்நூல்களைக் கற்றவர்கள், பின்னர், தமிழ் வழி வேதாந்த மரபு ஒன்றை உருவாக்கினர்.

சுமார் 180 ஆண்டுகளுக்கு முன், நகரத்தாரான முத்திராமலிங்கர், தமிழ் வழியில் வேதாந்தம் முழுமையும் பயின்று, அதனை மற்றோருக்கு கற்றுக்கொடுக்க விரும்பி இத் திருமடத்தினை உருவாக்கினார். வேதாந்தக் கருத்துக்களனைத்தையும் உள்ளடக்கிய தமிழ் நூல்களைத் தேர்வு செய்து கோவிலூரில் கற்பித்து வந்தார். ''கற்க வேண்டியவை அனைத்தையும் தாய் மொழியிலேயே கற்கவேண்டும்' எனவும், 'கற்க விரும்புபவனுக்கு,

ஏழ்மை, சாதி வேறுபாடுகள் தடையாகாது' என்பதையும் வற்புறுத்தும் இக்காலத்தவருக்கு முன்னோடியாகத் திகழ்ந்து, இதற்காகவே தம் வாழ்நாள் முழுவதையும் அர்ப்பணித்தவர் முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகள் ஆவார்.

இத்திருமடத்தில் கடந்த 180 ஆண்டுகளாகக் கற்பிக்கப்பட்டுவருவது 16 வேதாந்த நூல்கள் ஆகும். இந் நூல்களெல்லாம் மொழிபெயர்ப்பாக அமையாது, தமிழ்ச் செய்யுட்களாக இயற்றப்பட்டதால், இவை மூலத்திற்கு இணையெனப் போற்றப் படுகின்றன. ஆனால் அக்கால வழக்கிற்கேற்ப மணிப்பிரவாள நடையில் அமைந்துள்ளன. உண்மைப் பொருளான பிரம்மத்தைப் பற்றி நூல்கள் மூலமாகப் படித்தறிந்து கொள்வதற்கும் மேலாக, பிரம்மத்தையே உணர்வதற்குப் பயன்படுமாறு இந்நூல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

இங்கு கற்பிக்கப்படும் தமிழ்வழி வேதாந்தப் பாடத்திட்டம் கல்லூரிப் படிப்பிற்கு இணையானது. 'கோவிலூர் மரபு' எனப் பெயர்பெற்றது. வேதாந்தம் மிகுதியாகக் கற்பிக்கப்படும் வடமாநிலங்களிலேயே, இப்பாடத்திட்டம் மற்றும் மரபுதனை அங்குள்ள முறைக்கு ஒப்பாகக் கருதப்பட்டு, 'கோவிலூர் மண்டலி' எனப் பெருமைப் படுத்தப்பட்டுள்ளது.

தற்கால மாணவர்களுக்கு எளிதில் புரியும்படி அமைய வேண்டும் எனும் பேரவாவினால், இந் நூல்களின் மூலம் பதம் பிரித்தும் மற்றும் பதவுரைகளின் மணிப்பிரவாள நடையை மாற்றி தமிழில் எளிய உரையாகச் செய்தும் மறுபதிப்புச் செய்யப்பட்டுள்ளன.

இந்நூல்களைத் துறவியர் மட்டுமின்றி, குடும்பத்தவரும் கற்கலாம். இலவச உணவு, உடை, இருப்பிடத்துடன், உலகியல் கவலைகளற்ற சூழலில் இந் நூல்களைக்கற்றுப் பயனடைய விரும்புவோர் வரவேற்கப்படுகிறார்கள்.

மேலும் இந்நூல்கள் நாம் மடாதிபதியாகி 10ஆம் ஆண்டு விழா கொண்டாடப்படும் சமயத்தில் வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறோம். இதை நமது திருமடத்தை நிறுவிய ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞான தேசிக சுவாமிகளின் திருப்பாதக் கமலங்களில் சமர்ப்பித்து அவரது பேரருளை நம் அனைவருக்கும் அருளப் பிரார்த்திக்கிறோம்.

ஓம் தத் சத்

ஸ்ரீ சற்குருநாதன் துணை

உ

சிவமயம்

## அணிந்துரை

அயன் படைப்பாம் இவ்வுலகில் ஏழு வகைப் பிறப்புச் சீவர்கள் உள்ளனர். இவர்களுள் மனித சரீரம் படைத்த சீவர்களே மேலோர் ஆவார்கள்.

மனித சரீரத்தில் தான் இகலோக பரலோக அறிவு உள்ளது. இந்த அறிவினால், இறைவனால் செய்யப்பட்ட சுருதி(வேத)ப் பிராமாணம் உண்டாகிறது. இப்படிப் பல பிறவிகள் அடைந்தும், சுவர்க்காதிப் பதவிகளும் இவ்வுலகில் போக பாக்கியம் பெற்றும் மனித சீவனுக்குத் திருப்தி உண்டாகவில்லை. அவன் இலட்சியமான மாறாத பெரிய, துக்க கலப்பில்லாத பேரின்பம் கிடைக்கவில்லையே என்று ஏமாற்றம் கொள்கிறான். சுருதியை ஆராய்கிறான். அதில் கர்மம், பக்தி, ஞானம் என்னும் மூன்று பிரிவுகளில் தத்துவ ஞானமே சர்வதுர்க்க நிவர்த்திப் பரமானந்தப் பிராப்தி ரூப முத்தியைக் கொடுக்குமே அல்லாது, வேறு எதுவும் கொடுக்காது என்று தெரிந்து கொள்கிறான். அப்படித் தெரிந்து விவேகம் உடையவர்கள் சற்குருவைத் தேடிச் செல்கின்றனர். இவர்களைத்தான் ஜிஞ்ஞாசு (ஞான விருப்பம் உடையவன்) முமூட்சு (மோட்ச இச்சையுடையவன்) என்று சாத்திரங்களில் சொல்லப்பட்டுள்ளது. இத்தகைய முமூட்சுகளைத்தான் காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் வருக! வருக! என வரவேற்கிறது.

காரைக்குடி கோவிலூர் வேதாந்த மடம் சுமார் 180 ஆண்டுகளுக்கு முன் ஸ்ரீ ல ஸ்ரீ முத்திராமலிங்க ஞானதேசிக சுவாமிகளால் திருநெல்லை அம்மையின் பேரருள் கொண்டு ஆரம்பிக்கப்பட்டது. இம்மடத்தில் தமிழ் வழி வேதாந்த பாடங்கள் நடத்தப்படுகின்றன. அந்தச் சாத்திரங்களின் வரிசை வருமாறு:-

1. நாநா சீவ வாதக் கட்டளை
2. கீதாசாரத் தாலாட்டு
3. சசிவன்ன போதம்
4. மகாராஜா துறவு
5. வைராக்கிய சதகம்
6. வைராக்கிய தீபம்
7. இலட்சணா விருத்தி
8. வேதாந்த சூடாமணி
9. கைவல்லிய நவநீதம்
10. விவேக சூடாமணி
11. அஞ்ஞவதைப் பரணி
12. பஞ்ச தசி
13. ஈசுவர கீதை
14. பிரம்ம கீதை
15. பகவத் கீதை
16. ஞான வாசிட்டம்.

மேற்படி நூல்களுக்கு ஆதாரமாக முதலில் படிக்கவேண்டிய நூல்கள், குட்டித்திருவாசகம், சீடாச் சாரம், கோவிலூர் குசுமாஞ்சலி, பட்டினத்தார் பாடல்கள் ஆகும். இக்கிரம நூல்களைக் குருமுகமாகக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்ற முறையில் முமூட்சுகளின் வாழ்க்கை அமையும்.

இந்நூல்களைக் கற்க வரும் முமூட்சுகளுக்கு விவேகம், வைராக்கியம், சமாதி சட்க சம்பத்தி, முமூட்சுத்துவம் ஆகிய நான்கு சாதனங்கள் வேண்டும். இவைகளே தகுதியாகும். ஆனால் மேற்படி சாதனங்களை முழுதும் பெற்றிருக்கவில்லை என்றாலும் எட்டில் ஒரு பாகம், அதாவது 1/8 பாகமாவது, பெற்றிருந்தால் கூட அவரை பரிசீலனை செய்து சேர்த்துக்கொண்டு முழுமை பெறச் செய்வர். மற்றபடி கல்வி, வயது, திருமணம் ஆனவரா அல்லது ஆகாதவரா என்ற தகுதிகளைக் கொள்வதில்லை. இன்னும் இந்து மதத்தின் உட்பிரிவுகளான சைவம் முதலிய சமய, ஜாதி, இனம் இவைகளையும் தகுதிகளாகக் கொள்வதில்லை. மேற்படி சாதனங்கள் பெற்றவர்கள், இல்லறத்திலும் உள்ளனர். அவர்களும் இங்கு பாடங்களைக் கேட்டு ஞானம் பெற்றிருக்கின்றனர். இனியும் பெறலாம்.

நமது சந்நிதானம் அவர்கள் மேற்படி நமது கோவிலூர் சம்பிரதாய நூல்களை அச்சிட்டு வெளியிட்டுள்ளார்கள். அதாவது, இப்போது முதல் ஆறு நூல்கள் மட்டும் இரண்டு பாகங்களாக வெளிவருகின்றன. பிறகு மற்ற நூல்களும் வெளிவரத் தீவிரமான ஏற்பாடுகளைச் செய்துள்ளார்கள்.

இந்த நூல்களில் நாநாசீவவாதக் கட்டளைக்கு விளக்கமான முன்னுரை எழுதப்பட்டுள்ளது. அப்படியே மற்ற ஐந்து நூல்களுக்கும் அமைக்கப்பட்டுள்ளது. இதில் முதல் நூல் நமது அத்வைதக் கொள்கைக்கு ஆதாரமானது. அதனை மனனம் செய்வது நல்லது. இல்லையேல் தினசரி பாராயணம் செய்வது போல தொடர்ந்து படித்து வரலாம். அவ்வாறு செய்தால் மேல் சாத்திரங்கள் படிக்கும் போது விளக்கம் பெறப் பெரிதும் உதவும்.

முதல் மூன்று நூல்கள் பிரம்ம ஞானத்தைச் சுருங்கச் சொல்லி விளங்க வைப்பவைகளாகும். நான்காவது, ஐந்தாவது, ஆறாவது ஆகிய நூல்கள் வைராக்கியத்தை திடப்படுத்தப் பெரிதும் உதவும் அற்புத நூல்கள் ஆகும்.

ஆக இந்த ஆறு நூல்களும் மூலமும் பொழிப்புரையுமாக அமைக்கப்பட்டுள்ளன. இதைப் படிப்பவர்கள் வேதாந்தக் கருத்துக்களை நன்கு அறிய முடியும். இப்படிப் பட்ட நூல்களை வெளிவர உதவுமாறு, அமரர் கல்கியின் மகளான திருமதி ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கு நமது சந்நிதானம் அவர்கள் அருளாணை பிறப்பித்தார்கள். அதற்கு அவ்வம்மையார் தமக்கு உதவியாக யாரை அனுப்புவீர்கள் என வினவ, தமது சீடரும் குமாரபாளையம் ஆனந்த ஆஸ்ரமத்தில் கோவிலூர் வேதாந்த மடம் சம்பிரதாயப்

பாடங்களைக் கிரமமாக மனனம் செய்து பாடம் கேட்டவருமான திரு. குருநாதன் அவர்களை அனுப்புவோமெனக் கூறி அனுப்பினார்கள். ஆக மேற்படி இருவர் முயற்சியினால் மேற்படி ஆறு நூல்கள் வெளிவந்துள்ளன.

நமது 12–வது பட்டம் மகா சந்நிதானம், திருப்பெருந்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகளின் பத்தாண்டுகள் அருளாட்சியில் கோவிலூர் வேதாந்த மடம் கர்மம், பக்தி, ஞானம் என்று சொல்லப்படும் நமது வேதாந்தத்தின் மூன்று பிரிவுகளில் சீரும் சிறப்புமாக வளர்ச்சி அடைந்துள்ளது.

*அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்*
*அற்குப ஆங்கே செயல்,*

என்ற திருக்குறளின்படி நிலையில்லாத தமது செல்வத்தை எல்லாம் நிலையான தரும காரியங்களைச் செய்வதற்கே சுவாமிகள் செலவிட்டுக்கொண்டிருக்கிறார்கள். இம்மனப்பரிபாகம் பெரிதும் பாராட்டுக்குரியதாகும். இந்த அணிந்துரையில் நமது சந்நிதானம் அவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும். பாராட்டுவதற்குச் சொற்கள் கிடைக்கவில்லை என்பது மிகையாகாது.

நமது மகா சந்நிதானம் அவர்கள் இன்னும் பல்லாண்டுகள் வாழவும், திடகாத்திரமாக இருக்கவும் எல்லாம் வல்ல மாயா விஷிட்ட காரணப் பிரம்மம் பேரருள் புரிவதாகுக.

திருமதி. ஆனந்தி ராமச்சந்திரன் அம்மையாருக்கும், திரு. குருநாதன் அவர்களுக்கும், குமாரபாளையம் ஆனந்தாஸ்ரம முமூட்சுக்கள் சார்பாகப் பெரிதும் பாராட்டுதல்களைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

நமது மகா சந்நிதானம் அவர்கள் வாழ்க! வளம் பெறுக!

கோவிலூர் வேதாந்த மடம் வாழ்க! வளம் வளர்க!

மேற்படி மடத்துச் சம்பந்தப்பட்ட அனைவரும் வாழ்க! வளம்பெறுக!

இப்படி ஒரு அணிந்துரை எழுத வாய்ப்புக் கொடுத்த மகா சந்நிதானம் அவர்களுக்கும் திருவருளுக்கும், குருவருளுக்கும் நன்றி! வணக்கம்! வாழ்த்து!

சுபம்

வேணும் ஸ்ரீ சற்குருநாதன் துணை

தவத்திரு. சோம. சச்சிதானந்த சுவாமி,
அத்வைத ஆசிரியர்,
குமாரபாளையம்.

## கோவிலூர் மரபில் பாடத்திட்டமாக உள்ள 16 வேதாந்த நூல்கள்

1. **நாநாசிவ வாதக் கட்டளை**
(சேஷாத்திரி சிவனார் இயற்றியது)

2. **கீதாசாரத் தாலாட்டு**
(திருவேங்கட நாதர் இயற்றியது)

3. **சசிவன்ன போதம்**
(எறும்பூர் தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

4. **மகாராஜத் துறவு**
(விருத்தாசலம் குமார தேவர் இயற்றியது)

5. **வைராக்கிய சதகம்**
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

6. **வைராக்கிய தீபம்**
(பேரூர் சாந்தலிங்க சுவாமிகள் இயற்றியது)

7. **இலட்சணா விருத்தி**
(கருணாநிதி என்னும் சிதம்பர ஞான தேசிகர் இயற்றியது)

8. **வேதாந்த சூடாமணி**
(துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் இயற்றியது)

9. **கைவல்ய நவநீதம்**
(நன்னிலம் தாண்டவராய சுவாமிகள் இயற்றியது)

10. **விவேக சூடாமணி**
(திருவிடைமருதூர் உலகநாத சுவாமிகள், இயற்றியது)

11. **அஞ்ஞவதைப் பரணி**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

12. **பஞ்ச தசி**
(நித்தியானந்த சுவாமிகள் வீர. சுப்பையா சுவாமிகள் இயற்றியது)

13. **ஈசுவர கீதை**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

14. **பிரம்ம கீதை**
(எறும்பூர், தத்துவராய சுவாமிகள் இயற்றியது)

15. **பகவத் கீதை**
(பாட்டனார் இயற்றியது)

16. **ஞான வாசிட்டம்**
(வீரை. ஆளவந்தார் இயற்றியது)

# பொருளடக்கம்

## இரண்டாம் பாகம்

# முகவுரை

இந்த நூலின் ஆசிரியர் குமாரதேவர். இவர் கன்னட தேச அரசராயிருந்தார். வீர சைவ நெறியினர். நல்விவேகம் தோன்றப்பெற்று, அனைத்தையும் விட்டு, ஞானாசிரியரைத் தேடிப் பல இடங்களுக்கும் சென்றார். அப்போது, திருப்பேரூரிலிருந்த சாந்தலிங்க சுவாமிகளின் கீர்த்தியைக் கேள்விப்பட்டு, அவரைத் தரிசிக்க விரும்பிச் சென்று வணங்கினார். 'இவரே நம்மை உய்விக்க வந்த இறைவன்' எனக் கருதித் தம்மையும் அடிமை கொள்ளுமாறு விண்ணப்பித்தார்.

குமார தேவரின் பக்குவம் உணர்ந்த சாந்தலிங்க சுவாமிகள், அவரைப் புல் அறுக்கும் தொண்டினைச் செய்யப் பணித்தார். அரசரான குமாரதேவர் அத்தகைய வேலை செய்ததில்லையாயினும், குருவின் ஆணையைப் பாக்கியமெனக் கருதிச் செய்யத் தொடங்கினார். குருவிடம் பய பக்தியுடனும் மௌனத்துடனும் இருந்தார். குருவானவர் கருணை கூர்ந்து, குமாரதேவரைத் தம் அடியார் கூட்டத்துடன் சேர்த்துக்கொண்டார். சில நாட்களில், பாலனின் பசி கண்ட தாய் போல, குமாரதேவருக்குத் தீட்சையும் ஞான உபதேசமும் செய்வித்தார். அது முதல், குமாரதேவரும் தெளிந்து, சமாதி கூடியிருப்பதை அறிந்த குருவானவர், 'அன்ப' நீ விரும்பிய புண்ணியத் தலம் சேர்ந்து இருப்பாயாக' என உரைத்தருளினார்.

குமாரதேவர் விருத்தாச்சலம் சேர்ந்து, அங்கு ஓர் அரசமரத்தடியில் இருந்தபோது, உலக மாதாவான பெரியநாயகி அம்மை, ஒரு சிறுமியாக அவர்முன் தோன்றி, ஆலயத்திலிருந்து கொண்டுவந்த பாலை அருந்தக் கொடுத்து, ''நீ இத்தலத்தே வைகுவாய்' எனக்கூறி மறைந்தாள். சுவாமிகளும், இச் சிறுமி பெரிய நாயகி அம்மையே என உணர்ந்து, அங்கேயே தங்கித் தேவியைத் துதித்துக் கொண்டிருந்தார். அச்சமயம், அரச மரத்திலிருந்த பிசாசின் சாபத்தை நிவர்த்தி செய்தல், அவ்வூர்ப் பத்திரகாளியை வசம் செய்ய வந்த மந்திரவாதியை விரட்டுதல், போன்ற திருவிளையாடல்களையும் செய்தார்.

குமாரதேவரின் பெருமையறிந்த சிதம்பர கவிராஜர் எனும் ஆசிரியர் அவருக்கு அடிமையானார். குமார தேவரும், தம் குருவான சாந்தலிங்க சுவாமிகளைத் தரிசிக்க வேண்டித் திருப்பேரூர் சென்ற போது, சிதம்பர கவிராஜரையும் உடன் அழைத்துச்சென்றார். இருவரும் சாந்தலிங்க சுவாமிகளை வணங்கிய போது, சிதம்பர

கவிராஜரைத் தம் குருவின் அருள் நோக்கிற்குப் பாத்திரமாக்க விரும்பிய குமாரதேவர், 'இவர் தங்களுடன் இருக்கலாமே' என சாந்தலிங்க சுவாமிகளிடம் விண்ணப்பித்தார். சாந்தலிங்க சுவாமிகளும், "நமக்குச் சந்ததிகள் உள்ளதால், இவனை நீயே அழைத்துச் சென்று, உனக்கு யாம் உரைத்ததை உபதேசிப்பாயாக' என அருளினார். குமாரதேவரும், சிதம்பர கவிராஜருடன் விருத்தாச்சலம் திரும்பி, அவருக்கு உபதேசம் செய்து அருளினார். சிதம்பர கவிராஜர், பிற்காலத்து, சிதம்பர சுவாமிகளாக அறியப்பட்டார்.

பெரிய நாயகி அம்மையின் அருளால், குமார தேவர் பதினாறு சாத்திரங்களையும், பெரிய நாயகி அம்மன் பதிகத்தையும் செய்து முடித்தார்.

குமாரதேவரது நூல்களுள் முதன்மையானது மகாராஜா துறவு ஆகும். இந்நூல் துறவறத்தை வற்புறுத்திக் கூறி, சீவாத்ம பரமாத்ம ஐக்கியத்தைத் தெளிவிப்பது. வேதாந்த சாஸ்திரங்களின் கருத்துக்களை எல்லாம் திரட்டிக் கூறி அத்வைத உண்மையை நன்கு விளக்குவது.

இந்நூல் கோவிலூர்த் திருமடத்தில் ஆரம்பம் முதல் பாட நூலாக அச்சிடப்பட்டு வந்துள்ளது. இந்நூல் வெளிவர முதல் காரணமாக இருந்த விருத்தாச்சலத்திலுள்ள திருமுதுகுன்றம் குமாரதேவர் திருமடத்திற்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

உ

சிவமயம்

ஸ்ரீ குமாரதேவர் அருளிச் செய்த

# மகாராஜா துறவு

## கடவுள் வாழ்த்து

### கணபதி முதலிய ஐவர் துதி

அமரர்கள் பரவும் திருமுது குன்றில்
ஆழத்துப் பிள்ளையைச் சிகரிக்
குமரசற் குருவை இமகிரி ராஜ
குமரியாம் பெரியநா யகியை
மும்மலமும் ஒருங்கே அகற்றிடும் முக்கண்
முதல்வனைச் சாந்தநா யகனை
நமதுஎணப் படியே முடிந்திடத் தினமும்
நாடிநின்று இறைஞ்சிவாழ்த் திடுவாம்.

நம் எண்ணப்படி இந்நூல் இனிதே முடியும் பொருட்டு, தேவர்கள் வந்து வணங்கும் அழகிய திருமுது குன்றில் எழுந்தருளி உள்ள ஆழத்துப் பிள்ளையாரையும், அப்பதியின் கோபுரத்தின் அருகில் எழுந்தருளியுள்ள குமாரக் கடவுளாகிய சற் குருவையும், மேருமலை அரசனின் புதல்வியாகிய பெரிய நாயகியையும், ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களையும் ஒருங்கே நீக்கி அருளும் மூன்று கண்களை உடைய பழமலை நாதரையும் சாந்தலிங்க சுவாமிகளையும் நாடி வணங்கி நாம் வாழ்த்துவோம்.

## மூன்று குருமூர்த்திகள் வணக்கம்

மறைமுடிவு அதனில் விளங்கிடும் ஒளியே
மனிதரைப் போலவந்து எனது
சிறைதவிர்த்து ஆண்ட சிவப்பிர காச
தேசிகன் தன்னைமற்று அவன்தன்
நறைமலர் அடியைப் போற்றிடும் சாந்த
நாயகன் தன்னைமற்று அவன்தன்
நிறையருள் பெற்ற பழனிமா முனியை
நெஞ்சினுள் இருத்தியே பணிவாம்.

வேத முடிவில் விளங்கும் ஒளிமயமான கடவுளே, மானிடர் போன்ற வடிவுடன் வந்து தோன்றி என் பாச பந்தத்தை நீக்கி என்னை ஆட்கொண்டு அருளிய சிவப்பிரகாசன் என்னும் குருவையும் அவருடைய மணம் பொருந்திய தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்கும் சாந்த நாயகன் என்ற சாந்தலிங்க சுவாமியையும், பின்னர் அவனுடைய பேரருள் பெற்ற பழனி மாமுனி என்னும் பழனி சுவாமியையும் மனத்தில் நிலைத்து இருக்கச் செய்து பணிவோம்.

## ஆழத்துப் பிள்ளையார் துதி

தொய்யின் முலைக்கோடு இரண்டுகவான்
துதிக்கை மூன்றுவிழி துரிசுஇல்
துய்ய சைவ முதல்மதமும்
துலங்க வரும்ஒண் பிடிஉலகம்
உய்ய உதவும் ஒருகளிற்றை
உலவா விருத்த சைலத்தில்
வையம் பரவும் ஆழத்து
வாழ்ஐங் கரனை மனம்நினைவாம்.

சந்தனக் குழம்பு கொண்ட கோலம் எழுதப் பெற்ற இரு தனங்களும், தந்தங்களும், இரு துடைகளும், இரு கைகளும் துதிக்கை ஆகவும், மூன்று கண்களும், குற்றம் இல்லாத சைவம் என்னும் முதன்மை கொண்ட மதமும் ஒளிர வருகின்ற உமை என்ற பெண்யானை பெற்று எடுத்த ஒப்பற்ற யானை முகம் கொண்ட விநாயகப் பெருமானை, அழியாத

விருத்தாசலம் என்னும் கோவிலில் உலகம் போற்ற ஆழத்திலே வாழ்கின்ற ஐந்து கரத்தானை மனத்தால் சிந்திப்போம்.

## விருத்தாம்பிகை துதி

இருள்கலி வலியின் ஞானநல் நெறிகள்
இறந்துஉயிர் கொடுநெறி மேவி
மருள்கொடு கலங்கா வகைகலி என்றும்
வந்துஅணு காப்பதி தன்னில்
தெருள்சத்தி கருணை உருவதாய் நின்று
தெளிவிக்கும் இறைவி எம்குருஓர்
அருள்கடல் பெரிய நாயகி உலகக்கு
அனைமுதல் வியைப்பணிந் திடுவாம்.

அஞ்ஞான மயக்கம் பொருந்திய கலிகாலத்தின் வலிமையினாலே, நன்மை தரும் ஞான நெறிகள் அழிந்து, ஆன்மாக்கள் தீய வழிகளில் சென்று மயக்கம் கொண்டு கலங்காதபடி கேடு எக்காலத்திலும் வந்து சேராத பதியான விருத்தாசலத்தில், ஞான சத்தியாகவும், கருணை வடிவு ஆகவும் நிலை பெற்று உயிர்களின் மயக்கம் தெளியச் செய்யும் இறைவியும், எம்முடைய ஞானாசிரியரால் அறியப் பட்ட கருணைக் கடலும், உலகிற்கு அன்னையும், முதல்வியும் ஆன பெரிய நாயகியை வணங்குவோம்.

## சபாநாயகர் துதி

திங்கள்ஆர் சடையில் கங்கைநீர் துளிப்பத்
திருந்துஇழை உமைஉளம் களிப்பப்
பொங்குஅரா வொடுநல் புலிமுனிவர் கள்மால்
போதுஅயன் அமரர்கள் போற்றத்
துங்கநான் மறைகள் துதித்திட ஐந்து
தொழில்விரிந் திடபொது அதனில்
செங்கழல் அதிர நடம்செயும் பொருளைத்
தினம்பணிந்து இடர்ஒழிந் திடுவாம்.

நிலவு பொருந்திய சடையில் கங்கை நீர் ததும்பித் துளிக்க, அழகுடன் செய்த அணிகளை அணிந்த உமாதேவி மனம் மகிழ, பாம்பின் உடல் படைத்த பதஞ்சலியோடு புலிக்கால் முனிவராம் வியாக்கிர பாதரும் பிற முனிவர்களும், திருமாலும், தாமரையில் தோன்றிய நான்முகனும், தேவர்களும் போற்றி வணங்க உயர்ந்த நான்கு வேதங்களும் பாடிப் பரவ, ஐந்தொழில் எங்கும் பரவிட, சிவந்த பாதங்கள் ஒலி செய்ய, பொன்னம்பலத்தில் நடனம் செய்கின்ற மெய்ப்பொருள் ஆகிய சபாபதியை நாள்தோறும் வணங்கித் துயர் நீங்குவோம்.

## சிவகாமி அம்மை துதி

அருள்உருவாய் உயிர்கள்தமக்கு அன்னை ஆகி
அஞ்ஞானம் தனைஅகற்றி அமலம் ஆகி
மருள்இலதாய் மெய்ஞ்ஞானம் ஆகும் முத்தி
வாய்த்திடவே காத்துஅருளி வானோர் ஏத்த
இருள்கெடவே மிளிரும்இரும் கழல்கள் ஆர்ப்ப
இறைபுரியும் திருநடத்தால் களித்து வாழும்
தெருள்மருவு மறைநான்கும் பரவும் தில்லைச்
சிவகாம சுந்தரியைச் சிந்தை செய்வாம்.

கருணை வடிவாகி, உலக உயிர்களுக்கு எல்லாம் தாயாகி, அஞ்ஞானத்தை அகற்றி, தூய்மையே வடிவாகி, மயக்கம் இல்லாத காட்சியாகி, மெய்ஞ்ஞானம் ஆகிய பேரின்ப வீடு கிடைத்திட அடியவர்களைக் காத்து, அவர்களுக்கு அருள் செய்யும் அன்னை, தேவர்கள் துதிக்கவும், அஞ்ஞான இருள் நீங்கவும் ஒளிவிடும் பெரிய வீரக்கழல்கள் ஒலி செய்ய, எப்பொருட்கும் இறைவன் ஆகிய சிவபெருமான் செய்யும் அழகிய திருநடம் கண்டு களிக்கும் நாயகி, நிலைத்து வாழும் தெளிவான நான்கு வேதங்களும் துதிக்கின்ற, தில்லையில் எழுந்தருளி உள்ள சிவகாம சுந்தரியை மனத்தால் சிந்தித்து வணங்குவோம்.

## விநாயகர் துதி

செக்கர் போல்ஒளிர் முக்கண் சிலம்பினை
மிக்க பேர்அருள் வேலையை ஓர்கொம்பால்
தக்க அன்பர்க்கு உதவும் தருவினை
இக்க தைநிறை வேற இறைஞ்சுவாம்.

இக்கதை நிறைவு பெற, செவ்வானம் போல ஒளிவிடும் மூன்று கண்களை உடைய மலையினை, மிகுந்த பேரருட் கடலை, ஒற்றைக் கொம்பினால் தகுந்த உதவி செய்யும் கற்பக மரமான விநாயகக் கடவுளை வணங்குவோம்.

## சுப்பிரமணியர் துதி

கடிகமழ் கரிய கூந்தல்
    கனிமொழி துவர்வாய்த் தெய்வப்
பிடிதனக் கோட்டால் வள்ளிப்
    பெண்கொடி படரும் செய்ய
படிபுகழ் புயமாம் குன்றில்
    பாயவண் கழுநீர் நீபம்
மடல்அவிழ் செழுந்தார்ச் செவ்வேள்
    மலர்அடி வணக்கம்செய்வாம்.

வள்ளி என்ற பூங்கொடியானது படர்கின்ற, உலகில் உள்ளோர் கொண்டாடும் சிவந்த தோள்களாகிய குன்றில், மணம் கமழ்கின்ற கரிய கூந்தலையும், தீங்கனி போன்ற சொல்லையும், பவளம் போன்ற வாயையும் உடைய தெய்வப் பெண் யானையானது தனங்களாகிய தந்தங்களால் மோதிட, அதனாலே இதழ்கள் விரிந்த செங்கழு நீர், கடம்பு ஆகியவற்றால் தொடுக்கப் பட்ட மாலை அணிந்த முருகக் கடவுளின் தாமரை மலர் போன்ற பாதங்களை வணங்குவோம்.

## அடியார் துதி

வண்துழாய் அலங்கல் மாயவன் மலர்மேல்
    வதிந்தநான் முகன்மறை அறியா
தொண்டைவாய்க் கெண்டை விழிக்கழை மொழிஒண்
    துடிஇடை உமையைஓர் இடத்தில்
கொண்டகோன் அருளைப் பொருள்எனக் கருதிக்
    குலவிய சாதனம் தரித்து
மண்டிய அடியார் யாவர்மற்று அவர்தாள்
    மனத்தினும் சிரத்தினும் வைப்பாம்.

வளமான துளசி மாலை அணிந்த திருமாலும், தாமரை மலர்மேல் இருக்கின்ற நான்முகனும், வேதங்களும் தேடி அறிய முடியாதவனும், கொவ்வைக் கனிபோன்ற வாயும், சேல்மீன் போன்ற கண்ணும், கரும்பு போன்ற மொழியும், ஒளியுடன் கூடிய உடுக்கை போன்ற இடையும் உடைய உமா தேவியை இடப்பக்கம் சேர்த்து அருளிய இறைவனும் ஆகிய சிவபெருமானின் அருளே பொருள் என நினைத்து விளங்கும் சமய சாதனங்களோடு சிவச் சின்னங்களையும் தாங்கி, ஈசனிடம் அன்பு பெருகிய அடியவர்கள் எவரோ, அவருடைய பாதங்களை உள்ளத்திலும், தலையிலும் வைத்து வணங்குவோம்.

## அவையடக்கம்

சகரர்தம் வலியையும் தடம்தி ரைக்கடல்
அகலமும் பின்புஉளோர் அகழ்இ லஞ்சிதான்
புகழ்உற விளக்கலே போல இச்செயுள்
தகைதரு கலைஞர் நூல்தனை விளக்குமால்.

பெரிய அலைகள் வீசுகின்ற சமுத்திரத்தை தோண்டிய சகரர் வலிமையை, பெரிய அலைகளை உடைய கடல் விளக்குவதுபோல, பின்பு உள்ளவர் தோண்டிய குளமும் அதை அழகுற விளக்குவதைப்போல, தகுதிமிக்க கலைஞர் எழுதிய நூல்களின் பெருமையை இந்நூல் விளக்கும்.

## பாயிரம்

திங்கள்ஒண் கவிகைத் திகிரிஅம் திணிதோள்
    திகழ்கடல் தானைமா ராஜன்
அம்கண்மா நிலத்தில் துறந்துவீடு அடைந்த
    அரியஇக் காதையைத் தமிழால்
இங்குமா தவத்தோர் இசையும்என்று இசைப்ப
    இசைத்தனன் வீடுஉறக் கேட்டோர்
கொங்குஅவிழ் பொழில்சூழ் பழமலை உறையும்
    குமாரதேவு என்னும்மா முனியே.

முழுநிலவு போன்ற ஒளி பொருந்திய வெற்றிக் குடையுடன், ஆணைச் சக்கரத்தையும் அழகுடன் வலிமை பொருந்திய தோள்களையும், பரந்த கடல் போன்ற படைகளையும் கொண்ட மா மன்னன், அழகிய இவ்வுலகத்தில் தன் அரசாட்சியினை

விட்டு வீட்டுலகை அடைந்த அருமையான இக்காதையைத் தவமுனிவர்களும், தமிழ் நாட்டிற்காகத் தமிழ்ச் செய்யுள்களாலே சொல்க என்று கூற, நறுமணம் கமழ்கின்ற சோலை சூழ்ந்த பழமலை என்னும் விருத்தாசலத்தில் தங்கிய குமாரதேவர் என்ற சிறந்த முனிவர், இதனைக் கேட்டோர் வீடுபேறு அடையுமாறு கூறினார்.

## பாயிரம் கூறியவரால் இயற்றப்பட்ட வாழ்த்து

சிவன்திரு உருவாம் ஐந்து
சின்மய எழுத்தும் வாழி
நவம்தரு நீரும் வாழி
நயனநன் மணியும் வாழி
கவின்தரும் குமார தேவன்
கழல்இணை இரண்டும் வாழி
அவன்திரு அடியார் தம்மோடு
ஆருயிர் அனைத்தும் வாழி.

சிவபெருமானின் திருவடிவான ஞானத்தை நல்கும், ஐந்து எழுத்தும் வாழ்க. தூய்மை தரும் திருநீரும் வாழ்க. நல்ல உருத்திராக்கமும் வாழ்க. அழகு தரும் குமார தேவனுடைய இரண்டு திருவடிகளும் வாழ்க. அவனை வணங்கும் அடியார்களும் அனைத்து உயிர்களும் வாழ்க.

# நூல்

## இந்நூலின் முதல் வரலாறு

1. தருக்கிளர் நைமிச ஆரணி யத்தில்
தங்கிய முனிவர்கள் சூதன்
வரப்பணிந்து ஏத்திக் கதைகள்பற் பலவா
வகுத்துரைத் தனைமகா ராசன்
திருக்கதை எங்கட்கு உரைத்திலை அதுநீ
செப்புஎனச் சுருதியில் சொல்லும்
சுருக்கமில் காதை இதுஎனத் தொகுத்துத்
தோம்அறக் கேண்மின்என்று உரைக்கும்.

மரங்கள் வளர்ந்துள்ள இடம் நைமிச வனம். ஒருகாலத்தில் அங்கு தவம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் தம்முடைய தவச்சாலைக்குச் சூதமா முனிவர் வருவது கண்டு, அவரைப் போற்றிப் பணிந்து வணங்கினார்கள். "எங்களுக்கு பகவானைப் பற்றிய பலவிதமான வரலாறுகளைக் கூறினீர்கள். ஆயினும் மகாராசனுடைய உயர்ந்த கதையை எடுத்து உரைக்கவில்லை. அவற்றைக் கூறி அருள்வாயாக" என்றனர். அச்சூத முனியும், "இக்கதையானது வேதத்தில் சொல்லப்படும் விரிவான வரலாறு ஆகும். எனினும் உங்களுக்குச் சுருக்கமாகக் கூறுகின்றேன், முனிவர்களே கேட்பீராக" என்று குற்றமில்லாத முறையில் சொல்லத் தொடங்கினார்.

## கருநாட தேசத்து அரசன் சிறப்பு

2. குழைத்ததண் சினைத்தேம் மாவின்ஒண் கனித்தேன்
குலவிய பலவின் நல்பலம்தேன்
தழைத்திடு கதலிப் பழம்உகுத் திடுதேன்
தாம்திரண்டு இலஞ்சியில் ததும்பி
விழுத்தகு வயலில் பாய்தர விளையும்
மிகுகரு நாடதே சந்தான்

**இழைத்தநல் தவத்தால் உயிர்எலாம் புரந்து**
**அங்கிருந்து அரசாளும்ஓர் குரிசில்.**

நல்ல குளிர்ச்சி பொருந்திய கிளைகளை உடைய இனிய மா மரத்தினது ஒளி மிக்க பழத்தில் இருந்து வடிகின்ற தேனும், ஒளி பொருந்திய பலாப் பழத்தில் இருந்து வடிகின்ற தேனும், செழிப்பு மிக்க வாழைக் கனியில் இருந்து வடிகின்ற தேனும் சேர்ந்து பெருகிக் குளத்தில் பாய்ந்து நிறைந்து வழிந்து சிறப்பு மிக்க வயல்களிலே பாய, அதனால் பயன் மிகப் பெற்ற கருநாட நாடு செய்த தவத்தாலே ஒப்பில்லாத வேந்தன் ஒருவன் உயிர்களை எல்லாம் காத்து அரசு செய்து வந்தான்.

3. **மஞ்சுஅமர் இஞ்சிசூழ் மாபுரத்து இருந்து**
**எஞ்சல்இல் எண்திசை இறைவர் தாள்தொழத்**
**தஞ்சம்என்று அடைந்தவர் தம்மைக் காத்துஇகல்**
**வஞ்சகர்க் காய்மகா ராச மன்னனே.**

மேகங்கள் தங்கி இருக்கும் கோட்டைகள் சூழ்ந்த மாபுரம் என்ற நகரத்தில் இருந்து, எண்திசை அரசர்களும் குறைவின்றி வந்து தன் பாதங்களை வணங்கி, நீயே துணை என்று தஞ்சம் அடைந்தவர்களின் துயர் நீக்கிக் காப்பாற்றி, பகை கொண்ட வஞ்சகர்களைக் காய்ந்து ஒடுக்கும் அவன் அரசர்க்கு அரசனாவான்.

4. **தருநிழல் அரசு வைகும்**
**சதமகன் திருவின் மிக்கான்**
**உருவினில் மதனின் மிக்கான்**
**உலத்தினின் பலத்த தோளான்**
**செருவினில் அரிஏறு அன்னான்**
**தேனொடு ஞிமிறும் பாட**
**முருகுஉடைந்து ஒழுகும் தாரான்**
**மூவுலகம் அளிக்கும் வேலான்.**

கற்பக மரத்தின் நிழலில் அரசனாக வீற்று இருக்கும் இந்திரனைக் காட்டிலும் செல்வத்தில் மிக்கவன். வடிவத்தில் மன்மதனை விட மேலானவன். திரண்ட கல்லைக் காட்டிலும் வலிய தோளுடையவன். பகைவரை வெல்கின்ற போரில் ஆண் சிங்கம்

போன்றவன். வண்டுகள் பாடிட, மலர்கள் உடைந்து தேன் வடியும் மலர் மாலையை அணிந்தவன். மூவுலகங்களையும் காக்கின்ற வேலை உடையவன்.

5. **அரசர்வந்து இடுதிரை அளக்கும் முன்றிலான்**
**முரசுகள் அனுதினம் முழங்கும் மன்றலான்**
**கரைபொரு திரைஎறி கடல்அம் தானையான்**
**அருவரை மார்பினான் யாளி மொய்ம்பினான்.**

வேற்றரசர்கள் வந்து திரை அளக்கும் முற்றத்தை உடையவன். தினந்தோறும் முரசு முழங்க மங்கல காரியங்கள் நடந்துகொண்டே இருக்கும் செல்வச் செழிப்பு மிக்கவன். கரை மோதி அலை எறியும் கடல் போன்ற படைகளை உடையவன். அரிய மலை போன்ற மார்பினன். யாளி போன்ற வலிமை உடையவன்.

6. **அரசர்தம் முடிஉழுது அவிரும் தாளினான்**
**எரிதவழ் திகிரியை ஏந்தும் தோளினான்**
**மருவளர் வலியினை மாற்றும் வாளினான்**
**தருநிதிக் கொடையினான் தருக்கும் நாளினே.**

சிற்றரசர் தம் முடிகள் பணிந்து கீறிய தழும்புடன் ஒளி விடும் பாதங்களை உடையவன். நெருப்பைப் போல ஒளிவிடும் சக்கரம் தாங்கும் தோள்களை உடையவன். பகைவர் வலிமையை மாற்றும் வாட்படையை உடையவன். கற்பகத் தருப் போலவும் கொடை அளப்பவன். இவ்வாறு அவன் இருக்கின்ற நாளிலே;

7. **கவரியோடு ஆல வட்டம்**
**காரிகை யார்கள் வீசப்**
**பவளவாய் அரம்பை அன்னார்**
**பாகடை உதவ முத்தத்**
**தவளவாள் நகையார் கீதம்**
**தனிநடம் செய்ய நின்று**
**குவலய மன்னர் போற்றக்**
**குரைகடல் தானை சூழ.**

அழகிய மகளிர் கவரிகளையும், விசிறிகளையும் வீசினர். பவள வாயுடைய அரம்பை போன்ற மகளிர் பாக்கு வெற்றிலை கொடுத்தனர். வெண்ணிற முத்துக்களைப்

போன்ற ஒளி பொருந்திய பற்களை உடைய மகளிர் இசையுடன் நடனம் செய்தனர். உலகத்துச் சிற்றரசர்கள் முன்னே நின்று துதித்தனர். ஒலிக்கும் கடல் போன்ற சேனைகள் சூழ்ந்து நின்றன.

**8. இந்திரன் ஆல யம்போல்**
**இலங்கிய மண்ட பத்தில்**
**சுந்தர மிருக ராசன்**
**சுமந்தபூ அணையின் மீது**
**வந்துஇருந்து அவனி தன்னை**
**மனுநெறி முறையில் காத்தே**
**அந்தம்இல் போகம் துய்த்துஅங்கு**
**இருந்திடும் அரசர் கோமான்.**

தேவர் தலைவனாகிய இந்திரனின் அரசவை போல ஒளி விடும் அரசவையில் அழகு பொருந்திய விலங்கினங்களுக்கு எல்லாம் அதிபதியான சிங்கம் சுமந்த பூவணை மீது தினமும் இருந்து தங்கி, இவ்வுலகை மனுமுறைப்படி ஆண்டு, முடிவில்லாத இன்பங்களை அனுபவித்து அரசர்களுக்கு அரசன் அந்நகரத்தில் இருந்து வந்தான்.

## அரசன் மகப்பேறு இன்றி வருந்துதல்

**9. தூம்புடை பிறைஎ யிற்றுத்**
**துத்திஈ ராயி ரம்தோள்**
**பாம்பினால் பரிக்கல் உற்ற**
**பாரினைப் பரிக்கப் பின்னர்**
**மேம்படு புதல்வர் நம்தம்**
**வீறுடை வயிற்றில் இல்என்று**
**தேம்படு தெரியல் மார்பன்**
**சிந்தைஆ குலங்கள் உற்றான்.**

நறுமணம் கமழ்கின்ற மாலை அணிந்த மார்புடைய அவ்வேந்தன், உள்ளே துளையுடைய பிறைமதி போன்ற நச்சுப் பற்களையும், புள்ளிகள் கொண்ட படத்தையும், ஈராயிரம் தோள்களையும் கொண்ட ஆதிசேடன் என்னும் பாம்பினால் தாங்கப் படும் இவ்வுலகை, நமக்குப் பின்னர் ஆட்சிபுரிய மேம்பட்ட புதல்வன் தனக்குப் பிறக்கவில்லையே என்று மனக்கவலை கொண்டான்.

10. **கங்கையே முதலா மிக்க**
**கடவுள்மா நதியில் தோய்ந்தும்**
**பங்கயாச னன்மால் திங்கள்**
**பவளவார் சடையான் தன்னை**
**அங்கையால் பூசை செய்தும்**
**அதிதிகட்கு அளித்தும் தீயில்**
**பொங்கும்ஆ குதிகள் ஈந்தும்**
**பூவலம் வந்தும் தேவர்.**

அவ்வாறு கவலை கொண்ட மன்னவன், கங்கை முதலான புண்ணியப் பெரு நதிகளில் நீராடியும், தாமரைமேல் இருக்கும் நான்முகனையும், திருமாலையும், நிலவை முடியில் அணிந்த சிவந்த நீண்ட சடை கொண்ட சிவனையும், அழகிய கைகளால் பூசை செய்தும் பெரியோர்களுக்கு வேண்டியன தந்தும், பொங்கி எரிகின்ற வேள்வித் தீயில் பலிகளைக் கொடுத்தும், இப்பூவுலகிலுள்ள புண்ணியப் பதிகளைச் சுற்றி வந்தும், தேவர்கள் வாழ்வதற்கான;

11. **ஆலயம் சாலை அக்கி**
**ராரம்நந் தனவ னங்கள்**
**கோலம்ஆர் இலஞ்சி கூபம்**
**குளம்பல செய்தும் ஈர்எட்டு**
**ஏலும்மா தானத் தோடே**
**இரணியம் முதல்ஈர் ஐந்து**
**சாலநல் தானம் ஈந்தும்**
**தருமம்எண் நான்கு செய்தும்.**

கோவில்கள், இருமருங்கும் மரங்கள் அடர்ந்த சாலைகள், அந்தணர் இருக்கை, பூந்தோட்டங்கள், அழகு பொருந்திய குளங்கள், கிணறுகள், ஏரிகள் ஆகியவற்றை ஏற்படுத்தியும், சிறந்த பதினாறு தானங்களோடு, பொன் முதலான பத்துவகைத் தானங்களை விரும்பினவர்க்குக் கொடுத்து, முப்பத்தி இரண்டு அறங்களையும் செய்தான்.

## புதல்வர்ப்பேறு வாய்த்தமை

12. தவம்பல புரிந்தும் வேந்தன்
தனயனைப் பூத்துப் பின்னர்
பவந்தனைத் துடைத்தேன் மேலாம்
பரமநல் பதம்உண்டு என்றே
உவந்துசா தககன்மத் தோடு
ஒழிவுஅறு கருமம் எல்லாம்
நவம்தரச் செய்து நாமம்
நன்மகா ராசன் என்றே.

பலவிதமான தவங்களைச் செய்த மன்னன் அவற்றின் பயனால் புதல்வனைப் பெற்றான். அதன் பின்னர் நான் பிறவித் துயர் தீர்ந்தேன், இனி மேலான வீடுபேறும் எனக்கு உள்ளது என்று எண்ணி மகிழ்ந்து, அப்புதல்வனுக்குப் ஜாதகம் கணித்தல், பெயர் சூட்டுதல், காதணி அணிவித்தல் முதலிய பிற சடங்குகளையும் புதுமையாகச் செய்து, மகாராசன் என்ற நல்லதொரு பெயரைச் சூட்டினான்.

## கல்வி கற்பித்தல்

13. வேத நீதியில் கூறி வியன்தர
ஓத எண்எண் கலையும் உணர்த்துவித்து
ஏதம் அற்ற குரவற்கு இரணியம்
போதும் என்னப் பொழிந்தனன் கொண்டல்போல்.

வேதநெறிப்படி பெயரிட்டு வளர்த்து அவனுக்குக் கற்கின்ற பருவம் வந்ததும், பெருமையுடன் அவன் பயில விரும்பிய அறுபத்து நான்கு கலைகளையும் கற்பித்தான். புதல்வன் அதனை ஓதி உணர்ந்த பின் குற்றம் இல்லாத ஆசிரியனுக்கு அவர் போதும் போதும் என்று சொல்லும்படி பொன்னை மேகத்தைப் போலப் பொழிந்தான்.

## படைப்பயிற்சி - திருமண ஏற்பாடு

14. கொடிநெ ருங்கும் கொடிஞ்சிஅம் தேர்பரி
கடம்ம லிந்த கயம்ஒண் சிவிகைஇப்
படியில்ஊ ரப்ப யிற்றுவித்து ஆசுஇலா
வடிவுஇ லங்கு மகற்கு மணம்செய்வான்.

துகிற் கொடிகள் நிறைந்த மேல் மொட்டுடைய அழகிய தேர் மீதும், குதிரை மீதும், மதம் நிறைந்த யானை மீதும், ஒளி பொருந்திய பல்லக்கின் மீதுமாக ஏறி, அவற்றை இந்தப் பூமியில் நடத்திப் பழக்குவித்து, மாசற்ற அழகுடன் விளங்கும் புதல்வற்குத் திருமணம் செய்ய ஆசைப்பட்டான்.

## மணவோலையும், பன்னாட்டு அரசர் வருகையும்

**15.** **மடங்கல் அன்ன பலம்உள்ள மாமன்னன்**
**இடங்கொள் எண்ணெழு தேசத்து இறைவர்க்கு**
**முடங்கல் போக்கினன் கண்டு முடிமன்னர்**
**தடம்கொள் சேனைகள் சூழ்வரச் சார்ந்தனர்.**

ஆண் சிங்கம் போன்ற வலி கொண்ட அக் கருநாட நாட்டு மன்னன், என் புதல்வன் மணங்காண நீங்கள் எல்லாம் வர வேண்டும் என்று, விசாலமான இடங்கொண்ட ஐம்பத்தாறு நாட்டு அரசர்களுக்கும் திருமண ஒலை அனுப்பினான். முடி மன்னர்களும் தம் பெருமை மிக்க படைகள் சூழ்ந்து வர, மாபுரம் என்னும் அப்பதியைச் சேர்ந்தார்கள்.

## நகரத்தை அலங்கரித்தல்

**16.** **வடிகொள்வெண் சுதையால் பித்திகை தீற்றி**
**வான்உற மணிக்கொடி நிரைத்துக்**
**கடிநறும் சாந்தம் குங்குமம் தன்னால்**
**கமழ்தர மறுகுஎலாம் மெழுகிப்**
**பொடிகொள்சிந் துரத்தால் கோலமே புனைந்து**
**பூமலர் பொரிநனி சிதறிக்**
**கொடிகொள்மூது எயில்மேல் மாடம்ஒண் சிகரி**
**கோதுஅறப் புதுக்கியே குலவ.**

வடிகட்டி எடுத்த வெண் சுண்ணாம்பினால் வீடுகளின் சுவர்களைத் தீற்றி மெழுகி, வான் அளாவும்படி அழகிய ஓவியங்கள் நிறைந்த பட்டுத் துகிற் கொடிகளை வரிசையாக நாட்டி, நறுமணச் சந்தனத்தினாலும், குங்குமத்தாலும் மணம் வீசும்படி வீதிகளை எல்லாம் மெழுகிட்டு சிந்துர வண்ணப் பொடியால் கோலமிட்டு, அழகிய மலர்களையும், பொரிகளையும், மிகுதியாக இறைத்து, கொடி கொண்ட மதில்களையும் மேல் மாடங்களையும், ஒளி கொண்ட கோபுரங்களையும் நன்கு விளங்கப் புதுப்பித்தனர்.

17. கதலியும் கமுகும் நட்டுக் காவணம் அலங்க ரித்துப்
புதியதோ ரணங்கள் கட்டிப் பொற்குடம் செறித்துத் தீபம்
இதம்உற எங்கும் வைத்தே இந்திர நகரம் போல
மதுமலர்த் தாமம் நாற்றி மாபுரி அலங்க ரித்தார்.

வீதிகளின் இருபக்கத்திலும் வாழை மரங்களையும், பாக்கு மரங்களையும் ஊன்றி, பந்தல்களை அலங்காரம் செய்து, புதியதாகத் தோரணங்களை நாட்டி, பொன்னால் ஆகிய நிறை குடங்களை வைத்து விளக்குகளை எங்கும் ஏற்றி வைத்து, தேன் பொருந்திய மலர் மாலைகளைத் தொங்க விட்டு, அந்த மாபுரி என்னும் நகரை, இந்திரன் நகரமாகிய அமராவதியைப் போல அலங்கரித்தனர்.

## பெண்ணின் சிறப்பும், திருமண நிறைவும்

18. வில்இ லங்குகை வேந்தர் மரபினில்
நல்ல சாமுத் திரிகநூல் நன்கதாச்
சொல்இ லக்கணத் தோடு துரிசுஇலா
முல்லை மாலை முருகு விரியவே.

வில் தங்கி ஒளிவிடும் கை கொண்ட அரசர் மரபினில் உயர்ந்த உடல் இலக்கணம் கூறும் சாமுத்திரிகா நூலின்படி நல்ல அழகுடைய இளவரசி வந்த போது அவள் அணிந்திருந்த முல்லை மாலையின் மணமானது பரவியது.

19. மூவுலகு அதனில் உள்ள
முகிழ்முலை கருங்கண் செவ்வாய்ப்
பாவையர் எழிலில் போதன்
பகுத்துஎடுத்து உயிரோடு ஏய
ஓவியம் தீட்டி னான்என்று
உலகினில் உரைக்கச் செய்ய
பூஉறை திருவி ரும்பும்
பொற்புடன் அவத ரித்தே.

அரசிளங்குமாரியை நான்முகன் மூவுலகங்களிலும் உள்ள சிறந்த பெண்களிடமிருந்து அந்த அழகெல்லாம் ஒன்று திரட்டி அமைத்தாரோ என்று வியக்கும்படிப் படைத்திருந்தான். அரும்பு போன்ற தனங்களையும் சிவந்த வாயையும் உடைய அரசகுமாரியைக் கண்டு செந்தாமரையில் உறையும் இலக்குமியும் வியந்தாள்.

20. **இலங்கிய ஆல்ஒண் தளிர்குழைத்து இனிய**
**இருதனம் கோங்குஇணை அரும்பி**
**நலம்கிளர் ஆம்பல் குமிழ்இரு குவளை**
**நண்ணுசெம் சரோருகம் பூத்துத்**
**துலங்கிய புயலைச் சுமந்துஇரு தாளால்**
**தோம்இலா மின்என நுடங்கிப்**
**பலம்தரப் படரும் கொடியினை வேதப்**
**பண்பினின் மன்றல்செய் வித்தே.**

ஒளிபெற்று விளங்கும் ஆலின் தளிரே வயிறாகவும், கோங்கின் அரும்புகளே இருதனங்கள் ஆகவும், அழகான செவ்வல்லி மலரே இதழ் ஆகவும், குமிழம் பூவே மூக்காகவும், இரு கருங்குவளை மலர்களே கண்களாகவும், பூத்த தாமரை மலரே முகமாகவும், மேகமே கூந்தல் ஆகவும், மின்னலே இடையாகவும், பூங்கொடியைப்போல அசைந்துவரும் இளவரசியை, மறையின் முறைப்படி மகாராசனுக்கு மணம் செய்வித்தனர்.

21. **அருந்ததி கணவன் முதல்முனி வரர்கள்**
**அருமறைக் கிழவர்கள் தம்மால்**
**பொருந்திய கங்கைப் பூம்புனல் ஆட்டிப்**
**பொன்நவ மணிகளால் குயின்ற**
**விரிந்திடு மடங்கல் மெல்தவிசு ஏற்றி**
**மிளிர்நவ மணிமுடி கவித்துப்**
**பருந்துஅடர் வேலான் பௌவம்ஆர் புவியைப்**
**பரிஎனத் தோன்றல்பால் அளித்தான்.**

பருந்துகள் நெருங்கிச் சூழும் வேற்படை கொண்ட கருநாட வேந்தன், தன் மகனுக்கு, வடமீனாகிய அருந்ததியின் கணவன் ஆன வசிட்டன் முதலாக, முனிவர்களாலும் வேதம் ஓதும் அந்தணர்களாலும், புனித கங்கையால் நீராட்டி, பொன்னாலும், நவரத்தினங்களாலும் செய்யப் பட்ட அகன்ற சிம்மாசனத்தில் ஏற்றுவித்து, நவமணிகளால் செய்யப் பெற்ற முடியை அவன் தலையில் கவித்து, "கடல் சூழ்ந்த இவ்வுலகை நீ தாங்குக" என்று மகாராசனிடம் தந்தான்.

22. சோகமே இன்றி இருந்தனன் வேந்தன்
தோன்றலும் பார்பொது நீக்கி
ஏகமாய்ச் செங்கோல் எங்கணும் செல்ல
எண்திசை விசயமும் செய்தே
மாகநாடு என்னப் போகமே துய்த்து
மடந்தையோடு இருந்தனன் என்றான்
வாகைவே லவன்பின்என் செய்தான் என்ன
மறையவர்க்கு உயர்முனி வகுக்கும்.

இவ்வாறு கருநாட வேந்தன் தன் ஆட்சியைப் புதல்வனிடம் அளித்த பின் வருத்தம் இன்றி இருந்தான். பெருமையில் சிறந்த அவன் புதல்வனும், இவ்வுலகம் அனைவருக்கும் பொதுவானது என்ற கருத்தை அழித்து, தனக்கு மட்டுமே உரிமையாகச் செய்து, தன் செங்கோல் ஆட்சி எங்கணும் நடக்க எட்டுத் திசைகளிலும் சென்று வெற்றி பெற்றான். இது விண்ணவர் நாடு என்று சொல்லும் படியாக வளமாக்கினான். வெற்றிப் பெருமிதத்துடன் தன் மனைவியுடன் இன்பமாய் வாழ்ந்து இருந்தான், என்று சூதமுனிவர் கூறினார். உடனே நைமிசாரணியத்து முனிவர்கள் சூதமுனியை நோக்கி, "அதன்பின் வேற்படை உடைய அந்தக் கருநாட வேந்தன் என்ன செய்தான்?" என்று வினவ, சூதமுனியும் வேதம் கற்ற அந்த முனிவர்களை நோக்கி, மேல் நடந்தவற்றை வகைப்படுத்திக் கூறத் தொடங்கினார்.

## மகாராசனும், அவன் மனைவியும் தத்துவ ஞான விசாரணை செய்தல்

23. மனைவியும் தானும் ஓர்நினைவு ஆகி
மாறுபாடு இன்றிஓர் காலும்
தனைஉணர் யோகி தந்தைதாய் கடவுள்
தங்களை அனுதினம் இறைஞ்சி
அனையவர் உரைத்த நெறிதனில் நடந்தும்
அருத்தங்கள் மனத்தினில் தரித்தும்
வினைய மதுடனே நூல்முறை அவரை
வினவியும் சிலபகல் போக்கி.

அப்படி வாழ்ந்து வரும் போது அந்த மகாராசனும் அவன் மனைவியும் எப்போதும் மாறுபாடு இல்லாமல் ஒரே சிந்தனையுடன் தன்னை அறிந்த யோகியர், தந்தை தாய்,

கடவுள் ஆகியவர்களைத் தினந்தோறும் வணங்கி வந்தனர். அவர்கள் கூறிய நல்வழியில் நடந்தும், உறுதிப் பொருள்களை உள்ளத்தில் சிந்தித்துப் பதிய வைத்தும், அடக்கத்துடன் ஞான நூல்களை முறைப்படி யோகியர்பால் பயின்றும் கேட்டும் சில நாள் கழித்தனர்.

24. **தனியிடம் அதனில் இருந்துஇரு வர்களும்**
**தங்களில் தாம்உணர்ந்து உசாவித்**
**துனிசெய்மா மாயைப் பிறப்புஅது நீங்கிச்**
**சுகமதை அடைந்துஅனு தினமும்**
**இனிமை யதாக இருக்கலாம் ஞானத்து**
**என்றுஎணி ஞானிகள் சார்ந்து**
**நனியவர் பாத பூசனை புரிந்து**
**நாள்தொறும் வினவினர் நன்றாய்.**

அவ்விருவரும் தனியான இடத்தில் இருந்து ஞானத்தை அடைய உதவும் தத்துவங்களை ஆராய்ந்தனர். அதன்பின் தமக்குள் ஒருவரை ஒருவர் கேட்டு அறிந்து, அந்தத் தத்துவ ஞானத்தினால்தான் துயர் தரும் பெரிய மாயையின் காரணமான பிறவிப்பிணி நீங்கப் பெற்று, சுகமடைந்து எப்போதும் இன்பமாக இருக்கலாம் என்று எண்ணி, ஞானிகளை அடைந்து, அவர் திருவடி வழிபாட்டினை தினந்தோறும் செய்து அவர்களிடம் பிறவியைப்போக்க வழிகேட்டனர்.

## குருவின் அருளின்றித் தத்துவ ஞானம் உண்டாகாது என்று மகாராசன் துணிதல்

25. **இருவரில் அரசன் தனக்குஅறிவு ஓங்க**
**இருவகைச் சார்வையும் அகற்றிக்**
**கருஉடல் காவல் தனையும்கை விடுத்துக்**
**கருத்துஅசை யாதுமெய் உணர்வை**
**மருவிடில் அகப்பற்று அற்றுமேல் வீடு**
**வாய்த்திடும் அதற்குமெய்ஞ் ஞானம்**
**குருஅருள் இன்றி விளங்கிடாது எனவே**
**கொண்டனன் மனத்தினில் துணிவே.**

அவ்விருவரில் மகாராசன் நிலை இல்லாததும் நிலையானதும் ஆன பொருள்களை பகுத்தறியும் உணர்வு மேம்பட, உலகையும் அதன்கண் உண்டாகும் இன்பங்களையும்

என்னுடையன என்று கருதும் இருவகைப் பற்றுக்களையும் அகற்றிவிட்டான். கருவிலே தோன்றும் இவ்வுடம்பைக் காப்பதைக் கை விட்டு அறிவு கலங்காமல் தத்துவ ஞானத்தை அடைய வேண்டும். அப்படி அடைந்தால் உடம்பு பொறி, புலன் முதலான அந்தக் கரணங்களை யான் என்று நினைக்கின்ற அகப்பற்று நீங்கி மேலான வீட்டுலகம் கிடைக்கும். அதற்குக் காரணமாகிய தத்துவ ஞானமானது குருவருள் இன்றிக் கிடைக்காது என்று மனத்தில் துணிவு கொண்டான்.

**26.** **மனைதனில் ஆசை பொருந்தியே நின்று**
**மகிதனில் ஞானியாம் எனவே**
**தனைமிக மதிப்போன் தன்னைவந்து ஒருவன்**
**தந்திடு ஞானம்என்று இரந்து**
**வினவல்மட் டையினைப் பருகுவோன் தன்னை**
**வேண்டிச் தென்னம்பழந் தனையே**
**இனம்பணித் திரிவோன் புத்திபோலும் எனவே**
**இயம்புவர் முற்றுணர் பெரியோர்.**

உலக வாழ்க்கையில் உழன்று கொண்டே தன்னை ஞானி என்று நினைத்துக்கொண்டிருப்பவனிடம் சாதகன் ஞானோபதேசம் பெற விரும்புவது தென்னை மட்டையின் சாறு பிழிந்து குடிப்பவனிடம் தேங்காயைப் பெற ஆசைப்படுவது போலாகும் என்று ஞானிகள் கூறுவர்.

**27.** **வேத ஆகம சாத்திர புராணங்கள்**
**விளங்கவே கற்றுஉணர்ந்து அவற்றைத்**
**தீதுஅற எவர்க்கும் தெளிவுற ஓதிச்**
**செப்பிய அந்நெறி அதனில்**
**சாதகம் இலாத குருவினை ஒருவன்**
**தான்அடைந்து ஆனந்தம் வினவல்**
**ஏதம்ஆம் கழுதை தன்னைக்குங் குமத்தின்**
**இயல்புகேட் டிடுதல்போலும் என்றே.**

வேதங்களையும் ஆகமங்களையும் சாத்திர புராணங்களையும் நன்கு கற்று பிறருக்கு குற்றம் இன்றி எடுத்துச் சொல்லும் கல்வியறிவு உடையவன், அந்த நெறியில் தான் ஒழுகவில்லையானால் அவனிடம் போய் உபதேசம் கேட்பது குங்குமப் பொதியைச் சுமக்கும் அறிவற்ற கழுதையிடம் குங்குமத்தின் தன்மையைக் கேட்பதுபோல் ஆகும்.

28. **சீவர்கள் இடத்தில் அருள்சிவ பத்தி**
**திருந்திய துறவுமெய்ஞ் ஞானம்**
**ஆவதுஓர் வடிவாம் வேதமா முனியை**
**அமலஆ ரணியத்தில் அடைந்தே**
**தேவர்கள் தேவே துன்பம்ஓர் காலும்**
**சென்றிடா முத்திதான் எய்திச்**
**சாவதும் பிறப்பு நீங்கும்ஓர் நெறியைச்**
**சாற்றுஎனத் தாழ்ந்திட முனிவன்.**

உயிர்கள்பால் இரக்கம், இறைபக்தி, உலகப் பற்று நீங்கிய ஒழுக்கமான திருந்திய துறவு, மெய்ஞ்ஞானம் ஆகியவற்றின் வடிவமாகி வேதம் ஒதி உணர்ந்த முனிவரைத் தூயதான ஒரு காட்டில் கண்டு, "தேவர்களால் போற்றப்படும் முனிவரே! ஒரு காலத்திலும் துயரம் அற்ற வீடு பேற்றை அடைந்து பிறப்பு இறப்பு இல்லாத ஒரு வழியை நான் அடையுமாறு எனக்கு உபதேசித்து அருள்வீர்" என்று வணங்கினான்.

## குருவின் உபதேசம்

29. **இருவகைச் சார்வாம் புறப்பற்றை நீக்கி**
**இச்சையின் மீட்டுஅதின் நினைவும்**
**ஒருவியே உடல்கா வலையும்கை விடுத்தே**
**உள்கர ணங்கள்வா தனையும்**
**குருஅருள் நெறியே ஒடுக்கிடில் வீடும்**
**கூடும்தா னாகவே பவத்தின்**
**கருஅழிந் திடும்இந் நெறியைநீ விரைவில்**
**கைக்கொண்டு செல்என உரைத்தான்.**

முனிவரும், "அரசனே! உலகம், அதிலுள்ள இன்பம் ஆகிய இரண்டையும் என்னுடையன என எண்ணும் புறப்பற்றுக்களை நீக்கி, அவற்றின் பழக்கத்தால் உண்டான ஆசையில் இருந்து மனத்தைத் திருப்ப வேண்டும். அதன் நினைவும் இல்லாமல் நீங்கி உடல் பாதுகாப்பையும் கைவிட வேண்டும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற உள்கருவிகள் நான்கையும், அதில் உட்பகை உண்டாவதற்குக் காரணம் ஆகிய காம, குரோத, லோப, மோக, மத, மாற்சரியம் என்பவற்றின் தொடர்புகளையும், ஞானாசிரியர் உபதேசித்த வழிப்படி அடக்கினால் வீடுபேறு கிடைக்கும். அதனால் பிறப்புக்குக் காரணம் ஆகிய அஞ்ஞானம் தானாகவே அழிந்து போகும். நீ விரைவாக இந்த வழியைக் கைக் கொண்டு செல்லக் கடவாய்" என்று கூறி அருளினார்.

## மகாராசன் குருவின் உபதேச மொழிகளைத் தனியே இருந்து சிந்தித்தல்

30. அந்நெறி குருவால் ஐயமும் திரிவும்
அகன்றிடத் துணிவதாக் கேட்டு
முன்நெறி யான அரசுஇயற் கையினில்
முயன்றனன் சிறிதுநாள் ஒருநாள்
பின்நெறி அதனை நினைந்துஅனை வரையும்
பெயர்ந்திட விடைகொடுத்து அரசன்
மன்நெறிக் கோலம் அகன்றுஅந்தப் புரத்தில்
வதிந்தனன் ஒருவனாய்த் தனித்தே.

அரசனும் ஞானாசிரியர் கூறிய செய்திகளை அறிந்து அவற்றில் இருந்த ஐயங்களும் நீங்கி, ஞானவேட்கையுடனேயே செங்கோல் ஆட்சியைச் சிறிது காலம் நடத்தினான். பின் ஒரு நாள் தான் காட்டில் முனிவர்பால் பெற்ற உபதேசத்தைச் சிந்தித்தவாறு, அனைவரையும் அவையிலிருந்து செல்லப் பணித்தான். பின் தன்னுடைய அந்தப்புரம் சென்று தன் அரச கோலத்தைக் கைவிட்டுத் தனியே இருந்தான்.

## தன்னை நாடி வந்த அரசர் முதலானோர்க்கு நான் துறவை நாடிச் செல்கின்றேன், வேறு ஒருவரை அரசனாக்கிக் கொள்க என்று கூறுதல்

31. அரசர் அமைச்சர் புரோகிதர் பெரியோர்
அனைவரும் அவ்விடத்து ஏகி
அரசனை நோக்கி நித்திய கருமம்
அகன்று வாளா இருந்திடுதல்
அரசு இலக்கணம் அன்றுஎன அவர்வேண்ட
அவர்களை நோக்கியே வேந்தன்
அரசுஇ யற்கையினை வேண்டலன் என்னை
அறியவே வேண்டினன் அன்றே.

அவனைச் சார்ந்த பிற அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள், மந்திரிமார்கள், புரோகிதர், பிற பெரியோர்கள் ஆகிய அனைவரும் அரசன் இருக்கும் அந்தப்புரம் சென்றனர். பின் அரசனை நோக்கி, ‘‘தினமும் செய்யும் கடமைகளையும் செய்யவில்லை.

இவ்வாறு சும்மா இருத்தல் அரசனுக்கு உரிய இலக்கணம் ஆகாது. எனவே அரசைக் கவனிக்கவும்'' என்று வேண்டினர். வேந்தனும் அவர்களை நோக்கி ''அரசாட்சியை நான் விரும்பவில்லை. என்னையே நான் அறிந்து கொள்ள விரும்புகின்றேன்'' என்றான்.

32. **ஆண்டதுஓர் அரசு தனிலும் போகத்தும்**
**ஆசைஅற் றேன்இனி வேண்டேன்**
**மாண்டதுஓர் வனத்தில் ஒருவனாய்த் தனித்தே**
**மனத்துஅசைவு அறுத்துவீடு அடைவேன்**
**பூண்டஎன் மனம்இங்கு இனித்தி ரும்பாது**
**போகத்தைப் பொருள்என எண்ணி**
**வேண்டலன் நீங்கள் அரசனா வேறே**
**விதித்துக்கொ ளுங்கள்என்று உரைத்தான்.**

மேலும், ''நான் இதுவரை ஆண்டு வந்த ஒப்பற்ற இந்த அரசாட்சியையும் உலக இன்பத்தில் உள்ள ஆசைகளையும் நீக்கி விட்டேன். இனிமேல் அவற்றை விரும்ப மாட்டேன். மாண்புடைய கானகத்தில் ஒருவனாய்த் தனியே இருந்து, மனத்திலே உள்ள கலக்கம் நீக்கி வீடுபேற்றை அடைவேன். இத்தகைய வைராக்கியம் கொண்ட என் உள்ளம் இன்பத்தை ஒரு பொருள் என மதிக்காது. நீங்கள் வேறு ஒருவனை அரசன் ஆக்கிக் கொள்ளுங்கள்'' என்று உரைத்தான்.

## அரசாட்சியை விடலாகாது என்றனர் அமைச்சர்
## அரசனோ ஆட்சித் துன்பத்தை கூறிக் காடு செல்லுதல்

33. **ஆதியில் நினது தாதையும் நினையே**
**அரசினின் இளமையில் சூட்டத்**
**தீதுஇன்றி உனது புயவலி மையினில்**
**செகமதைத் தாங்கினை இனிமேல்**
**நீதியின் நுணிய மதியின் ஆதரவில்**
**நின்னைப்போல் ஒருவர்மற்று உளரோ**
**ஈதுஇயற் கையது அன்றுஇவ் உடலுடனே**
**இச்செல்வம் அன்றிவே றுளதோ.**

''மன்னனே! முற்காலத்தில் உனது தந்தையும் உன்னை இளமைப் பருவத்திலேயே அரசனாக முடி சூட்டினார். நீயும் உன்னுடைய தோள் வலிமையால் தீங்கு இன்றி

இவ்வுலகைப் பாதுகாத்து வந்தாய். அத்தகைய நீ காடு சென்றால் நீதி முறைப்படி ஒழுங்குடன் அறிவாலும் அன்பாலும் அரசு செலுத்த உன்னைப் போல யாரும் இருக்கின்றார்களா? நீ கருதும் இச்செயல் உலகியற்கைக்குப் பொருந்துவது அன்று, இந்த உடலுக்குரிய சுகபோகங்களையும் செல்வத்தையும் தவிர மனிதர் அடையத் தக்க பொருள் வேறு உள்ளதோ?''

**34.** அலது நீ ஏகின் அவனியும் காப்புஅற்று
அவத்திலே அலைந்திடும் யாமும்
சலனமது உறுவேம் இத்தகை எமைநீ
தவிக்கவிட்டு ஏகுதல் கடன்அன்று
இலகிட எமக்குஈது அருள்என அமைச்சர்
இயம்பிட அரசனும் பார்த்தே
உலகம்மெய் எனஎண் ணுறும்மதி உடையோர்க்கு
உரைப்பினும் உணர்வுஉதி யாதால்.

''இவை தவிர நீ காட்டிற்குச் சென்றால் இவ்வுலகம் பாதுகாப்பு இன்றி வீணாக அலையும். நாங்களும் சஞ்சலம் அடைவோம். இவ்வாறு எங்களை நீ பரிதவிக்க விட்டு விட்டு வனம் செல்லுதல் முறையன்று, நன்கு விளங்க எமக்கு அருள்வாயாக'' என்று அமைச்சர்களும் கூறினர். அது கேட்ட அரசனும் அவர்களை நோக்கி, ''இவ்வுலக வாழ்வானது உண்மை என நினைக்கின்றவர்களிடம் உலகம் நிலையற்றது என்று கூறினாலும் அதை உணரும் அறிவு உண்டாகாது'', என்றான்.

**35.** இவ்வரச இயற்கை அற்பம் மற்றுஇதனால்
எய்திடும் துன்பினுக்கு அளவின்று
அவ்வகை அதனை யூகம்இன் மையினால்
அறிகிலீர் நீங்கள்இன்பு என்றே
எவ்வகை நினைந்தீர் இனிஎக் கால்உங்கட்கு
ஈதுஇன்பம் அலதுஎனத் தோன்றும்
ஒவ்வமற்று இதனுக்கு ஊகமே தோன்றாது
உங்களுக்கு உலகயூகு உதிக்கும்.

மேலும், ''எனக்கு உரிய இவ்வாட்சி அற்பமானது. இதனால் அடையும் துன்பத்திற்கு அளவில்லை. அதனை நீங்கள் விவேகம் இல்லாமையால் அறியாமல்

இருக்கின்றீர்கள். இவ்வுலக வாழ்க்கை இன்ப மயமானது என்று எப்படி நீங்கள் எண்ணுகிறீர்கள்? இனி உங்களுக்கு இவ்வுலக வாழ்க்கை இன்பமயமானதன்று என்பது எப்பொழுது தோன்றும்? ஞான ஆராய்ச்சி இல்லாத உங்களுக்கு உலகம் இன்ப மயமானது என்ற எண்ணமே தோன்றும், நான் கூறியதை விடப் பொருத்தமான வேறு யுக்தி உங்களுக்குத் தோன்றாது".

## மகாராசன் துறவு பூணலும், மக்கள் புலம்பி அவனைத் தொடர்தலும்

36. என்று மற்று அநேகமா விரித்துஅரசன்
எடுத்துஅமைச் சர்கள்தமக்கு இயம்பி
நின்று பின்னவரை நிலும்என நிறுத்தி
நிதிதுனும் பொன்மனை விடுத்தே
சென்றுபின் நகர வீதியில் நடக்கத்
திரண்டுஅனை வர்களும்பின் தொடர்ந்து
வன்துயர் அடைந்து வாடியே மெலிந்து
வாரியின் ஓசையின் அழுதார்.

என்று மேலே கூறியபடி பலவாறு விரித்துரைத்தான் மகாராசன். அமைச்சர்களுக்கு உண்மை நிலையை எடுத்துக் கூறினான். பின் அவர்களை "நில்லும்" என்று சொல்லி, செல்வம் நிறைந்துள்ள பொன்னால் செய்யப்பட்ட அரண்மனையை விட்டு சென்றான். பின்னர் அந்நகர வீதியிலே நடந்து சென்றான். அரச கோலங்கள் எதுவும் இன்றித் தனியே நடந்து செல்லும் அரசனை நோக்கிய நகர வாசிகள் அனைவரும் திரண்டு அவன் பின்னே தொடர்ந்து சென்றனர். பெருந் துயரத்துடன் வாடிய உடலோடு அவர்கள் அழுத ஒலி கடலின் ஆரவாரம் போல் கேட்டது.

## தன்னைத் தொடர்ந்தவர்க்கு வேந்தன் சமாதானம் கூறுதல்

37. அவர்அவர் வினையின் அவர்அவர் வருவார்
அவர்அவர் வினைஅ ளவுக்கே
அவர்அவர் போகம் என்றதே ஆயின்
ஆருக்குஆர் துணையது ஆகுவர்கள்

**அவர்அவர் தேகம் உளபொழுது உடனே**
**ஆதரவு ஆர்என நாடி**
**அவர்அவர் அடைதல் நெறிகன்மத்து அடையும்**
**ஆதரவு ஆதரவு ஆமோ.**

அரசன் அந்நகர வாசிகளை நோக்கி, "என் மீது அன்புள்ள குடிமக்களே! அவரவர் செய்த வினையின் அளவுக்கு ஏற்றபடி உலகிடைப் பிறப்பார். அவரவர் வினையளவுக்கு ஏற்றபடியே சுகதுக்கங்களை அனுபவிப்பதும் நிச்சயம் என்று சாத்திரம் கூறுவது உறுதியாகும். அப்படி ஆனால் யாருக்கு யார் துணை ஆவார்கள்? இதனை நீங்கள் நன்கு ஆலோசனை செய்யுங்கள். அவரவர் உடல் உள்ள பொழுதே நமக்குத் துணையானவர் யார் என நாடி ஆராய்ந்து, உடனே அவரவர்கள் தத்தம் துணைவரைச் சேர்தல் முறையே. இப்படி முன் வினைப் பயனால் அடையும் ஆதரவு எல்லாம் உண்மையான ஆதரவு ஆகுமோ?" (ஆகாது என்பது கருத்து)

**38.** **வினைஉள அளவும் கூடியே நிற்கும்**
**வினைஅகன் றிடில்பிரிந் திடுமால்**
**வினையி னால்வரும் ஆதரவினின் இயற்கை**
**மெய்யுணர்வு அத்தகை அலவே**
**வினைஇலை உங்கள் இடத்தில்நான் இருக்க**
**மெய்உணர்வு ஒன்றையே நாடி**
**வினைஅறு கானம் புகுதவே வேண்டி**
**விரும்பினேன் நீர்நிலும் இங்ஙன்.**

"அந்த ஆதரவும் வினை இருக்கும் வரை சேர்ந்து நிற்கும். அந்த வினையும் தன் காலம் தீர்ந்து விட்டால் அகன்று விடும். இப்படிக் கூடிப் பிரிவது வினைப்பயனின் செயல். மெய்ஞ்ஞான உணர்ச்சி அத்தன்மை உடையதன்று, எப்பொழுதும் நிலையான ஆதரவைத் தரும். இப்பொழுது என் வினை தீர்ந்து விட்டமையால் உங்கள் அரசனாக உங்களுடன் சேர்ந்திருக்கும் நிலை இனி இல்லை. தத்துவ ஞான உணர்வு ஒன்றை மட்டுமே நாடித் தவம் செய்து வினைகளைப் போக்கிக் கொள்ள காட்டிற்குச் செல்ல விரும்புகிறேன். நீங்கள் இவ்விடமே நில்லுங்கள்."

## சுற்றத்தார் மகாராசனைத் தடுத்தல்

39. என்றுநல் வேந்தன் ஏதிலார் போல
ஏகினன் அனைவரும் கண்ணீர்
நின்றுஎதிர் சொரிய வாய்விட்டே அலறி
நின்றனர் தமர்கள்பின் ஏகி
இன்றுஎமை யாவர் காத்துஅளித் திடுவர்
இனியைநீ ஏகுதல் நீதி
அன்றுஎன உரைத்தார் அவர்களை நோக்கி
அரசன்ஈது உரைத்தனன் அன்றே.

இவ்வாறு நல்லன சொன்னான் அரசன். பின் அயலார் போலச் சென்றான். இதைக் கண்ட அனைவரும் அரசன் எதிர் நின்று, கண்கள் நீர் சொரிய வாய் விட்டு அழுது பின் தொடர்ந்து செல்லாமல் நின்று விட்டனர். பின் மன்னவனின் சுற்றத்தார் அவனை நெருங்கி, "நீ காடு சென்று விட்டால் எம்மைக் காத்து அளிப்பவர் யார்? இனியவனாகிய நீ எங்களை விட்டுச் செல்லுதல் தகுதி அன்று" எனக் கூறினர். அது கேட்ட அரசன் அச்சுற்றத்தாரை நோக்கிப் பின் வருமாறு கூறினான்.

## தன்னைத் தடுத்தோர்க்கு அரசன் சமாதானம் கூறல்

40. உறவுஆகும் எனஎனைநீர் தொடர்வதுஇயல்பு
அன்று ஆகும் உயிர்கட்கு எல்லாம்
உறவுஆகும் ஞானம்நனி பகைஆகும்
அஞ்ஞானம் உய்த்து நோக்கின்
உறவுஆன அதைஅடைந்து பகைஆன
இதைநீங்கி ஒருமை ஆக
உறவுஆதல் தனக்குத்தா னேஎனமற்று
உறவுவிடுத்து உறையும் என்றான்.

"நீங்கள் என்னை உறவினன் எனக் கருதித் தொடர்ந்து வருவது தகுதி அன்று. ஆராய்ந்து பார்க்கும்போது உலகில் தோன்றுகின்ற உயிர்களுக்கு எல்லாம் ஆத்ம ஞானம் ஒன்றே உறவாகும். அறிவின்மை என்னும் அஞ்ஞானமே மிகுந்த பகையாகும். எனவே நமக்கு உண்மையான உறவாக இருக்கின்ற மெய்ஞ்ஞானத்தை அடைந்து அஞ்ஞானத்திலிருந்து விடுபடுங்கள். ஏகாக்கிர சிந்தையுடன் தன்னை உணர்வதே நிரந்தரமான உறவு என்பதை உணருங்கள்," என்றான்.

## தாய் தந்தையர் மகாராசனைத் தடுத்தல்

**41.** **தந்தைதாய் இருவரும்தம் புதல்வன்என்னும்**
**வாஞ்சையினால் தாம்பின் ஏகி**
**மைந்தவா எங்கள்இரு வரையும்எவர்**
**காப்பதற்கு வைத்தாய் நீதான்**
**சிந்தைதான் உனக்குஎங்கே மகனேஉன்**
**திருமுகத்தைத் திரும்பிக் காட்டாய்**
**நொந்துதான் பெற்றவயிறு எரிகின்றது**
**எனஉரைக்க நோக்கி மன்னன்.**

பின்னர் அரசனின் தாய் தந்தையர் இருவரும் மகனின் துறவைக் கேட்டு மனம் பதைபதைத்துத் தம் புதல்வனாகிய வேந்தன் மேலுள்ள பாசத்தினால் அவன் பிரிவைப் பொறுக்க இயலாது, அவனைத் தொடர்ந்து சென்று "மைந்தனே இங்கே வா, வயதாகிய எம் இருவரையும் காப்பதற்கு எவரை இங்கே ஏற்பாடு செய்து வைத்திருக்கிறாய்? (ஏன் எங்களைப் பற்றி நீ சிந்தனை செய்யவில்லை) நீ எங்கள் பக்கம் திரும்பி உன் அழகிய முகத்தைக் காட்டுவாயாக. உன்னை வருந்திப் பெற்ற வயிறு எரிகின்றது" என்று சொன்னதும், அவர்களை நோக்கி மகாராசன் கூறத் தொடங்கினான்.

## தாய் தந்தையர்க்கு அரசன் சமாதானம் கூறுதல்

**42.** **அறிவைநோக் கிடில்அதற்குத் தாய்தந்தையிலை**
**இவ்வுடல் அதனை நோக்கில்**
**இறையும்நீர் உபாதான காரணம்அன்று**
**இருமாயை* யினில்உண் டாகும்**
**குறிஇதுஇங்கு ஆயின்மண்ணில் எனைப்பெறாதவர்**
**இலைஅக் கொள்கை நீரும்**
**நிறையும்மதி இலரேநீர் நில்லும்என**
**இருவரையும் நீத்துப் போனான்.**

* *இருமாயை : ஆவரணம், விஷேபம்; ஆவரணம்–மறைத்தல், விஷேபம்–உடல் உலகத் தோற்றம்.*

"ஆத்மாவைப் பார்க்கும் போது அதற்குத் தாய் தந்தையர் எப்போதும் இல்லை. நிலையற்ற இவ்வுடம்பை பார்க்கும் போது நீங்கள் சிறிதும் முதற்காரணம் ஆக மாட்டீர். ஆனால் இது இரு சக்திகளையுடைய மாயையிலிருந்து சொப்பனப் பொருள் போலத் தோன்றும். இக்கருத்தினை ஆராய்ந்து பார்க்கும் போது இவ்வுலகில் என்னைப் புதல்வனாகப் பெறாதவர் ஒருவரும் இலர். நீங்களும் அத்தன்மை உடையவரே. ஆதலால் விவேகம் இல்லாதவர்களே! நீங்கள் நில்லுங்கள்" என்று அவ்விருவரையும் விட்டுப் போனான்.

## மகாராசன் மனைவி தடுத்தல்

43. அரிவையர்கள் தமக்குஇலக் கணம்கூறும்
நூல்அதனில் அதனை எல்லாம்
உரிமையதா உடையவளாம் இனியமனை
தொடர்ந்துஏகி உருகி நின்று
பரிவினுடன் அடிகள்பணிந்து அரற்றியே
பதைபதைத்துப் பனிகண் பாயத்
தரியன்உமை விடுத்துஉலகம் அதனில் ஒரு
கணமேனும் சாவேன் என்றாள்.

பெண்களுக்கு உரிய அழகு இலக்கணம் கூறுகின்ற நூல்களில் சொல்லப்படும் அழகை எல்லாம் தனக்கு உரிமை ஆக்கிக் கொண்டவளாகிய அவ்வேந்தனின் இனிய மனைவி, தன் கணவன் துறவியாய்ச் செல்வதை அறிந்து, மிக்க அன்புடன் அவன் எதிரில் நின்று அவன் பாதங்களை வணங்கிக் கதறி அழுது துடி துடித்துக் கண்களில் நீர் ஒழுக, "நான் உம்மைப் பிரிந்து ஒருகணமும் இருக்க மாட்டேன் சாவேன்" என்று சொன்னாள்.

## அரசன் தன் மனைவிக்குச் சமாதானம் கூறுதல்

44. நின்னுடைய நாயகனை நினதுஉள்ளே
உறநோக்கி நிற்க மாட்டாது
உன்னுடைய நாயகன் என்று என்தனையே
கருதிநீ உழல்வது என்னே
மின்அனைய இடையாய்கேள் அனைவருக்கும்
நாயகன்ஓர் மேலாம் ஈசன்

**அன்னவனை யேதேடிப் போகின்றேன்**
**எனஅரசற்கு அரிவை சாற்றும்.**

இவ்வாறு கூறக் கேட்ட அரசன் அவளை நோக்கி, "மின்னல் போன்ற இடை உடையவளே, நான் சொல்வதைக் கேள். ஒவ்வொருவருக்குள்ளும் பரமாத்மாவாகிய நாயகன் இருப்பதை நீ அறியவில்லை. அந்தப் பரமாத்மா உனக்குள்ளும் இருப்பது தெரியாமல் என்னையே உனது நாயகன் என்று கருதி நீ கலங்குவதற்குக் காரணம் என்ன? ஒப்பற்ற தலைவனாகிய ஈசனே எல்லோர்க்கும் நாயகன். அத் தலைவனையே நான் தேடிக் கொண்டு செல்கின்றேன்" என்று கூறினான். அதனைக் கேட்ட அவள் அரசனுக்குச் சொல்லத் தொடங்கினாள்.

## பட்டத்தரசி தன் கணவனைப் பிரிய விதியில்லை என்று கூறுதல்

**45.** **ஞானமா னதுபொதுவே நூல்அதனில்**
**துறவுஅதற்கு நவில்வது இல்லாள்**
**ஆனமா தினைஅலவோ விடுகஎன**
**அறையும்பதி ஆன உன்னை**
**ஈனமா விடுகஎன அறையும்அதோ**
**துறவறம்இங்கு எனக்குஎன் சொல்லும்**
**ஆனதால் உனைஒழிந்து கதிஇலையே**
**எனஎண்ணி யான்அடுத்தேன் என்றாள்.**

"நூல்கள் கூறும் ஞானமானது, ஆண் பெண் ஆகிய இருபாலருக்கும் பொதுவானதே. ஆதலால் இருவரும் அதனை ஏற்றுக் கொள்ள வேண்டும். அத்துறவிலே சொல்லப்படும் விதி, துறவுக்கு இடையூறாய் இருக்கும் மனைவியை அல்லவோ ஆடவர் விட வேண்டும் என்று சொல்லும்? என்னுடைய நாயகனாகிய உன்னை விட வேண்டும் என்று அத்துறவற நூல் சொல்லுமோ? ஆகையால் உன்னையன்றி வேறு கதி எனக்குஇல்லை என்று எண்ணி உன்னிடம் வந்து சேர்ந்தேன்." என்று மகாராணி கூறினாள்.

## அரசன் தன் மனைவி கூற்றுக்குச் சமாதானம் கூறிச் செல்லுதல்

46. ஆகமத்தின் விதிதவறாது அறைந்தனைநீ
விவேகியே ஆவாய் யானும்
தேகம்முதல் பிரபஞ்சம் அதனின்நசை
விடுத்துவனம் செல்லா நின்றேன்
நாகமுலை யாய்என்உரை தடுத்தல்உன்தன்
விரதமல நாடு தன்னில்
போகுதிஎன்று அவளைவிடுத்து ஏதிலரைப்
போல்அகன்று போகா நின்றான்.

அரசன் தன் மனைவியை நோக்கி, "ஆகம விதிகளைத் தவறாமல் எடுத்துக் கூறினாய். ஆதலால் நீ புத்திசாலி ஆவாய். நானோ உடல் முதலான உலக ஆசையை விடுத்துத் துறவு பூண்டு காட்டிற்குச் செல்கின்றேன். இளமை பொருந்திய தனங்களை உடையவளே, பத்தினி ஆகிய நீ என்சொல் மறுப்பது தருமம் ஆகாது. எனவே நீ நாடு செல்க" என்று கூறி அவளை விடுத்து அயலவரைப் போல அவ்விடம் விட்டு அகன்று போயினான்.

## அரசி வருந்தி மாமன் வீடு போய்ச் சேருதல்

47. விரிவாய ஞானமதை உணர்ந்தாலும்
மடந்தைபதி விலங்க நிற்றல்
அரிதுஆய தகைமையினால்ஏங்கியே
பதைபதைத்துஅங்கு அவனை நோக்கித்
தரியாது கதறியே வினைதனையே
நொந்துதான் தளர்ந்து நின்று
தெரியாது மறைந்தஇடம் தனில்மிகவும்
உருகியே தேம்பி வீழ்ந்து.

பெண்ணானவள் விரிவான ஞானத்தை அறிந்து இருந்தாலும் கணவனைப் பிரிந்து வாழ்வது அரியதாகும். ஆதலால் அந்த அரசி தன்னை விட்டுப் பிரிந்து செல்லும் நாயகன் செய்கையைக் கண்டு ஏக்கம் அடைந்து துடிதுடித்து துயரம் தாங்காது கதறி அழுதாள். தன் முன்வினையை எண்ணி நொந்து வெறுத்துச் சோர்வடைந்து ஒருவரும் அறியாத இடத்தில் நின்று மிகவும் மனம் உருகித் தேம்பி விம்மி அழுது வீழ்ந்தாள்.

**48.** **வேந்தனே உனைவிடுத்தும் உலகம்அதில்**
**இருக்கவோ விதித்தான் ஈசன்**
**தீர்ந்ததோஉனக் கும்எனக்கும் வினைதானும்**
**இன்றுஅளவில் சேர்ந்து நிற்கும்**
**போந்தஉனை எக்காலம் காண்பேன்நான்**
**இனிஎனவே புலம்பி மாதும்**
**சார்ந்தனள்பின் திரும்பியே நகர்அதனில்**
**மாதுலன்தன் சார்பு தன்னில்.**

“அரசனே உன்னை விட்டு நீங்கிய பின்னும் நான் இவ்வுலகத்தில் உயிருடன் இருக்கவோ கடவுள் எனக்கு விதித்தான்? நாம் இருவரும் கூடி இல்லறத்தில் வாழ்வதற்குக் காரணமாய் இருந்த பழ வினையும் இந்த நாளில் உனக்கும் எனக்கும் தீர்ந்து விட்டதோ? என்னோடு கூடி வாழ்ந்து பிரியும் உன்னை நான் இனி எக்காலம் காண்பேன்?” என்று புலம்பிய அரசி தன் மாமனுடைய இருப்பிடத்தைச் சேர்ந்தாள்.

## வனம் சென்ற அரசன் நிலைமை

**49.** **அரசன்அந்த நகர்விடுத்துத் தேசநாடு**
**களும்அகன்று அடவி சென்றே**
**இரவுபகல் அகநிலையே நிலையாக**
**இருந்தவர்கள் இடமே சேர்ந்து**
**பரகுருவின் உபதேசத்து அரியபொருள்**
**வினவிஅவர் பகரக் கேட்டுத்**
**திரமனமாய் ஒருவரால் கலங்காத**
**ஞானியாயத் தீரன் ஆகி.**

அனைவரையும் விட்டுச் சென்ற மகாராசன், அந்நகரை விடுத்து, நாட்டையும் நாட்டைச் சார்ந்த ஊர்களையும் கடந்து காட்டிற்குள் சென்றான். இரவும் பகலும் தன் ஆத்மாவை நோக்கி நிற்கும் நிலையே தமக்கு உரிய நிலையென்று நிட்டை கூடி இருந்த ஆத்ம ஞானிகளிடம் சேர்ந்தான். தமக்கு முன்னர் உபதேசம் செய்தருளிய உயர்ந்த குருவின் மகா வாக்கிய உபதேசத்தின் அரிய பொருளை அவர்கள்பால் கேட்டான். அதனை அவர்கள் சொல்லத் தெளிவடைந்து கலக்கம் தீர்ந்த ஆத்ம ஞானியானான்.

50. நகர்தனில் ஏகிப் பிச்சை
நண்ணியே மனைகள் தோறும்
அகமகிழ்ந்து அங்கை ஏற்றே
அவ்விடத்து அருந்தி ஆங்கே
செகம்உளோர் பேய்என்று எண்ணிச்
சிரித்திட நாணம் இன்றி
இகபரத்து இச்சை அற்றே
ஏகனாய் உலாவல் உற்றான்.

தனக்குப் பசி வந்த போது ஊருக்குள் சென்று, இல்லங்கள் தோறும் பிச்சை உணவை உள்ளங் கைகளால் வாங்கி, மன மகிழ்வுடன், வாங்கிய அவ்விடத்திலேயே உண்டான். உலகப்பற்றுடைய மனிதர்கள் அனைவரும், இவர் திரியும் கோலம் கண்டு பேய் என்று எண்ணிச் சிரித்திட அதற்காக வெட்கப் படாமல், இவ்வுலக ஆசையையும் மேல் உலக ஆசையையும் விட்டுத், தனியராய் உலாவித் திரிந்தான்.

51. பொருந்திவாழ் இடம்ஒன்று ஆகில்
பொருந்திடும் பற்றுஎன்று எண்ணி
இருந்திலன் ஓர்இ டத்தும்
எங்கெங்கும் ஒருவன் ஆகித்
திருந்திய சமாதி விட்டுத்
திரும்பிடாது உறைக்க உன்னி
இருந்துஇருந்து இடங்கள் எங்கும்
ஏகமே நோக்கி நின்றான்.

மேலும், அவன் ஒரே இடத்தில் வாழ்ந்தால், அவ்விடத்தின் மேல் பற்று ஏற்படும் என்று எண்ணி, ஓர் இடத்திலும் நிலையாக வசித்திடாமல் இருந்தான். தனியே திரிந்தான். நிலையான சமாதியை விட்டு உலகின் பக்கம் மனம் திரும்பாமல், அச்சமாதி நிலையிலேயே அழுந்தி இருந்தான். எல்லா இடங்களிலும் ஒன்றாகிய பரம்பொருளையே கண்டான்.

52. தோன்றிடும் உலகம் எங்கே
தோன்றிடும் என்ன நோக்கித்
தோன்றிடும் நினைவில் என்றே
தோன்றிய நினைவு தானும்

**தோன்றிடும் இடத்தைப் பார்த்துத்**
**தோன்றிடும் சொரூபத்து என்றே**
**தோன்றிடும் பொருள்கள் எல்லாம்**
**சொரூபமே என்று கண்டான்.**

மகாராசன் முழுமையான சமாதி நிலையில் இருந்த பொழுது, கண்களுக்குத் தோன்றும் இவ்வுலகம் எங்கிருந்து தோன்றுகின்றது என்று ஆராய்ந்து பார்த்து, அது நினைவிலே தோன்றுகின்றது, என்று உணர்ந்தான். பின்னர் அந்த நினைவும் தோன்றுகின்ற இடத்தை ஆராய்ந்து நோக்கி, தன் ஆத்ம வடிவத்திலேயே தோன்றும் என்பதை உணர்ந்தான். பின்னர் உலகம் நினைவில் தோன்றுவதாலும், நினைவு ஆத்ம வடிவில் தோன்றுவதாலும் ஆத்ம வடிவின்றி நினைவு இல்லை, நினைவு இன்றி உலகு இல்லை, ஆதலால் தோன்றுகின்ற பொருள்கள் எல்லாம் ஆத்ம வடிவமே என்று உணர்ந்தான்.

**53.** **தோன்றிடும் பொருள்கள் உண்டாய்த்**
**தோன்றியே இன்பம் ஆகித்**
**தோன்றிடும் அதனால் அந்தச்**
**சொரூபமே என்று கண்டு**
**தோன்றிடும் சொரூபம் தன்னில்**
**தோன்றும்ஈது அசத்தே என்று**
**தோன்றிடும் சொரூபம் தானாய்த்**
**துளக்கம்அற்று இருந்தான் வேந்தன்.**

புலனாகும் பொருள்கள் அனைத்திலும் பெயர், வடிவம், சச்சிதானந்தம் மூன்றும் விளங்குகின்றன. இவற்றில் பெயரையும் வடிவத்தையும் நீக்கிவிட்டால் மீதமிருப்பது சச்சிதானந்தமாகிய ஆத்மாவே. இதை உணர்ந்துவிட்ட மகாராஜன் பெயரும், வடிவும் நிலையற்றவை என்று தெளிந்தான். எல்லாப் பொருள்களும் தானும் ஒரே பரம்பொருளின் சொரூபமே என்று உணர்ந்து சிறிதும் சலனமற்று இருந்தான். தானே பிரம்ம சொரூபம் என்று அறிந்தான்.

**54.** **கடிநகர் தோறும் சென்றும்**
**கானகம் தோறும் சென்றும்**

**படிவலம் ஆகி வந்தும்**
**பார்வைமா றாட்டம் இன்றி**
**மடிவுஇலா மனத்தன் ஆகி**
**மாசுஇலா நிலைமை பெற்று**
**முடியுடை வேந்தர் வேந்தன்**
**முத்தியே வடிவம் ஆனான்.**

அரசர்க்கு அரசனான மகாராஜன் நகரங்களிலும் வனம் வனாந்தரங்களிலும் சுற்றி அலைந்தான். பார்க்குமிடமெங்கும் நீக்கம் அற நிறைந்திருக்கும் பரபிரம்ம சொரூபத்தையே கண்டான். அதனால் சிறிதும் வாட்டமின்றி தூய்மையான உள்ளத்துடன் பற்றே இல்லாத முத்தி வடிவம் அடைந்தான்.

55. **முத்தியே வடிவம் ஆன**
**முடியுடை வேந்தர் வேந்தன்**
**எத்திசை தனக்கும் இராசன்**
**எனைவிட வேறுஇல் என்று**
**சத்தியம் ஆக எண்ணித்**
**தன்னிடம் அதனில் தன்னைச்**
**சுத்திசெய்து அனைத்தும் ஆகிச்**
**சுயம்சோதி ஆகி நின்றான்.**

சீவன் முத்தனான முடிதரித்த வேந்தன் எத்திசையிலும் பரிபூரணமாக நிறைந்திருப்பது பிரம்ம சொரூபமே என்று சத்தியமாகத் தெளிந்ததால் தானும் எத்திசையிலும் நிறைந்திருப்பதை உணர்ந்தான். பிரம்ம சொரூபத்திலிருந்து தன்னைப் பிரித்துக் காட்டும் உபாதிகளிலிருந்து விடுபட்டு மறைப்பு நீங்கி தானே அறிவு வடிவமாக சீவ பிரம்ம ஐக்கிய பாவனையை அடைந்தான்.

56. **தன்னையே அன்றி ஒன்றும்**
**தான் உதியா இடத்தின்**
**மின்னையே ஒத்த வையம்**
**மித்தை கற்பிதம் என்று**
**பொன்னையே அன்றி வேறு**
**பூடணம் இலது போல**

**என்னையே அன்றி ஒன்றும்**
**இல் எனத் தேர்ந்தான் வேந்தன்.**

மகாராசாவானவன் உலக வாழ்க்கை மின்னி மறையும் மின்னலைப் போன்றது. ஆத்மாவிலிருந்து அந்நியமாக வேறு ஒரு பொருளும் தோன்றாது என்பதையும், மனதினால் கற்பித்துக் கொள்ளப்பட்ட உலகம் பொய்யான தோற்றம் என்பதையும் உணர்ந்து கொண்டான். பொன்னால் செய்யப்பட்ட ஆபரணம் எப்படிப் பொன்னிலிருந்து வேறுபடாதோ அதுபோல ஆத்மாவையன்றி வேறு ஒரு பொருள் இல்லை என்பதை அறிந்து கொண்டான்.

**57.** **உலகினை வேறு அது ஆக**
**உணர்ந்திடில் பந்தம் ஆகும்**
**உலகினைத் தானே ஆக**
**உணர்ந்திடில் முத்தி ஆகும்**
**இலகிடக் கண்டு தோன்றல் எல்லாம்**
**என் நினைவே என்று எண்ணி**
**இலகிடக் கண்டு வேறு அற்று**
**இருந்தனன் இளமை வேந்தன்.**

இந்த உலகமானது தன்னிலிருந்து வேறுபட்டது என்று நினைத்தால் அதுவே பந்தம். உலகத்தை வேறாக உணர்வதால் ஆசை உண்டாகிறது. ஆசையே துன்பத்திற்குக் காரணம். இந்த உலகமும் நானும் வேறு வேறு அல்ல என்ற தெளிவு பிறந்து விட்டால் அதுவே முத்திநிலை. கண்களால் பார்க்கும் பிரபஞ்சத்தோற்றம் எல்லாம் தன்னுடைய கற்பனையில் தோன்றுபவையே என்று தன் உள்ளத்தில் சிந்தனை செய்து அசைவற்ற சமாதி நிலையில் இருந்தான் அந்த மகாராசன்.

**58.** **ஏகசக் கரம்அது ஆக**
**இருந்துஅரசு ஆள்வோன் செல்வப்**
**போகமும் திரண மாம்அப்**
**போதநாட்டு அரசு இயற்கை**
**யூகபுந் தியினால் ஆசான்**
**உபதேசத்து ஆன அந்தச்**
**சோகம் அற் றிடுநாடு எய்தித்**
**தொழில்எலாம் முடித்தான் மன்னன்.**

உலகமெல்லாம் ஒரு குடையில் கீழ் காக்கின்ற சிறந்த மகாராசன், அவனுடைய செல்வங்களையும், உலக இன்பங்களையும் அரசபோகங்களையும் துரும்பாக எண்ணி பற்றற்ற நிலையை அடைந்தான். அறிவு பூர்வமாக குருவின் உபதேசங்களை சிந்தனைசெய்து மனம் தெளிந்து அனைத்து விவகாரங்களையும், தத்துவ ஆராய்ச்சிகள் செய்வதையும் கூட விட்டு விட்டு சோகம் என்பதே தீண்டமுடியாத பேரின்ப நிலையில் ஆழ்ந்து விட்டான்.

**59.** **பந்தம்வீடு என்றும் இல்லை**
**பரம்பொருள் ஒன்றே என்றும்**
**தம்தம்சங் கற்பத் தாலே**
**சாலமோ கிப்பர் தீயோர்**
**அந்தம்ஆ திகளும் இல்லா**
**அரும்பொருள் தாமே என்று**
**சந்ததம் நோக்கி அந்தத்**
**தற்பரம் தானே ஆனான்.**

அஞ்ஞானியானவன் தானே பிரம்ம வடிவமாக இருப்பதை அறியாதபடியால் உலகம் பந்தம் என்று மயங்குவதும், பிறகு பந்தங்களைத் துறந்து வீடு பேறடைய வேண்டுமே என மிகவும் மயங்குவர். மகராசன் முதலும் முடிவும் இல்லாத அறிய பொருள் தாமே என்று தினமும் எண்ணி தானே அந்தப் பரம்பொருள் ஆனான்.

**60.** **குறைவுஇலா நிறைவுஅது ஆகிக்**
**குளிர்ந்துஇளைப்பு ஆறி வேந்தன்**
**இறைஅள வேனும் துன்பம்**
**இன்றியே இன்பம் ஆகி**
**உறைவிடம் இன்னது என்ன**
**ஓர்இடம் இன்றி எங்கும்**
**நிறைவதே இடமாய் நின்றான்**
**நிகர்இல்மா ராசன் தானே.**

ஒப்புவமை இல்லாத மகாராசன் என்னும் அந்த அரசன் குறைவு என்பதே சிறிதும் இல்லாத நிறைந்த மனத்தினனாகி உள்ளம் குளிர்ந்து அமைதி அடைந்தான். மனம் இன்பம் இருக்கும் இடத்தைத் தேடித் தேடி அலையாமல் எல்லா இடங்களிலும் பரவியுள்ள பரபிரம்ம சொரூபமாகி பேரின்ப வடிவானான். (சீவன் முத்தி அடைந்தான் என்பது கருத்து)

**61.** **எங்கும்ஆய் நிறைந்து நின்ற**
**ஏகராச்சி யம்அது ஆள்வோன்**
**தங்குதல் இன்றி எங்கும்**
**தான்எனக் கண்ட தூயோன்**
**இங்கு*உறைந்து அகன்ற பாண்டத்து**
**இயல்பின்நெஞ்ச அருவம் பற்றி**
**அங்குஉரு அகற்றி நின்றான்**
**ஆனந்தி ஆகி வேந்தன்.**

மகாராசன் எங்கும் பரந்து விரிந்து நிறைந்துள்ள ஒரே பரப்பிரம்மமாக விளங்கும் ராச்சியத்தையே ஆளத்தொடங்கிவிட்டான். எவ்விடமும் எப்பொருளும் தனது வடிவமான ஆத்ம சொரூபமே என்று ஐயம் அற உணர்ந்த தூயவன் ஆனான். இரஜோ தமோ குணங்கள் நீங்கி சத்துவ குணமே மேலிட்டு ஆனந்த வடிவம் ஆனான். பெருங்காயம் வைத்திருந்த பாத்திரத்தில் பெருங்காயத்தை எடுத்தபிறகும் அதன் மணம் இருப்பதுபோல, முக்குணங்களால் ஆன மனது இரஜோ தமோ குணங்கள் விட்டதால், மனம் சத்துவமாய் ஆனதால் ஆனந்தமாக இருந்தான்.

**62.** **சீவன்முத்தர் கள்பால் நிற்கும்**
**செப்பிய மனத்து அரூபம்**
**மேவுஅரும் பரம முத்தி**
**மேவிடின் நாசம் ஆகும்**
**தாவுஅரும் நிலைமை நன்றாச்**
**சற்குரு அருளால் பெற்றுக்**
**கேவலம் ஆகி நின்றான்**
**கேடுஇலா ஞான வேந்தன்.**

மேலே சொல்லிய, உருவம் அற்ற, சத்துவ குணம் மேலிட்ட மனம் சீவன் முத்தர்களிடம் நிலைபெற்று இருக்கும். அடைதற்கு அரிய வீட்டுலகம் அடைந்தால் அந்த உருவமற்ற மனமும் ஒடுங்கும். சற்குருவின் அருளால் அலைபாயும் மனம் ஒடுங்கி குற்றங்குறை இல்லாத ஞான நாட்டம் கொண்ட வேந்தன் ஒரே பரம்பொருள் ஆகி நின்றான். (அருவ மனம் சத்துவ குணம் மட்டுமே மேலிட்டுள்ள நிலை.)

---

* *இங்கு = பெருங்காயம்*

## இப்படி இருந்த மகாராசனின் அமைச்சரில் ஒருவன் அவனிடம் சென்று அவன் அடைந்திருந்த நிலையைக் கண்டு பேசுதல்

**63. இத்தகை ஞானம் பெற்றே எழில்முனி ஆகி எங்கும்**
**சித்தனாய்த் திரிதல் தன்னைச் செப்புமுன் அமைச்சர் தம்முள்**
**வித்தகன் ஒருவன் கேட்டு வினவிட வேண்டும் என்றே**
**கத்தனாம் அரசைத் தேடிக் கண்டுஅடி பணிந்து நின்றான்.**

இத்தகைய ஆத்ம ஞானத்துடன் அழகிய முனிவனாய், எல்லாம் சித்திக்கப் பெற்றவனாய் உலாவி வரும் அரசனைப் பற்றி அவனுடைய அமைச்சர்களுக்குள் மிக அறிவுடையவனாய் இருந்த ஒருவன் கேள்விப்பட்டான். அவ்வரசனை நேரில்கண்டு சில வினாக்களைக் கேட்க வேண்டும் என்று எண்ணித் தன் தலைவனாகிய அவ்வேந்தனைத் தேடிக் கண்டு அவன் பாதம் வணங்கி நின்றான்.

**64. பூஅணை ஆகி வானம்பொருந்துமேல் கட்டி ஆகித்**
**தீவம்அது ஆகி இந்து செங்கதிர் வீசும் காற்று**
**மேவுசா மரம்அது ஆகி விடுதலை மனைவி ஆகிக்**
**கேவலம் இன்பம் ஆகிக் கிளர்ச்சியாய் நின்றான் வேந்தன்.**

பூமியே மெத்தையாகவும், வானமே கட்டிலின் விதானமாகவும், சந்திரனும், சூரியனும் விளக்குகளாகவும், இயற்கையாய் வீசும் காற்று கவரி ஆகவும், எல்லாப் பற்றுக்களையும் விடுகின்ற குணமே மனைவியாகவும் கொண்டு ஏக வடிவுடன் பேரின்பத்தில் திளைத்து இருந்தான் அவ்வரசன்.

**65. ரதம்முதல் சேனை சூழ ரத்னசிங் காச னத்தில்**
**விதம்அலங் காரத் தோடு வீற்றிருந்து அமரும் வேந்தன்**
**உதவுகோ வணனாய் மேனி உருத்தெரி யாத நீறாய்**
**முதல்முடி விரித்து நின்றான் முனிவனாய் ஒருவன் ஆகி.**

தேர் முதலான நால்வகைச் சேனைகள் சூழ்ந்து இருக்க, இரத்தின சிம்மாசனத்தில் பலவித அலங்காரங்களோடு வீற்றிருந்து ஆண்ட அரசன், கோவணம் கட்டியவனாய், இன்னாரென்று அடையாளம் காண இயலாத உருவுடன் மேனி எங்கும் நீறு பூசித் தலைமுடியை விரித்தவாறு முனிவர் கோலத்தில் நின்றான்.

**66.** **கரிரதம் இவர்தல் இன்றிக் கால்நடை ஆகி எங்கும்**
**உரியது ஓர் மனைஊண் இன்றி ஊர்எங்கும் உண்பான் ஆகி**
**அரியரா சாங்கக் கோலம்அகற்றியே தவாங்கம்* ஆகித்**
**திரியும்அவ் அரசை நோக்கிச் செப்பினன் அமைச்சன் தானே.**

யானை, தேர் முதலியவற்றில் ஏறாமல் எங்கும் கால் நடையாகவே சென்று, தனக்கு உரிய உணவை ஒரே வீட்டில் வாங்கி உண்ணாமல் ஊர் எங்கும் பிச்சை எடுத்து உண்பவனாகி, அரிதான அரச கோலங்களை நீக்கித் தவக்கோலமே தனக்குரிய அங்கமாய்க் கொண்டு திரியும் அந்த அரசனை அமைச்சன் கண்டு சில சொற்களைச் சொன்னான்.

**67.** **அவனியில் நினக்கு மேல்ஓர் அரசனும் இல்லை இந்தத்**
**தவவடிவு ஆகி எங்கும் சரித்திடல் எற்றி னுக்கோ**
**நவமதாய் உடல்இ தோடே நண்ணுவது எனைஈது அன்றி**
**இவண்எனக்கு அருள வேண்டும் எனக்குஅறிவு ஓங்கு மாறே.**

“உலகிலே உனக்கு மேலான அரசன் ஒருவரும் இலன். அப்படிப்பட்ட நீ அரசாட்சியை விட்டுவிட்டு, இத்தவ வேடத்தை ஏற்று எங்கும் சென்று உலவி வருவது எதற்காகவோ? இத்தவ வேடம் ஏற்ற உடம்பால் இவ்வரச போகத்தை அன்றிப் புதிதாக நீ அடைவதற்கு என்ன இருக்கின்றது? எனக்கு அறிவு தெளிவடையுமாறு கூறி அருள வேண்டும்”.

**68.** **பதத்தினை வேண்டின் முன்னம் பற்றிநின்று இல்ல றத்தைப்**
**பதப்பட நிறுத்தி ஏகல் பண்பதாம் மேலாம் முத்திப்**
**பதத்தைவேண் டிடிலோ ஞானப் பார்வையில் கூடும் நீளப்**
**பதத்தினை வேண்டி இந்தப் பரதேசி ஆனது என்றான்.**

“சொர்க்க பதவியை விரும்பினால் முதலில் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டு அவ்வறத்தை அழகுடன் நிலைபெறச் செய்ய வேண்டும். எல்லாப் பதவிகளிலும் மேலாகிய வீடுபேறு என்னும் பதவியை அடைய விரும்பினால் தத்துவ ஞானத்தால் உண்டாகும் ஆத்ம ஞான தரிசனத்தால் அது கைகூடும். இவ்விரண்டிற்கும் பரதேசிக் கோலம் தேவை இல்லை. அப்படி இருக்க நீ எப்பதத்தினை வேண்டி இந்தபரதேசிக் கோலம் கொண்டாய்”

---

* *தவாங்கம் = தவ+அங்கம் = தவ வடிவம்*

என்று வினவினான். (அரசன் பரதேசியாய்த் திரிவது மந்திரிக்கு துக்கம் அளிக்கிறது. அந்த ஆதங்கத்தினால் கூறினான்.)

## மந்திரியின் வினாவிற்கு மகாராசன் விடை கூறுதல்

**69. அமைவுஉடை அமைச்சின் மிக்கோய் அடைவுடன் வினவிக் கேட்டாய்**
**இமைஅள வேனும் சித்தம் இதுஅது எனஓ டாது**
**சமைவுடன் கேள்நீ சொன்ன சங்கைக்குஉத் தரங்கள் நன்றாய்**
**நமைவிட வேறுஓர் வேந்து நாட்டுஇலை என்பது ஒக்கும்.**

"நல்குணம் பொருந்திய அமைச்சனே! நீ முறையோடு கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியவைகளைக் கேட்டாய். நீ கேட்ட ஐய வினாக்களுக்கு உரிய விடைகளை நான் நன்றாகச் சொல்லுகிறேன். இமை அளவேனும் அது இது என மனத்தை உலகச் செய்திகள்பால் ஓட விடாது, பொறுமையுடன் கேள். நம்மைக் காட்டிலும் வேறு ஒர் அரசன் இந்த நாட்டிலே இல்லை என்று நீ கூறுவது பொருந்தும்".

**70. பதமதை வேண்டின் இல்லைப் பதப்பட நிறுத்தி ஏகல்**
**இதம்என்றல் ஒக்கும் முத்தி எய்துதல் ஞானப் பார்வை**
**விதம் அதில் தோன்றும் என்றாய் விருப்பமாய்க் குடும்ப பாரத்து**
**இதமதாய் அழுந்து வோருக்கு எங்ஙனம் பார்வை தோன்றும்.**

"சொர்க்கம் முதலிய பதவிகளை அடைய விரும்பினால் இல்லறத்தை முறைப்படி நிலைபெறச் செய்து நல்வழியில் செல்லுதல் நன்மை என்று நீ சொல்லுதல் பொருந்தும். தெளிந்த ஞானம் பெற்றால் வீடு பேறு அடையலாம் என்று நீ கூறினாய். குடும்பச் சுமையில் விருப்பம் கொண்டு அதிலேயே மூழ்கிக் கிடப்பவனுக்கு, ஞானப் பார்வை எங்ஙனம் தோன்றும்?"

**71. மனம்இரு பொருளைப் பற்ற மாட்டாது அட்டாவ தான**
**இனம்அவை புறநோக்கு ஆன ஏதினால் கூடும் வீடு**
**கனம்உள்நோக்கு ஆகும் இல்லம் கருதிய புறநோக்கு ஆகும்**
**அனகஇவ் ஊகம் தோன்ற அறைகுவம் நாமே கேளாய்.**

"மனமானது, சுவை ஒளி ஊறு*, ஓசை, நாற்றம் என்ற ஐந்து புலன்களில் ஒன்றில் மாத்திரமே செல்லும், ஒரு காலத்தில் ஒன்றை மட்டுமே நினைக்கும். இரண்டை நினக்காது. எனினும் எட்டுச் செயல்களை ஒரே சமயத்தில் மனம் கவனிக்கும், அட்டாவதானம் என்னும் கலை புலவர்களால் உலகில் நடைபெறுகின்றது. அதனைக் கண்டு நீ எட்டுச் செயல்கள் இப்படி ஒரே நேரத்தில் கவனிக்கப்படுகின்றனவே என்று ஐயப்படுகின்றாய். எட்டு நினைவுக் கூட்டங்களும் ஒரே சமயத்தில் வெகுவாக நடைபெறும். விரைவாக அடுத்தடுத்து நிகழ்வதால் ஒரே காலத்தில் நிகழ்வதாகத் தோன்றுகிறது. வீடுபேறானது உறுதியான உள்நோக்கத்தால் விளங்குவது. இல்லறம் வெளி நோக்கத்தால் விளங்குவது. இவ்விரண்டு நோக்கங்களும் நன்கு விளங்குமாறு தூயதான வழிமுறையை நாம் கூறுவோம் கேட்பாயாக".

**72.** **தென்திசை நடப்போர் கங்கை சென்றுதோய்ந் திடுவ ரோதான்**
**அன்றியும் அவனி வாழ்க்கைக்கு அமைச்சர்க ளுடன்ஏ காந்தம்**
**ஒன்றியே யூகம் செய்வோர் உலகவேந்து ஆயி னோர்கள்**
**நின்றுஇதை நோக்காய் இல்லில் நிற்பவர் முத்தி சேரரர்.**

"வடதிசையை நோக்கிச் செல்லாமல் தென்திசையை நோக்கிச் சென்றவர் கங்கையில் மூழ்குவாரோ? இதைப்போல் வீடுபேறு அடைவதற்கு உள்நோக்கமாகிய ஞான நெறி வேண்டும். புற நோக்கில் சென்றால் கிடைப்பது அரிது. அன்றியும் உலகாளும் மன்னராய் இருப்போர், தம் ஆட்சிக்கு உட்பட்டோர் பகை, பிணி முதலிய இடர்களின்றி வாழ்வதற்காக அமைச்சர்களுடன் தனியிடத்தில் இருந்து ஆலோசனை செய்வர். புறநோக்கு உடையவராய் இல்லறத்தில் இருப்போர் வீடுபேறு அடைய மாட்டார். நீ நல்வழியில் நின்று இவ்வுண்மையை ஆராய்ந்து பார்ப்பாயாக".

**73.** **பாசம்தான் பகையதாகப்**
**பார்வை பெற்றிடில் பாசத்தில்**
**பாசம்தான் வைத்துப் பின்னும்**
**பற்றவும் கூடுமோதான்**
**பாசம்தான் பகையது என்றே**
**பகரும் நூல்மட்டே கற்றோர்**

---

• ஊறு - தொடு உணர்வு

**பாசம்தான் விடவும் மாட்டார்**
**பரம் எலாம் என வாய்ப் போக்கும்.**

"ஒருவனுக்கு உலகவாழ்வில் பற்றுதல் இருப்பதே தனக்குப் பகை என்பது புரிந்துவிட்டால், உலக விஷயங்களில் ஆசை கொண்டு மறுபடியும் அவற்றை அடைய விரும்புவார்களா? (மாட்டார்கள்) ஞானத்தை விளக்கும் சாத்திரங்களை மட்டுமே படித்தவர்கள், "எல்லாம் பரம்பொருள்" என்று வாயால் பேசினாலும் உள்ளத்தில் ஆசையைத் துறக்காதவர்களே".

(பாசம் என்பது மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை மூன்றையும் குறிக்கும். இந்த ஆசைகளை உள்ளத்திலிருந்து முழுமையாக அகற்றியவர்களே ஞான தரிசனம் பெறுவார்கள் என்பது கருத்து)

**74.** **அந்தம் ஆதியும் இலாவீடு**
**அடைந்து உடல் பிறப்பு அறுக்கச்**
**சுந்தர ஞானம் போதும்**
**துறவறம் ஏதுக்கு என்றே**
**மந்தஅதிகாரி யோரை**
**மதித்து நூல் உரைக்கும் செய்தி**
**அந்த மதான பேருக்கு**
**அத்தகை விளம்பாது என்றும்.**

"சில வேதாந்த நூல்கள், துறவறமே அவசியமில்லை, இல்வாழ்க்கையில் ஈடுபட்டுக்கொண்டே இந்த பிறவிப் பெருங்கடலிலிருந்து கரையேறி முடிவில்லாத வீடு பேற்றை அடையமுடியும் என்று மந்த புத்தியுள்ளவர்களுக்கே சொல்லுகின்றன. வீடு பேற்றை உடனே அடைய வேண்டுமென்ற அதி தீவிரமான வேட்கை உடையவர்களுக்கு இது பொருந்தாது".

(மந்த அதிகாரி = நிதானமாக ஞான விசாரணைசெய்யும் தொடக்க நிலையிலுள்ள சாதகன். அதிதீவிர அதிகாரி = இப்போதே வீடு வேறு அடைய மிகத் தீவிரமாக முயற்சிக்கும் சாதகன்.)

**75.** **தோன்றுகின்ற பொருள் இயல்பும்**
**தோற்றுவிக்கும் பொருள் இயல்பும்**

**தோன்ற உனக்கு யாம் உரைக்கச்**
**சோகம் அறவே கேட்டிடுவாய்**
**தோன்று பொருள்கள் அநித்தமும் ஆய்த்**
**தூய்மை இன்றித் துக்கமும் ஆய்த்**
**தோன்றும் தோற்று விக்கும் பொருள்**
**சுகமாய்ச் சுத்த நித்தமும் ஆம்.**

"மாயையின் காரியமான பிரபஞ்ச தோற்றத்தையும் இதைத் தோன்றச் செய்கின்ற முதல் காரணமான பிரம்மத்தின் இயல்பையும் உனக்குப் புரியும்படி நான் கூறுகிறேன். உன்னுடைய மனக்கவலை நீங்கும் பொருட்டு நான் சொல்வதைக் கவனமாகக் கேட்பாயாக. மாயையால் தோன்றும் பொருள்கள் அனைத்தும் நிலையற்றவை. தூய்மையும் இல்லாமல் துக்கமும் தருபவையாகத் தோன்றும். இவற்றைத் தோன்றச் செய்கின்ற பிரம்மம் நித்தியமானது. தூய்மையானது. இன்பமே வடிவானது".

## தேக நிலையாமை கூறல்

**76.** **பாலன் ஆன பருவம்போம்**
**பன்னுகு மாரப் பருவம்போம்**
**கோலம்ஆன தருணம்போம்**
**கோலை ஊன்றிக் குனிந்துஎழுந்து**
**காலன் மாய்க்க அனைவர்களும்**
**கல்என்று அழுது பேர்மாற்றி**
**ஏலப் பிணம்என்று ஒருபெயரிட்டு**
**இடுகாட்டு இடுதல் ஒருதலையே.**

"நமக்கு முதலில் ஏற்படும் பாலன் ஆகிய பருவமும் போய் விடும். பாராட்டிப் பேசப்படும் குமாரப் பருவமும் போய்விடும். அழகான வாலிபப் பருவமும் போய்விடும். பின்னர்க் கிழப் பருவம் வரும். அவ்வாறு அப்பருவம் வந்தவுடன் தடி பிடித்துப் பூமியில் ஊன்றிக் குனிந்து எழுந்து நடக்கும்போது எமன் வருவான். அந்த எமன் மாய்க்க வரும்போது நமக்கு உரியவராய் உள்ள அனைவரும் கதறி அழுது, நமது பெயரை நீக்கிப் பிணம் என்று பெயரை இட்டு, சுடுகாட்டில் வைத்து எரித்தல் உறுதி".

**77.** **கருவின் நின்றும்அழிந்துபோம்**
**கண்ட குழந்தை யினும்குமரப்**

**பருவம் தனிலும் போம்தருணப்**
**பருவந் தனிலும் அழிந்துபோம்**
**உருவம் நடுங்கும் மூப்பதினும்**
**ஒடுங்கும் எந்தக் காலையினும்**
**ஒருவி அழிதல் இயல்பாகும்**
**உலகத்து உடலின் வாழ்க்கையுமே.**

“இந்த உடலானது கருவில் இருக்கும் போதும் அழிந்தும் போகும். அதிலிருந்து வெளிவந்து உருவமாய் இருக்கும் பாலப் பருவத்தின் போதும் அழிந்து போகும். குமாரப் பருவத்திலும் அழிந்து போகும். வாலிபப் பருவத்திலும் அழிந்துபோகும். ஒவ்வோர் உறுப்பும் நடுங்குகின்ற கிழப் பருவத்திலும் அழிந்து போகும். உடலானது இந்த நால்வகைப் பருவத்தில் எப்பருவத்திலும் நீங்கி அழிதல் இயற்கையாகும்”.

**78.** **பஞ்ச பூதம் அழிந்துபோம்**
**பானுத் திங்கள் உடுக்கள்போம்**
**வஞ்ச அசுரரர் மடிந்திடுவர்**
**மாகர் பதம்போம் வல்லரக்கர்**
**துஞ்சு வார்கள் போகிபதம்**
**துஞ்சும் பிரமன் பதம்தானும்**
**துஞ்சும் திருமால் பதம்துஞ்சும்**
**துஞ்சாது ஒன்றே பரமபதம்.**

“வான், காற்று, தீ, நீர், மண் ஆகிய ஐம்பூதங்களும் அழிந்து போகும். சூரியனும் சந்திரனும் விண்மீன்களும் அழிந்து போகும். வஞ்சனை உடைய அசுரர்களும் இறந்து போவார்கள். இந்திரனது பதவியும் அழியும். நான்முகன் பதவியும் அழியும். திருமால் பதவியும் அழியும். உயர்ந்ததான முத்திப் பதவி ஒன்றே அழியாது”.

## உடம்பின் இழிவு கூறல்

**79.** **தோல்இ ரத்தம் எலும்புஇறைச்சி**
**சுக்லம் மேதை மச்சைஒன்றாய்த்**
**தூலி கரித்த உடம்பாகும்**
**தொட்ட எவையும் தன்வடிவாய்ப்**

**கோலி அடக்கிக் கொளும்இதனைக்**
**கூறு கூறா நோக்காது**
**போலி உணர்வோன் மகிழ்வுஎய்தும்**
**புனிதம் என்றும் பரமபதம்.**

"நம் உடம்பானது, தோல், இரத்தம், எலும்பு, இறைச்சி, இந்திரியம், நரம்பு, மூளை ஆகிய எழுவகைத் தாதுக்களும் ஒன்றாய்க் கூடிப் பருத்துத் தோன்றுகின்ற உடம்பாகும். தான் தொட்டு எடுத்து உட்கொண்ட எவ்வகைப் பொருள்களையும் தன் வடிவாகச் சேர்த்துத் தக்க உருவமாய் அடக்கிகொள்ளும். இவ்வுடம்பைத் தனித் தனியாய்ப் பிரித்து நோக்காது போலித்தனமான அறிவு உள்ளவன் உடம்பின் வாழ்க்கையை நிலையானது என எண்ணி மகிழ்வான். என்றும் பரமபதமே மேலானது".

## உடம்பால் வரும் துன்பம் உரைத்தல்

**80.** **அரந்தை அதனை ஒழுங்காக**
**அறையக் கேள்நீ அவனிஎல்லாம்**
**பரந்த சிருட்டி திதிஒடுக்கம்**
**பண்பாய் நிகழும் சிருட்டிதனில்**
**பொருந்து பெரிய துன்புஐந்து**
**போய்மாண்டு உறில்அது எண்மடங்கே**
**இருந்த திதியும் இரண்டாகும்**
**இளமை என்றும் மூப்புஎன்றும்.**

"உடம்பால் வரும் துன்பத்தை முறையாக நான் சொல்ல, நீ கேள். உலகம் முழுவதும் படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களும் முறையே நடைபெற்று வருவனவாம். பிறப்பில் நமக்கு வந்து சேரும் ஐவகைப் பெருந்துன்பங்கள் உள்ளன. அவை போய் மரணம் வந்து சேர்ந்தால் அது படைப்புக் காலத்தில் உண்டான துன்பங்களை விட எட்டுப் பங்கு அதிகமாகும். எஞ்சி இருந்த வாழ்நாளில் இளமை, மூப்பு என்று இருவகைத் துன்பங்கள் உண்டு".

(பிறக்கும் காலத்தில் துன்பங்கள் ஐந்துவகை: கருப்பாசயப்பை உறுத்தல், அதில் ஜலம் பூரித்தல், உதராக்கினியால் வேவுதல், பிரசூதவாயு முறித்துத் தள்ளுதல், யோனித்துவாரத்தில் நெருக்குறல்.)

81. விருத்த பருவம் மிகத்துன்பம்
விளங்கும் இளமை இரண்டுஅவையின்
வருத்து பிணியின் மிகத்துன்பம்
வளமை இளமை மூன்றுஆகும்
கருத்து அது அறியாக் குழந்தைஎன்றும்
குமாரம் என்றும் காளைஎன்றும்
அருத்தம் அறியா ததில்துன்பம்
அடையும் பாலப் பருவத்தில்.

"கிழப் பருவத்தில் பெரிய துன்பம் உண்டாகும். தோன்றும் இளமைப் பருவத்தில் கிழப் பருவத்தில் உண்டான துன்பங்களைக் காட்டிலும் இரண்டு பங்கு அதிகமாம். அந்த இளமைப் பருவத்தில் நோயினால் அதிகத் துன்பமாம். இளமைப் பருவமானது களங்கம் இல்லாத பாலப் பருவம் என்றும், குமாரப் பருவம் என்றும், காளைப் பருவம் என்றும் மூன்று வகையதாகும். குழந்தைப் பருவத்தில் அறியாமையினால் துன்பம் சேரும்".

82. தந்தை தாயார் ஆசிரியர்
தாங்கள் முனிதல் தனக்குஅஞ்சிச்
சிந்தை கலங்கும் கவுமாரம்
சிறந்த காளைப் பருவத்தில்
முந்து பசிநோய் காமநோய்
முடுகித் தணிக்கப் பொருள்தேட
இந்தப் புவனத்து இரவுபகல்
இடைய றாத தொழில்துன்பம்.

"குமாரப் பருவத்தில் தந்தை தாய் ஆசிரியர் சினத்திற்கும் அடிக்கும் பயந்து மனங்கலங்கும். சிறப்பான காளைப்பருவத்தில் முதன்மையாய் வருகின்ற பசி நோயையும் காம நோயையும் விரைந்து தணித்திடப் பொருள் தேடி, முயன்று இவ்வுலகில் இரவும் பகலும் ஓயாமல் செய்யப்படும் தொழில்களாலே வருகின்ற துன்பம் நீங்காத துன்பமாம்".

## பொருளால் வரும் துன்பம் கூறுதல்

83. பொருள்உண் டாகில் காப்பதனால்
பொருந்தும் துன்பம் அரசுஆகின்

**ஒருதன் மிகுந்த அரசரால்**
**உதவும் துன்பம் ஒருகுடைக்கீழ்**
**நிருபன் ஆகில் நோய்மரணம்**
**நேரும் என்னும் பயத்தானும்**
**வருவது எனையோ மறுமையினில்**
**என்றும் வாடித் துன்புறுமே.**

“நமக்குப் புண்ணிய வசத்தால் பொருள் உண்டாகும். ஆனால் கள்வர்களும், உறவினர்களும் அவற்றைக் கவர்ந்து கொள்ளாதவாறு காப்பாற்றும் படியான துன்பம் வந்து சேரும். அரசனாக இருந்தால் தன்னைக் காட்டிலும் மேம்பட்ட அரசனால் துன்பம் வந்து சேரும். உலகம் முழுதும் ஒரு குடைக்கீழ் ஆளுகின்ற பேரரசனாக இருந்தாலும் நோய், சாவு ஆகியன வந்து சேருமே என்ற பயத்தாலும், மறுபிறவியில் என்ன உண்டாகுமோ என்ற பயத்தினாலும் வாடித் துன்பம் அடைவான்”.

## சொர்க்க இன்பமும் இல்லை என்று உரைத்தல்

**84.** **மாகர்க்கு அசுரர் பகைஉளது**
**மகிழ்ச்சி வாட்டம் மிகவும்உளது**
**ஆகத்து அகலா நோயும்உளது**
**அனங்கன் உளது நசைஉளது**
**போகத்து அழுந்தல் மிகஉளது**
**பொன்றல் உளது கற்பத்தே**
**சோகத் திறங்கள் இவைஉடைய**
**துறக்கத்து என்னை சுகம்உளதே.**

“சொர்க்கத்தில் தேவர்களுக்கு அசுரர் பகை உண்டு. மகிழ்ச்சியும் உண்டு, வாட்டமும் மிகுதி உண்டு. உடம்பில் அகலாத நோய் உண்டு. மன்மதனால் துன்பம் ஏற்படும். அது வேண்டும், இது வேண்டும் என்னும் அளவற்ற ஆசை இருக்கின்றது. இன்ப வடிவமான போகத்திலும் துன்பம் இருக்கின்றது. உலகம் அழிகின்ற காலத்தில் இறத்தலும் இருக்கின்றது. பற்பல இன்ப துன்ப வகையாகிய இவற்றை உடைய சொர்க்கத்தில் என்ன இன்பம் இருக்கின்றது?”

## எந்தப் பிறப்பிலும் இன்பம் இல்லை

85. தேவர் மனிதர் துன்பத்தின்
திறங்கள் இவ்வாறு ஆகியிடில்
ஆவ கீழாம் மிருகம்முதல்
அசரம் ஈறாம் ஐவகையில்
ஓவல் இல்லாத் துன்புக்குஓர்
உவமை இல்லை நிரயத்தில்
நோவத் துன்பம் சொல்வதுஎனை
நோயே பவத்தில் சுகம்வீடே.

"தேவர், மனிதர் ஆகியோரின் துன்ப வகைகள் இவ்வாறு இருந்தால் தாழ்ந்தவைகளாகப் பிறக்கின்ற விலங்கு முதலாகத் தாவரங்கள் ஈறாக உள்ள ஐவகை* உயிர்களுக்கு ஏற்படும் முடிவில்லாத துன்பங்களுக்கு உவமையே இல்லை. நரகத்தில் அடையும் வருத்தம் தரும் அந்தத் துன்பத்தை வரையறுத்துக் கூறுவது எவ்வாறு? இவற்றை நன்கு ஆய்ந்து காணும்போது பிறப்பிலே துன்பம் உண்டு. வீடே இன்ப வடிவாக இருப்பது".

86. இந்த இழிவை உடைய
இந்த மாயை அசத்தே
அந்த உயர்வை உடைய
அந்தப் பிரமம் சத்தே
தம்தம் மனதில் தேர்ந்தோர்
தள்ளி எஃதை நிற்பர்
உந்தன் மனதில் நன்றாய்
யூகித்து அமைச்ச பாராய்.

"மந்திரியே! அழியும் தன்மை உடைய இந்த மாயா உலகம் அசத்து. மேலானதான பிரம்மம் முக்காலத்திலும் நிலைத்திருப்பதால் சத்து என்று உணர்வாயாக. இதை நன்றாக ஆராய்ந்து உணர்ந்தவர்கள் எதைத்தள்ளி விடுவார்கள்? எதைச் சார்ந்திருப்பார்கள்?

* ஐவகைப் பிறவிகள் : மிருகங்கள், பறவைகள், நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம்.

அமைச்சரே! இதை நீயே நன்றாய் யோசித்து பார்த்து தெரிந்துகொள்". (மாயப் பிரபஞ்சத்தின் மீதுள்ள பற்றைத் தள்ளிவிட்டு பிரம்ம சொரூபத்தைச் சார்ந்திருப்பார்கள் என்பது கருத்து)

## கொள்ளத் தக்கதையும் தள்ளத் தக்கதையும் கூறுதல்

**87.** **பொய்என்று இதனை அறிந்தோர் பொருந்தி நிற்பதுஉளதோ**
**மெய்என்று அதனை அறிந்தோர் மேவாது இருப்பதுஉளதோ**
**ஐயம்உளதோ இதனில் அமைச்ச பாராய் நன்றாய்**
**உய்யஅறிவு இலாதோர் உழல்வர் நீக்க மாட்டார்.**

"இந்த மாய உலகம் பொய் என்று அறிந்தோர், இங்கு யான் என்னும் பற்றோடு சேர்ந்து வாழ்வது உண்டோ? அந்த பிரம்மமே உண்மையான பொருள் என்று உணர்ந்தோர் முயன்று அதனை அடையாமல் இருக்கின்றார்களா? அமைச்சரே இது பற்றி ஏதேனும் ஐயப்பாடு உண்டா? சம்சார பந்தத்தில் இருந்து தப்பிப் பிழைக்கத் தெரியாதவர்கள் இந்த மாயா உலகிலேயே வருந்துவார்கள். நான், எனது என்ற எண்ணத்தையும் நீக்க மாட்டார்கள்".

**88.** **பொய்யை மெய்என்று அறிந்து போதம் இன்மையாலே**
**மெய்யைப் பொய்என்று எண்ணி மெலிந்தே உழல்வர்உலகர்**
**பொய்யைப் பொய்என்று அறிந்து போத குருவின்அருளின்**
**மெய்யை மெய்என்று அறிந்தே மெலிவு தீர்வர் உயர்ந்தோர்.**

"தத்துவ ஞானம் இல்லாமையாலே உலகத்தார், பொய்ப் பொருளாகிய இந்த மாயா உலகத்தை உண்மைப் பொருள் என்று வருந்தி அலைவார்கள். உலகம் துயர வடிவானது என்று உணர்ந்தோர் அதன்பால் பற்று வைக்க மாட்டார்கள். ஞானகுருவின் அருளால் பொய்ப் பொருளாகிய இந்த மாய உலகத்தைப் பொய் என உணர்ந்து கொள்வார்கள். மெய்ப் பொருள்ஆகிய பிரம்மத்தை நிலையான பொருள் என எண்ணிச் சுகதுக்கங்களால் உண்டான வருத்தம் தீர்வர்".

**89.** **துன்பம் தோன்றில் எவரும் துறந்து ஏகராய்த் தனித்தே**
**இன்பம் தேடல் இயற்கை இன்பம் என்றே தோன்றில்**
**அன்பது ஆக நீங்கார் அவர்கட்கு எங்ஙன் கூடும்**
**நன்பரம ஞான நாட்டம் அமைச்ச சொல்லாய்.**

"அமைச்சரே! எவர்க்கேனும் குடும்ப பாரம் துன்பம் என்ற விவேகம் வருமானால் எப்படிப் பட்டவராயினும் அக்குடும்ப பாரத்தைத் துறந்து, தனித்து இருந்து அந்த இன்பத்தைத் தேட முயற்சி செய்தல் இயல்பே. குடும்ப பாரம் இன்பம் என்று எவர்க்கேனும் தோன்றினால் அதில் விருப்பம் மிகுந்து நீங்க மாட்டார்கள். அத்தகையவர்களுக்கு பிரம்மத்தைப் பற்றிய ஞானம் எவ்வாறு கைகூடும்? சொல்க!"

**90. இழிவை உணர்ந்தால் உயர்வை எவரும் தேடி நோக்கும்**
**இழிவை உணரார் உயர்வை எய்த நோக்கார் என்றும்**
**இழிவை இழிவுஎன்று உணர எந்தக் காலம் வாய்க்கும்**
**இழிவை உடையோர்க்கு அமைச்ச இதனை யூகித்து உணராய்.**

"அமைச்சரே, எவனாயினும் ஒருவன் உலகத்தின் இழிவை உணர்ந்தால் உயர்வான பிரம்மத்தை அடைய வேண்டுமென்று ஆசைப்படுவான். இம்மாய உலகத்தின் இழிவை உணராதவர் உயர்ந்த பிரம்மத்தை அடைய எக்காலத்திலும் எண்ண மாட்டார்கள். ஆசை, கோபம் முதலிய அகங்கார குணங்களை உடையோர்க்கு இம்மாய உலகத்தின் தன்மையை இழிவு என்று அறிந்திட எந்தக் காலம் வாய்க்குமோ? அமைச்சரே! சற்று சிந்தனை செய்வீராக".

**91. பேத வாதிகளைப் போல்பிர பஞ்சம் வேறு எனவே**
**ஈது அகன்றது அலவே எமைஅன்றிஅதுஇல் என்றே**
**போத விழியில் துறந்த புனிதத் துறவே கண்டாய்**
**சீத மதிபோல் குளிர்ந்து செனன வெப்பம் தீரும்.**

"ஈசனும், உயிரும் வேறெனக் கூறும் பேத வாதிகளைப் போல மாயா உலகம் பிரம்மத்தில் இருந்து வேறானது எனக் கொண்டால் இந்த மாய உலகம் நம்மை விட்டு நீங்காதது ஆகும். அதனால் நமக்கு எப்போதும் துன்பமே விளையும். பார்வைக்குக் கயிறு பாம்பாய்த் தோன்றுவது போல, எம்மை அன்றி ஏதும் இல்லை என்று உணர்ந்த ஞானப் பார்வையால், அம்மாய உலகத்தை விட்ட தூய துறவே சிறந்தது. அதனால் உள்ளம் நிலவு போல குளிர்ந்து பிறவி வெப்பம் அனைத்தும் நீங்கும்".

**92. இருந்த இடத்தில் இருந்தே எய்தலாம் என்று உரைக்கில்**
**திருந்து நிமல மனத்தோர்தீரர் எனினும் ஒழிந்தே**

**பொருந்துஏ காந்தத்தில் போதம் அடக்க வேண்டும்**
**வருந்தும் மனத்தோர்க்கு என்னை வாய்க்கும் அமைச்ச சொல்லாய்.**

"அமைச்சரே நீங்கள் இல்லறத்தில் இருந்து கொண்டே வீடு பேறு அடைய முடியும் என்று சொன்னீர். இல்லறத்தில் இருப்பவன் எவ்வளவுதான் தீரனாக இருந்தபோதிலும் குடும்பச் சுமையை இறக்கி வைத்து விட்டுத் தனி இடத்தில் இருந்து யான் எனது என்ற அபிமானத்தை விட்டு மனத்தை ஒடுக்கவேண்டும். குடும்பச் சுமையின் துன்பங்களில் உழல்பவருக்கு இந்த அமைதி கிட்டாது. அதனால் பரமானந்த நிலையை அடைவதற்கான சாதனைகளைச் செய்யமுடியுமா?"

93. **முனமே அனைத்தும் முடித்து முழுதும் உணர்ந்தோர் இல்லின்**
**இனமே சென்று நின்றும் ஏகம் நீங்கார் என்னில்**
**தினமே அகமாய் நிற்போர் செகத்தின் இயல்பை உணரார்**
**கனமாம் யாழ்ப்பா ணத்தின் கப்பல் ஓட்டம் போல.**

"முற்பிறப்பிலேயே தத்துவ ஞான சாதனங்கள் எல்லாவற்றையும் செய்து முடித்து, பரப்பிரம்மமே தமது வடிவாய் உணர்ந்த பெரியோர், இப்பிறப்பில் தமக்கு உறவாய் உள்ளவரோடு கூடி இல்லற தர்மத்தைக் கடைப்பிடித்தாலும் அனைத்தும் பிரம்மத்தின் வடிவம் என்னும் ஒரே எண்ணத்தில் இருந்து நீங்க மாட்டார்கள். இவ்வாறு கூறும் போது, தானே அதுவென்று உணர்ந்து நானே பிரம்மம் என்னும் பாவனையில் இருப்பவர் உலக நோக்கம் உடையவர் ஆவாரோ? தூத்துக்குடியிலிருந்து கப்பலில் ஏறி யாழ்ப்பாணம் செல்லும் பிரயாணிகளுக்கு தூத்துக்குடி சிறிது சிறிதாக மறைந்து யாழ்ப்பாணத்தின் கரை தென்படுவது போல உலக உணர்வை நீக்கியவனுக்கு, தானே பிரம்மத்தின் வடிவம் என்பது புலப்படும்".

94. **ஒருத்தன்ஓர்ஊர் உளனை ஒருவேந்து ஆக்கின் முன்னம்**
**இருக்கும் இடத்தை நீக்கி ஏக ராச தானி**
**இருக்கும் அன்றி முன்கண் இருக்கு மோதான் சொல்லாய்**
**திருக்கு ஞானம்* உடையோர் செகத்தை மெய்என்று உழலார்.**

---

* *திருக்கு ஞானம் = சாட்சிபாவனை*

“பெரிய வேந்தன் ஒருவன், ஓர் ஊரில் வசிப்பவனை அவன் மேல் உள்ள அன்பினால் ஒரு நாட்டிற்கு அரசன் ஆக்கினான் என்றால், அவன் முன்னே தான் இருந்த ஊரை நீக்கி விட்டு, அரசுக்கு உரிய தலைநகரில் இருப்பான். அதனை விடுத்து வேறு ஊரில் இருப்பானோ? இவ்வாறுதான் இல்லறத்தை விட்டுத் துறவறத்தில் இருப்பவர் மீண்டும் இல்லறத்தை மேற்கொள்வாரோ? ஞானிகள் இந்த உலகத்தை மெய் எனக் கருதி உழலமாட்டார்கள்”.

95. **மனையில் நின்றாலும் பொருள்உயிர்ச் சார்வின்**
**வருத்தனம் கெடுதலின் மகிழ்ச்சி**
**இனிமையில் வாட்டம் விடயஇன் பம்அதனில்**
**எள்துணை ஆயினும் ஆசை**
**பினைஅதில் தமது பிரவிர்த்தி தானும்**
**பேசும்இந் நான்கும்இல் எனினும்**
**தனைஉணர் வதற்குச் சாதகஞ் செய்யுங்கால்**
**தள்ளிஇல் நிற்றலே தகுதி.**

“இல்லறம் நடத்துபவனுக்கு மனைவி மக்களால் இன்பம் உண்டு. செல்வத்தினால் இன்பம் உண்டு. இவை இரண்டும் நீங்காமல் இருப்பதனாலேயே மகிழ்ச்சி உண்டாகும். இன்பம் தரும் பொருள் கிடைக்காவிட்டால் வாட்டம் உண்டாகும். போகங்களில் ஆசையும் அவற்றைப் பெறுவதற்குரிய முயற்சியும் இல்லறத்தானுக்கு எப்போதும் இருக்கும். இவை நான்கும் இல்லாவிட்டாலும் (மகிழ்ச்சி, வாட்டம், ஆசை, முயற்சி) ஆத்மாவை உணர்வதற்காக சாதனையில் ஈடுபடும் பொழுது இல்லறத்தைத் துறந்து விடுதலே ஒழுக்கமாகும்”.

96. **தீதுஉறு மனைஇன் பினைஇகழ்ந்து அந்தச்**
**செம்பொருள் இன்பமே வேண்டிச்**
**சாதகம் அதனில் தொடங்குகால் விடயம்**
**தடையதுஆம் சாத்திய மான**
**போதினில் அவையும் தோன்றிடாது அந்தப்**
**பொருவில்ஆ னந்தம்மேல் இடவே**
**ஆதலில் துறவுஇல் ஞானம்அஞ் ஞானம்**
**ஆகும்என்று அறைகுவர் பெரியோர்.**

“தீமை பொருந்திய இல்லற வாழ்வின் இன்பத்தை வெறுத்து, உண்மை இன்பமாகிய பேரின்பத்தை வேண்டி, அதற்குரிய சாதனங்களில் ஈடுபடத் தொடங்கும் காலத்தில் உலக விஷயங்களில் ஈடுபாடு தடையாகும். ஒப்பில்லாத அந்தப் பேரின்பம் மேலிட, உலக விஷயங்கள் இன்பமாகத் தோன்றிடாது. ஆகையால் துறவில்லாது இல்லறத்திலிருந்துகொண்டே அடையும் ஞானமானது அஞ்ஞானமே என்று பெரியோர் சொல்லுவர்”.

## துறவினால்தான் ஞானம் சிறந்து விளங்கும் இல்லறத்தினால் விளங்காது எனல்

97. இல்லறம் அதனில் உறைந்துளோர் இடத்தில்
இருப்பினும் ஞானம்கீழ் இரும்பின்
புல்லிய மாரத் தினம்என விளங்கும்
போக்கிஇல் லினைத்துறவு என்னும்
நல்அறம் அடைந்தோர் இடத்துஉறை ஞானம்
நல்தங்க மிசைரத்தி னம்போல்
எல்லையில் ஒளியாய் விளங்கிடும் ஆயின்
இல்சிறப் பன்றுஞா னிகட்கே.

“இல்லறத்தாரிடம் தத்துவ ஞானம் இருப்பினும், தாழ்ந்த இரும்பு ஆபரணத்தின்கண் பதிக்கப் பட்ட சிறந்த இரத்தினத்தைப்போல, ஒளியும் சிறப்பும் இழந்து தோன்றும். இல்லறத்தை விடுத்துத் துறவு என்னும் நல்லறத்தை அடைந்தோரிடம் தங்குகின்ற தத்துவ ஞானம், நல்ல பொன் ஆபரணத்தில் வைத்த இரத்தினம் போல், அளவற்ற ஒளி உடையதாய்த் தோன்றும். ஆதலால் ஞானிகளுக்கு இல்லற வாழ்வு சிறப்புத் தர மாட்டாது”.

## 98. துறவறமே சிறப்புடையது

முனம் அனைவர்களும் உறைவது இல்லம்
முத்தியை உணர்ந்த அறிஞர்களும்
பினம் அதில் நின்ற படியினால் சங்கை
பேசுவர் துறவுடையோரை
இனம் அதை விடுத்து இல்லறம் அதுவே
தலைஎன இயம்புவது உண்டோ

**மனமதில் இதனை யூகி நீ அமைச்ச**
**மகிமை அன்று இல்லம் ஞானிகட்கே.**

"எல்லோரும் மேற்கொண்டிருப்பது இல்லறம். இல்லறத்தில் இருந்துகொண்டே சாதனை செய்து முத்தியை உணர்ந்து விட்ட ஞானிகளும் உண்டு. சீவன் முத்தி நிலையை அடைந்த பின்னரும் இல்லறத்தில் இருக்கும் மனத்துறவு உடைய ஞானிகளைக் கூட மக்கள் சந்தேகித்துப் பேசுவார்கள். துறவறத்தைவிட இல்லறம் சிறந்தது என்று கூறுமுடியுமா? அமைச்சரே! இல்லறம் ஞானிகளுக்கு சிறப்பைத் தராது. இதைச் சிந்திப்பீராக".

## ஞானிகளின் இயற்கை கூறல்

**99.** **ஆடிய சகலம் அடங்கு கேவலமும்**
**அகற்றியே ஒளிப்படை கொண்டு**
**மூடிய இருளை முழுதையும் வீசி**
**முடிவில்வீடு அதனையே உணர்ந்தோர்**
**நீடிய ஞால மிசையினில் பாலன்**
**நிசம்மருள் உடையன்பேய் பிடித்தோன்**
**கூடிய குணத்தின் ஊரில்போய்க் குடியின்**
**கூலிஆளினின் இயல்பு அடைவார்.**

"நடைபெற்ற எல்லா அவத்தைகளும்* அடங்கி பலவிதமான சாதனைகளால் மனத்தை அடக்கி தத்துவஞானம் என்னும் ஒளி மிகுந்த வாளினால் கவிந்திருக்கும் அஞ்ஞானம் என்ற இருளைப்போக்கி முடிவாக சீவன்முத்தி என்ற நிலையை அடைந்தவர்கள் எப்படி இருப்பார்கள்? ஒன்றுமே தெரியாத சிறு குழந்தை போலவும், உண்மையாகவே பைத்தியம் பிடித்தவன் போலவும், பேய் பிடித்துத் திரிபவன் போலவும் காணப்படுவார்கள். ஊரிலுள்ளோர் ஏவும் எந்தப் பணியானாலும் முகம் சுளிக்காமல் கூலிக்கு வேலை செய்பவனைப்போலச் செய்வார்கள்".

---

* *அவத்தைகள் : விழிப்பு நிலை, கனவுநிலை, ஆழ்ந்த உறக்கம்.*

## ஞானிகள் இல்லறத்தை விரும்புவதில்லை

**100. வினைகள் ஓர்இரண்டும் சமமதாய் ஞானம்**
**மேலிடு காலையில் இந்த**
**மனைஇன்பம் கான்ற சோற்றிற் கண்டுஉவர்த்து**
**மாற்றியே கைவிட வருமேல்**
**தனைஉள படியே அனுபவம் அதனில்**
**தான்உணர்ந்து ஆனந்தம் அடைந்தோர்**
**பினையும்அவ் விடயம் பூண்பர்கள் எனவே**
**பேசுதல் வழங்குமோ சொல்லாய்.**

“நல்வினை தீவினையினால் வரும் பயன்களை சமபாவனையுடன் நோக்குபவர்களுக்கு ஞானம் மேலிடும். அந்த சமயத்தில் இல்லற இன்பம் கக்கின உணவு போல் தோன்றும். இல்லறத்தைக் கைவிட்டவர்கள் மீண்டும் உலக விஷயங்களில் ஈடுபடுவார்களா? (மாட்டார்கள்) தன்னை உணர்ந்து பேரானந்த நிலையை அடைந்தோர் மீண்டும் இல்லறத்தில் ஈடுபாடு கொள்வார்கள் என்று சொல்வது சரியாகுமா? அமைச்சரே! சொல்லுங்கள்!”

**101. விடயஇன்பு அதனில் நசைஉளோர் தமக்கும்**
**விரிவதாம் பேரின்பச் சுவையின்**
**அடைவினைச் செவியிற் கேட்ட அக்கணமே**
**அவற்றினை அகற்றிட வருமேல்**
**இடைமுதல் ஈறுஇல் ஞான ஆனந்தம்**
**எய்தினோர் களும்பினும் இந்தக்**
**கடைமனை வாழ்வை நினைவர்கள் என்றால்**
**கண்டனர் நகையரோ சொல்லாய்.**

“ஐம்புலன்களினால் அனுபவிக்கக் கூடிய சிற்றின்பங்களில் ஈடுபாடு உடையவர்கள் பேரின்பநிலை விவரிக்கக் கேட்ட கணத்திலேயே உலக இன்பங்களைத் துறந்துவிட முனைவார்கள். ஆதியும் அந்தமும் இல்லாத ஞானம் என்ற ஆனந்த நிலையை அடைந்தவர்கள் மறுபடியும் கீழான உலக வாழ்க்கையை விரும்புவார்கள் என்றால் கேட்போர் சிரிக்க மாட்டார்களா? சொல்லுங்கள்”.

102. பற்றுஇலை ஆயின் அவையினில் இருப்புஏன்
பழையஊழ் வினைஎனில் ஆசை
சற்றெனும் உதிப்பித் தல்லவோஊட்டும்
சகஇன்பில் இறையெனும் இச்சை
முற்றுஉணர் ஞானத் தோர்கள்பூண் பர்களோ
முடிவில் ஆனந்தமே பருகி
நிற்றலே மீட்டும் விழிப்பினும் கானல்
நீரில்கண்டு உள்முகம் அடைவார்.

"இல்லறத்தில் பற்று இல்லாத ஞானிகள் இல்லறத்தில் இருப்பதேனோ? அதற்குக் காரணம் பழையதான ஊழ்வினைப் பயன் என்று சொன்னால், சிறிது அளவேனும் விருப்பம் ஏற்பட்டு அல்லவோ அப்பொருள்களை அனுபவிக்கச் செய்யும். முழுமையாகத் தன்னை உணர்ந்த தத்துவ ஞானிகள் உலக இன்பத்தில் சிறிது அளவேனும் விருப்பம் கொள்வார்களோ? முடிவில்லாத ஆனந்தத்தை அனுபவித்து அந்நிலையில் நிற்றலே அவர்க்கு உரியது. சமாதி நிலையில் இருந்து உணர்வு நிலைக்கு வந்தாலும், இவ்வுலகைக் கானல் நீர் என எண்ணி, மீண்டும் உள்முகமாகச் சமாதி நிலை அடைவர்."

103. பவம்அதை இனிமை எனவெணி விடயம்
பற்றிநின்று உழன்றவர் தாமே
பவம்அதை இனிமை அல எனின்விடயப்
பற்றுஅறுத்து அருள்குரு அடைந்து
பவம்அதை அறுக்கும் நெறிஉணர்ந்து அருளின்
பரஇன்பம் அடைந்தவர் தாமும்
பவம்அதை இனிமை எனஎணின் அலவோ
பற்றுவர் விடயஇன்பு உரையாய்.

"இவ்வுலக வாழ்க்கை இன்பம் தருவதென எண்ணியவர்கள் வீடு தோட்டம் முதலான உலகப் பொருள்களின் மேல் பற்று வைத்து, இல்வாழ்வில் எப்போதும் சுழன்று வருந்துவார்கள். அவர்கள் உலக வாழ்வு இனிமை தராது என உணர்ந்து உலகப் பொருள்களின் மேல் உள்ள பற்றினை நீக்கிப் பிறப்பினைப் போக்கும் வழியை அறிந்து கொள்ள முயல வேண்டும். அப்படிப் பாவம் என்ற பந்தத்தை குருவின் அருளால் அறுக்கும் வழியைக் கண்டு கொண்டவர்கள் பேரின்ப நிலையை அடைவார்கள். இப்படிப்

பேரின்ப நிலையை அடைந்தவர்கள் "உலகப் பொருள்கள் இன்பம் தருவன" என்று நினைத்தால்தானே உலக இன்பத்தை விரும்புவார்கள்! சொல்வீர்".

104. கொடிமுதல் வாடும் வேர்முழு தினையும்
கோதுஅறக் களைந்திடில் களைந்தும்
படிமிசை கொடிபூ காய்பழம் ஓங்கல்
பகர்அதி சயம்அஃ தினைப்போல்
அடிநடு ஈறுஇல் பிரமம்தான் ஆகி
அகப்பற்றை அறுத்தவர் இடத்தும்
மடிவுறு மனையில் விரும்பியே நெஞ்சம்
வருத்தனம் ஆதல்என்று அறைவார்.

"ஒரு பூங்கொடியை வேரோடு பிடுங்கிய பிறகு மீண்டும் துளிர்த்து பூ, காய் பழங்கள் தருவது அதிசயம்." (துளிர்த்துப் பயன்தராது) "அதுபோல தானே பிரம்ம சொரூபம் என்று உணர்ந்து ஆசையை அறுத்தவர்கள் மீண்டும் விஷயங்களில் ஈடுபடுவது அதிசயம்". (ஈடுபடமாட்டார் என்பது கருத்து)

105. ஆணவம் அதனைத் தோய்ந்துஉட லினைநான்
ஆம்எனத் தினவெருவு அவையைப்
பேணலைச் சுகம்என்று உள்மகிழ்ந் திடுவோன்
பேரின்பத்து ஆசையது ஆகிப்
பூணஅஞ் ஞானம் இலைஅதின் ஞானம்
பொருந்திஅச் சொரூபம்தான் ஆகி
ஏணஆ னந்தத்து அழுந்துவோன் விடயம்
எய்திடில் ஞானமே இலையால்.

"ஒருவன் அஞ்ஞான இருளில் மூழ்கி தன் உடலையே தான் என்று நினைத்துக்கொண்டு அழியக் கூடிய இவ்வுடலைப் பேணுவதற்குத் தேவையான காணி, மனை முதலியவற்றைத் தேடி அதைப் பேணுவதே சுகம் என்று மகிழ்ந்திருக்கிறான். அவனுக்குப் பேரின்ப நாட்டம் வந்ததும் அஞ்ஞான இருள் விலகி விடுகிறது. அப்படிப் பூரண ஞானம் பெற்றவன், நிலைபெற்ற ஆனந்தத்தில் அழுந்தியவன், மறுபடியும் உலக சுகங்களில் பற்றுக் கொண்டு சிற்றின்பத்தை விரும்பினால் அவன் தத்துவ ஞானத்தை மறந்த படியால் ஞானி ஆகமாட்டான்."

106. களவதனில் உணர்வுஇலது காணும்தனு
ஆதிகளைக் கருதியே நின்று
உனும்அவரின் இதுகனவுஎன்று உணர்ந்தவர்கள்
நசைஇலதின் உலகு தன்னில்
தனதுசுய உருவதனை அனுபவத்தில்
தான்உணர்ந்துஇச் சகமது எல்லாம்
மனம்அதனில் சாலம்என உணர்ந்தவன்இவ்
வுலகின்பின் மையல் நீங்கும்.

"கனவில் தோன்றும் காட்சிகள் மெய்யல்ல என்பதை உணர்கிறோம். அதுபோல உலகத்தில் தோன்றும் காட்சிகள் எல்லாம் கனவுதான், மெய்த் தோற்றமல்ல என்று உணர்பவர்கள் இவ்வுலக வாழ்க்கையை விரும்புவதில்லை. தன்னுடைய சுய வடிவம் "சச்சிதானந்த ரூபம்" என்று அனுபவித்து உணர்ந்த ஞானிகளுக்கு இந்த மாய உலகில் தோன்றுவதெல்லாம் இந்திரஜால வித்தை போலத் தோன்றும். அதனால் ஆசை நீங்கிவிடும்."

107. கதிரவன்முன் இருள்இருக்கும் நயனமுடை
ஒருவன் குழிக் கண்ணே வீழும்
அதிகவலிச் சூரன்அமர்க் களத்துவெரு
வுவன்கிருத* நறை*அக் காரம்*
இதம்உளபா யசமும்நிரம்ப அருந்தினன்கூழ்
தனில்செய்வன் இச்சை என்றால்
விதம்இவைநான் கினுக்கும்குறை அதில்ஞானிக்கு
இழுக்குஆகும் விடயம் சென்றால்.

"சூரியனுக்கு முன்னே இருள் இருக்குமாயின், நல்ல கண்ணுள்ள ஒருவன் குழிக்கண் வீழ்வான் ஆயின், அதிக வலிமை பொருந்திய வீரன் ஒருவன் போருக்கு அஞ்சுவான் ஆயின், நெய், தேன், சர்க்கரை ஆகியன சேர்த்துப் பக்குவமாய்ச் செய்யப் பட்ட பாயாசத்தை நிறைய உண்ட ஒருவன் கூழை விரும்புவான் ஆயின், இச்செயல்கள் நான்கினுக்கும் குறைவுண்டாம். அதைப்போலத் தத்துவ ஞானிக்கு, அவன் மனம் உலகப் பொருள்களின் மேல் ஆசை கொள்ளுமானால் இழுக்கு ஏற்படும்."

---

* கிருதம் = நெய். * நறை = தேன். * அக்காரம் = சர்க்கரை.

108. இங்குஉறைந்த பாண்டம்அதின் வாதனையில்
வாதனைகள் இருக்கும் என்றல்
துங்கஅறி வுடையோர்கட்கு இன்றியமை
யாததொழில் தொடங்கி நிற்றல்
அங்கியைத்தம் பனவல்லார்க்கு அனல்சுடாத
தின்வினைகள் அடுக்கா என்றல்
தங்கும்வினைக்கு ஏதுவாம் விடயம்அதில்
விருப்புஆதி சாரா என்றல்.

"உயர்ந்த அறிவுடைய ஞானிகளுக்கு, பெருங்காயம் இருந்த பாண்டத்தில் உள்ள வாசனைபோல, உலக வாசனை தேக வாசனை சாத்திர வாசனை ஆகிய வாசனைகள் இருக்கும் என்று நீ நினைக்காதே. அவர்கள் அந்த வாசனைகள் இல்லாமலே உலகிற்கு வேண்டிய செயல்களைச் செய்யத் தொடங்குவார்கள். அவ்வாறு தொடங்கி அந்நிலையில் நிற்பது இன்றியமையாத கடமை. மந்திரத்தினால் நெருப்பைக் கட்ட வல்லவர்களுக்கு, அந்நெருப்பு சுடாமல் இருப்பது போல, அந்தச் செயல்கள் அவர்களைக் கட்டுப்படுத்தாது. அவர்கள் செய்யும் கர்மாக்களின் பலன்கள் ஞானிகளைப் பற்றாது."

109. உணர்வுடைய ஞானிஎவை புரிந்திடினும்
இழிவுஇல்இழிவு உரைத்த தாகின்
இணையில் இரு தீயன்என்பர் யூகம்இல்
அதனால்மற்ற எவைகள் செய்தும்
அணைவுஅதில்தாழ் வெனும்அவனே தீயன்மிக
ஞானம்அதற்கு ஆகும் தாழ்வால்
நணுகின்அன்றோ ஞானம்ஒரு வனைஞானி
எனப்பெயரும் நண்ணி நிற்றல்.

"சீவன் முத்தனான ஞானிக்கு எந்தச் செயல் செய்தாலும் இழிவில்லை. (கர்ம பலன் அவருக்கு இல்லை) ஞானியின் செயல்களைப் பழிப்பவனே இழிந்தவன். அறியாமையினால் தன்னலத்தோடு உலக பந்தங்களில் உழன்று அவற்றின் பயன்களை அனுபவிப்பவன் கொடியவன். அறிவில்லாதவனுக்கு விளங்காததால் ஞானத்துக்கோ ஞானிக்கோ ஏதேனும் தாழ்வு உண்டாகுமா? (ஆகாது என்பது கருத்து) ஞானத்தை விரும்பி சாதனைகள் செய்து பூரண ஞானம் பெற்றால் அல்லவா அவனுக்கு ஞானி என்ற பெயர் கிடைக்கும்."

**110.** **கருவயிற்றை உடையதுவும் கனவயிற்றை**
**உடையதுவும் கருதிப் பெண்ணின்**
**உருவதனைக் குறிப்பதின்நோக் கிடில்தோன்றும்**
**உளபடியே உலகு தன்னில்**
**குருவைஅடைந்து அவன்அருளில் சொரூபத்தை**
**அனுபவமாக் குறித்து ளோரும்**
**இருவையத்து இடம்பமாய்த் தமைஞானி**
**என்போரும் ஏதில் தோன்றும்.**

"கருக்கொண்ட வயிற்றை உடைய உடம்பும், மகோதரம் என்ற வியாதியினால் கனமான வயிற்றைக் கொண்ட உடம்பும், பெண் வடிவத்தைக் குறிப்பால் பார்க்கும் போதே விளங்கும். உள்ளபடியே இவ்வுலகத்தில் குருவை அடைந்து அவன் அருளாலே தமது உண்மை வடிவத்தைச் சமாதி நிலையில் இருந்து கண்டவருக்கும், பரந்த உலகத்தில் பிறர் தன்னை மதிக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் பொய்யாக ஞானிபோல ஒழுகுபவர்களுக்கும் உள்ள வேறுபாடு பார்த்த உடனேயே தெரிந்துவிடும்."

**111.** **அருச்சுனற்கும் இராமருக்கும் அதிகாரம்**
**அவைபார்த்தே அறைந்த நூலின்**
**கருத்துஅறியாய் ஞானம்ஒன்றே பிரமாணம்**
**சரிதைஅது கணக்கன்று ஆகும்**
**விருத்தம்அறிவு ஆசாரம் உடையோனே**
**ஞானிஇல்லோன் விருத்தன் ஆகும்**
**திருத்தமுடன் அமைச்சஇது துணிவுஎன்றே**
**உட்கொள்வாய் தீரன் ஆகி.**

"அருச்சுனனுக்கும், இராமபிரானுக்கும் அரசர்களுடைய பக்குவங்களை நோக்கி முறையே கண்ணபிரானும், வசிட்டரும் கூறிய பகவத் கீதை, ஞான வாசிட்டம் ஆகிய நூல்களின் கருத்தையும் அமைச்சனே நீ அறியாது இருக்கிறாய். ஞானம் ஒன்றே அறியவேண்டியது. வரலாறு முக்கியம் அல்ல. போகங்களில் நாட்டம் கொண்டு பொருள் ஈட்டும் ஆசைகளைத் துறந்து, தத்துவ விசாரமும் ஒழுக்கமும் உள்ளவனே ஞானி. இவை இல்லாதவன் அஞ்ஞானி என்பதை நிச்சயமாக நீ உணர்ந்து கொள்."

## மகாராசன் சமாதியில் இருக்க மந்திரி கண்டு வியப்புறல்

112. என்றுஅங்கு அநேக மாய்விரித்தே
இராச யோகி உரைசெய்து
நின்று வாக்கு தனைஅடக்கி
நிமிடத்து அகற்றி மனத்தினையும்
ஒன்றும் இல்லா வெறும்பாழாய்
ஒன்றாம் சமாதி தனைஅடைந்தான்
நின்றஅங்கு அமைச்சன் இதுகண்டுஇந்
நேர்மை புதிதுஎன்று அதிசயித்தான்.

இராச யோகியான மகாராசன், இவ்வாறு பலவிதமாய் ஞான நூல்களின் சாரத்தை விரித்துச் சொல்லி, யோக சாதனத்தில் நிலைத்துப் பேச்சை அடக்கி, ஒரு கணப் பொழுதில் உலகப் பொருள்களின்மேல் பற்றுள்ள மனத்தை நீக்கி, ஒருமுகப் படுத்தி, ஒன்றும் தோன்றாத வெறும் சூனியமாய் விளங்கும் சமாதி நிலையில் இருந்தான். அங்கு நின்ற அமைச்சன் இதனைக் கண்டு, "இந்த சமாதி நிலை புதியது" என்று வியப்படைந்தான்.

## மந்திரி அரசனின் தன்மையை மக்களிடம் கூறுதல்

113. இந்த உணர்வு நமக்குஇன்னம்
எய்தல் இல்லை நாம்இங்கே
எந்த உணர்வு கொடுநிற்பேம்
என்ன அமைச்சன் யூகித்து
வந்த வழியே தான் திரும்பி
வளப்பம் உடைய மாபுரிக்கே
பந்தம் உடையோர் உடன்இருந்து
பகர்ந்தான் அரசன் இயற்கைஎல்லாம்.

இந்த ஞானம் நமக்கு இன்னும் உண்டாகவில்லை. ஆதலால் நாம் எந்த அறிவைக் கொண்டு இவ்விடத்தில் இருப்போம் என்று எண்ணித் தான் முன்பு வந்த வழியாகவே மாபுரிக்கு திரும்பிப் போய், அரசனின் உறவினர்பால் தங்கி இருந்து, அரசனின் ஞான யோகத் தன்மைகளை எல்லாம் அமைச்சன் அவர்களுக்குக் கூறினான்.

## அரசனின் உறவினர் வந்து அரசனைக் காண, அவன் பேசாதிருந்தமையால் அவர்கள் திரும்பிச் செல்லுதலும், அரசன் வீடு பேறு அடைதலும்

114. கேட்ட பேர்கள் மிகவியந்து
கிட்டாது என்றும் இம்முனிபோல்
தேட்டம் உடனே அவரவர்கள்
தேடி வந்து பணிந்திடவும்
வாட்ட முடனே தாய்தந்தை
மனையாள் பதத்தில் வீழ்ந்திடவும்
நாட்டம் மாறு பாடின்றி
நகைசெய்து இருந்தான் நற்றவனே.

அமைச்சன் கூறியதைக் கேட்ட உறவினர்கள் மிக வியந்து, இந்த முனிவரைப் போல் உயர்ந்தவர் கிடைக்க மாட்டார் என்று மகாராசனைக் காணும் விருப்பத்தோடு அவரவர்களும் தேடி வந்து வணங்கினார்கள். பின் சோகத்துடன் அவனுடைய தாய், தந்தை, மனைவி முதலியோர் அவன் திருவடியில் வீழ்ந்தனர். அது கண்டு நற்றவனும் மனம் பிறழாமல் சஞ்சலமில்லாமல் புன்னகையோடிருந்தான்.

115. வந்த பேர்கள் உடன்வார்த்தை
மலராது இருப்பது அவர்அறிந்து
பந்தம் உடையேம் நமக்குஎன்னை
பகர்ந்தால் தோன்றும் எனத்திரும்பித்
தம்தம் இடத்தில் சென்றார்கள்
தவனும் சிறிது நாள்கழித்துத்
தொந்தம் ஒன்றும் இல்லாத
சுயமாம் முத்தி தான்ஆனான்.

தம்மிடம் அவன் பேசாது இருத்தலை உணர்ந்து, "நாம் உலகப் பற்று உடையவர்களாய் இருக்கின்றோம். நமக்கு அவர் ஏதேனும் கூறினால் என்ன புரியப் போகிறது?" என்று திரும்பித் தம் இருப்பிடம் சென்றார்கள். அவ்வாறு சென்ற பின் தவத்தோன் ஆகிய மகாராசனும், சிறிது நாள்வரை அசைவற்ற சமாதியில் இருந்து, தன் வாழ் நாட்களைக் கழித்துப் பின் விருப்பு வெறுப்பு, சுக துக்கம், பாவ புண்ணியம் என இரண்டிரண்டாக உள்ளவற்றின் மேல் பற்று இல்லாத வீடுபேற்றை அடைந்தான்.

## நூல் பயன்

116. இந்தமா ராசன் சென்ற இதிகாசம் தன்னைப் படிப்போர்
சிந்தனை ஒன்றும் இன்றித் தீரவே துறவர் ஆகி
அந்தமும் ஆதி இல்லா அமலமே வடிவம் ஆவர்
எந்தமை அருளின் ஆண்ட எழில்குரு பரையே வாழி.

இந்த மகாராசன் என்ற யோகி வீடுபேறு அடைந்த வரலாற்றினைப் படித்து உண்மையைக் காண்பவர், வேறு உலக நினைவு சிறிதும் இன்றி, துறவுடையவர்கள் ஆகி, முடிவும் முதலும் இல்லாத தூயதான பிரம்மம் தானே என்று அறிவார்கள். எங்களை அருளின் காரணமாக ஆண்டு கொண்ட அழகு பொருந்திய குருவாம் தன்மை வாய்ந்த பார்வதியாகிய பெரிய நாயகி வாழ்க.

(தேவி உபாசகர் ஆனபடியால் நூலாசிரியர் குமாரதேவர் "அன்னை பெரிய நாயகியை" பரையே வாழி என்று வாழ்த்தி முடிக்கிறார்)

## துறவின் உயர்வு

117. அரியது துறவறம் அல்லது இல்லையால்
மருவிய துறவறம் ஒருவி மன்னனாய்
உருகெழு முடிகவித்து உலகம் ஆள்வது
பெருவிலை மணியினைப் பிண்டிக்கு ஈதலே.

மனிதர்கள் அடைய வேண்டிய அரிய பொருள்களில் துறவறமும் ஒன்று. இதைத் தவிர வேறு ஒன்றில்லை. இதனைக் கைக்கொண்டு முத்தி அடைந்த பெரியோர்கள் துறவறத்தை விட்டு நீங்கி, அரசனாகி, ஒளிவிடும் முடியைத் தலையில் தாங்கி, உலகை ஆண்டு தன் ஆத்ம சத்தியை வீணாக்குவது விலை மதிப்புள்ள மணி ஒன்றைப் பிண்ணாக்குக்கு ஈடாகக் கொடுப்பதை நிகர்க்கும்.

## மகாராஜா துறவு தெளிவுரை நிறைவுற்றது

# முகவுரை

வீர சைவ ஞானியான சாந்தலிங்க அடிகளார், பேரூர்த்திருமடத்தின் ஆதி குரு முதல்வர் ஆவார். இவருடைய வரலாறு, வண்ணச்சரபம் தண்டாயுதபாணி சுவாமிகளால், ''புலவர் புராணம்' எனும் நூலில் பாடப்பெற்றுள்ளது. பேரூர்த்திருமடம் கோயமுத்தூருக்கு அருகில் உள்ளது. தற்போது, தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம் என அழைக்கப்படுகிறது.

கன்னடதேச அரசராயிருந்து, பின்னர் துறவறம் மேற்கொண்ட குமாரதேவர், சாந்தலிங்க சுவாமிகளின் முதல் மாணவராவார். விருத்தாச்சலத்திலுள்ள திருமுதுகுன்றம் குமாரதேவர் திருமடத்தின் குருமுதல்வரான இவர், ''மகாராஜா துறவு'' எனும் நூலின் ஆசிரியர்.

மக்கள் ஞானநெறி எய்தும் வண்ணம், சாந்தலிங்க சுவாமிகள், ''கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார்'' எனும் நான்கு நூல்களை அருளிச் செய்துள்ளார். குமாரதேவ சுவாமிகளின் மாணவரான சிதம்பர சுவாமிகள், சாந்தலிங்கரின் நான்கு நூல்களுக்கும் உரை எழுதியுள்ளார்.

இந்நூல் சாத்திரம், தோத்திரம் என இரு பகுதியாய் இயற்றப்பட்டுள்ளது.

''சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரிஇ
நன்றின்பால் உய்ப்பது அறிவு,''

என்று திருவள்ளுவர் கூறி அருளியபடி மனம் அதுபோன போக்குகளில் போகவிடாமல், உலகப் பொருள்களின்மேல் வைத்த பற்றினைவிட்டு ஈசுவரனின் திருவடியையே பற்றவேண்டும் என்று வலியுறுத்திக் கூறுகின்றது, இந்நூல்.

ஞான மார்க்கத்தில் ஈசுவர கிருபை, குரு கிருபை, சாத்திரக் கிருபை, அந்தக்கரண கிருபை ஆகியவை அவசியம். இந்நூலின் சாத்திரப்பகுதி அந்தக்கரண கிருபையையும், தோத்திரப்பகுதி ஈசுவர கிருபையையும் பெற வழிகாட்டுகிறது.

இந்நூல் கோவிலூர்த் திருமடத்தில் ஆரம்பம் முதல் பாட நூலாக அச்சிடப்பட்டு வந்துள்ளது. இந்நூல் வெளிவர முதல் காரணமாக இருந்த பேரூர் சாந்தலிங்க அடிகளார் திருமடத்திற்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

## கணபதி வணக்கம்

1. **முக்கண் இறைதரு கரியை முன்நடத்திப் பின் அதன் தாள்**
**பக்கம் மறைந்து ஏகுநர் வெம்பாச இகல் நாசமுற**
**மிக்க அமர் விளைத்து இளையா வீரர் எனப் பூரண ஊர்ப்**
**புக்கு இணையில் பரானந்தப் பூவையையும் மேவுவரால்.**

சூரியன், சந்திரன், அக்கினி என்று சொல்லப்படும் மூன்று கண்களை உடைய சிவபெருமான் கொடுத்த யானை முகத்தனை முதலில் நினைத்து வணங்குவோம். அவருடைய பாதங்களில் சரணடைந்து துதிப்பவர்களின் கொடிய பாசம் என்ற பகையை நாசம் செய்வார். (விருப்பு, வெறுப்பு முதலிய துக்கங்களைத் தரும் பாசத்திலிருந்து நம்மை மீட்பார்) பாசம் என்ற பகைவனுடன் தொடர்ந்து சலிப்படையாமல் யுத்தம் செய்து வெல்பவர்கள் சிறிதும் களைப்படையாமல் வீடுபேறு என்ற ஊரை அடைந்து இணை இல்லாத பேரானந்தத்தை அடைந்து உய்வார்கள்.

## சபாபதி வணக்கம்

2. **அம்பல வாணன் அடி இணை தொழுவார்க்(கு)**
**இன்பமும் வீடும் எளிதினில் வருமே.**

திருச்சிற்றம்பலத்தில் நடனமாடும் நடராஜப் பெருமானின் திருவடிகளைத் தொழுபவர்களுக்கு பேரின்ப நிலையும் முக்தியும் சுலபமாகக் கைகூடும்.

## விநாயகர் துதி

3. ***நிம்ப நிழற் களிறு அம்பொன் மலர்த்தாள்**
**நம்புது முத்திநல் இன்பம் வரற்கே.**

---

* *நிம்பநிழற் களிறு – திருப்போரூரில் எழுந்தருளியுள்ள வேம்படி விநாயகர்.*

வேப்ப மரத்தின் நிழலில் வீற்றிருக்கும் யானை முகத்தானின் அழகிய பொன்னடிகளை நம்புவோம். முக்தி என்ற பேரின்ப நிலையை அடைவோம்.

## சுப்பிரமணியர் துதி

4. சமர புரிக்குகன் விமல மலர்த்தாள்
எமதுளம் வைக்குதும் * மும்மலம் அறற்கே.

சமரபுரியில் குடிகொண்டுள்ள முருகப்பெருமானின் தூய பாத மலர்களை எம் உள்ளத்தில் வைப்போம். மும்மலம் என்ற நமது பிறவியின் அழுக்குகள் (தோஷங்கள்) நீங்க அவனைத் தொழுவோம்.

## குருபரம்பரை வணக்கம்

5. *மறைமுடியதனில் விளங்கிடும் ஒளியே
மனிதரைப் போல வந்து எனது
சிறை தவிர்த்து ஆண்ட சிவப்பிரகாச
தேசிகன் தன்னை மற்று அவன்தன்
நறைமலர் அடியைப் போற்றிடும் சாந்த
நாயகன் தன்னை மற்று அவன் தன்
இறையருள் பெற்ற பழனி மாமுனியை
நெஞ்சினுள் இருத்தியே பணிவாம்.

வேதாந்தங்களின் முடிவான வேதாந்த ஒளியாக விளங்கும் சிவப்பிரகாச தேசிகர் மனித உருவில் வந்து என்னை அஞ்ஞானம் என்ற சிறையிலிருந்து மீட்டு ஆட்கொண்டார். தேன் சொட்டும் மலர்களால் அர்ச்சிக்கப்பட்ட அவருடைய பாதங்களைப் போற்றி மகிழ்பவர் சாந்தலிங்க சுவாமிகள். அவருடைய பரிபூரண அருளைப் பெற்ற பழனி மாமுனி என்ற பழனி சுவாமிகள் இந்த மாதவத்தோரை மனத்தினால் சிந்தித்துப் பணிகிறேன்.

---

* *மும்மலம் – ஆணவம், மாயை, கர்மவினை.*
* *மறைமுடி – வேதாந்தம்.*

## நூலாசிரியர் துதி

**6. போந்து எம் உயிர்க்கு உயிராய் துணையொத்த**
**சாந்தையர் தம்பதம் ஏந்து கருத்தே.**

என்னுடைய உயிர்க்கு உயிராகவும், துணையாகவும் இருந்து கொண்டு என்னை ஆட்கொண்ட சாந்தலிங்க சுவாமிகளின் அடி இணைகளை, என் நெஞ்சமே! உன் மனத்தில் எப்போதும் இருத்திக்கொள்வாய்.

(இந்த ஆறு துதிகளும் உரையாசிரியர் தவத்திரு. சிதம்பர சுவாமிகளால் இயற்றப்பட்டது.)

ஓம்

# வைராக்கிய சதகம்

பஞ்ச பூத காரியமாகிய உடம்பினையும் ஞானேந்திரிய கருமேந்திரியங்களையும் இது நான் அல்ல என்று நீக்கி அதன் பின்னர் அந்தக்கரணங்களையும் இது நான் அல்ல என்று நீக்கத் தொடங்கும் பொழுது அவைகளுள் மனமானது நீங்காது விவேகத்தை தன் வயப்படுத்தி தனக்கு விருப்பமாய் உள்ளவற்றில் இழுத்துச் சென்றது. முன்னைப் பழக்கத்தால் அவ்வாறு உலக விடயங்களில் மனம் செல்லுவதை விவேகம் அறிந்து மனம் விடயப்பற்றை விடுவதற்கு அறிவுரை சொல்கிறது. மனம் பற்றிய பற்றுக்கள் யாவும் இவை, இவை என்று அறிந்து, மனதிற்கு அதில் உள்ள குற்றங்கள் யாவற்றினையும் விளக்கி, அந்த பற்றுக்களில் இருந்து மனதை விடுவித்து அதனை தன்வயம் ஆக்குதல் பொருட்டு மனதை நோக்கி விவேகம் கூறுகின்றது.

1. வாழி நெஞ்சமே சென்றிடேல் நின்றுஇதுஓர்
வார்த்தைஎற்கு உரைசெய்வாய்
கீழ்இ யாம்இயற்று உயர்தவத்து இவ்வுடல்
கிடைத்ததுஅன் றோமற்றுஈது
ஊழி காலம்இங்கு இருக்குமோ நீயும்ஓர்ந்து
உளைஎனின் உளபோழ்தே
சூழும் ஏழ்பவம் துடைத்தல்செய் யாய்இதுஎன்
தொழுதுஅரன் துணைத்தாளே.

“நெஞ்சமே! நீ வாழ்வாயாக! அலையாமல் நின்று எனக்கு ஒரு பதில் சொல். பல பிறவிகளில் செய்த தவப்பயனால் அல்லவா இந்த மானிட தேகம் கிடைத்தது! இந்த உடல், உலகம் முடியும் வரையில் இருக்கப்போகிறதா? இந்த உண்மையை நீ உணர்ந்தாயானால் சிவபெருமானைத் தொழுது ஏத்துவாயாக. இந்த உடல் உள்ளபோதே ஈசனின் திருவடிகளை வணங்கி தொடர்ந்து வரும் ஏழு பிறவிகளையும் நீக்கிக் கொள்வாயாக.”

2. தாளை யேதரம் அறிகிலாது எமக்குஎளி
தருசிவப் பிரகாசற்கு
ஆள்இ யாம்எனத் திரிந்தவன் பணிபுரிந்து
அரியவீடு அடைகில்லாய்

**கேள்ஐ யோமனை ஆதிய அளற்றிலே**
**கிடந்துஉழைந் தனைநெஞ்சே**
**நாளை ஓலையும் தூதரும் வரின்இவர்**
**துணைகொலோ நவில்வாயே.**

நாம் பக்குவம் உடையவரா? இல்லாதவரா? என்று ஆராய்ந்து பாராது தம்முடைய திருவடிகளை நமக்குத் தந்த சிவப்பிரகாச சுவாமிகளின் அடிமை நாம் என்று பலரும் சொல்கின்றனர். அவருடைய திருவுளப் பாங்கறிந்து நடந்து கொண்டு பணிவிடை செய்து அரிய வீடுபேற்றை அடைந்தாயில்லை. மனைவி முதலான குடும்பச் சேற்றில் கிடந்து வருந்துகிறாய். நாளை உயிரைக் கவர்ந்து செல்ல தமது ஓலையுடன் எமதூதர்கள் வரும் போது மனைவி முதலியோர் துணை ஆவார்களோ?

3. **நவிலின் இம்மனை மக்களுக்கு ஒருதுணை**
**நாம்அலது இலைஎன்றே**
**கவலை உற்றுஅரன் தாள்மறந் தனைஉனைக்**
**காலனார் கொடுபோயின்**
**குவல யத்துஅடைந்து இவரைநாள் தொறும்புரந்**
**திடுவையோ குறிக்குங்கால்**
**சவலை நெஞ்சமே சிவன்அலாது உயிர்க்குஉயிர்**
**தானும்ஓர் துணைஆமே.**

மனைவி, புதல்வர் முதலியோர்க்கு நம்மைத் தவிர வேறு துணை இலர் என்று கருதி நீ சிவனது திருவடியை வணங்க மறந்தாய். உன்னை அந்த எமன் கொண்டு செல்லும் போது உலகிற்கு மறுமுறையும் நீ வந்து மனைவி முதலியோரைக் காக்க இயலுமா? முதிர்ச்சி அடையாத நெஞ்சமே! உயிரினங்களுக்குச் சிவனே துணையன்றி மனிதர்கள் துணைவர் ஆகார். (நமக்குப் பகை அஞ்ஞானமே. துணையாவது ஈசன் திருவடிகளே என்பது கருத்து)

4. **துணைஅது ஆய்எமைத் தொடர்தரு தொடர்பரன்**
**தொல்கழல் துணைஅல்லாது**
**உள்நைவு செய்துஅடும் இகல்அதுஅஞ் ஞானம்என்று**
**உள்ளவாறு உணராய்மற்று**

**இணைஇல் நெஞ்சமே பகைஇவர் உறவுஇவர்**
**எனவினை வழியேவந்து**
**அணைவ சீவரை உனிமுனி ஆதிய**
**அடுத்துஎனைக் கெடுத்தாயே.**

படைப்புத் தொடங்கி வீடுபேறு அடையும் நாள் வரை நமக்குத் துணையாக கணமும் நீங்காதிருக்கும் தொடர்பு உயிருக்கு உறவாகிய சிவனது திருவடிகளே என்பதை உள்ளபடி நீ அறியவில்லை. இணை இல்லாத என் நெஞ்சமே! இருவினை வழி வந்து சேர்ந்த உயிர்களை இவர் பகைவர், இவர் உறவினர் எனக் கருதி வெறுப்பு விருப்புடன் விவேகமான என்னையும் கெடுத்தாய்.

5. **கெடுவது ஆம்பொருள் செல்வமே பல்வகைக்**
**கிலேசம்மற்று அதுதன்னை**
**விடுவ தேசுகம் எனவும்ஓர்ந்து இலைஇனம்**
**விடுத்துளோர்க்கு உனைப்போலும்**
**நெடிய யூகம்அது இல்லையோ சொல்லுதி**
**நெஞ்சமே இனிப்பற்றற்று**
**அடைது மேல்அரன் அருளையே பொருள்என**
**அருஞ்செல்வம் அதுதானே.**

அழிந்து போகும் பொருள் செல்வம் ஆகுமா? ஆகாது. அது பல்வேறு வகையாய்த் துன்பம் தரும். அந்தப் பொருளைக் கை விடுவதே இன்பம். மேலும் முன்பு பொருளைக் கை விட்டவர்க்கு உன்னைப் போன்ற கூர்மையான புத்தி இல்லையோ? நெஞ்சமே! இனி செல்வங்களின் மேல் வைத்த பற்றினை நீக்கிச் சிவனருளே சிறந்த பொருள் என அடைவோம். அதுதான் நமக்கு அரிய செல்வம் ஆகும்.

6. **தானை சூழமண் உலகைஆண்டு அழிபவர்**
**தங்கள்வாழ்வு இனிதுஎன்றே**
**நீநி னைத்தியோ நெஞ்சமே எஞ்சுறா**
**நிமலஞா னம்அதுஉற்றால்**
**வானும் வையமும் வந்துதாள் வணங்கும்மெய்**
**வாழ்வுகாண் டலும்வீண்முற்**
**போன நாட்குஇரங் கவும்வரும் எனநலோர்**
**புகன்றதுஓர்ந் திலைகாணே.**

ரத, கஜ, துரக, பாதாதி என்ற நால்வகைச் சேனைகள் சூழ இம்மண்ணுலகை ஆண்டு பின் மாண்டொழியும் அரசர்களின் வாழ்வு இனியது என்று நீ கருதினாயோ? தூய்மையானதும் எவ்வளவு திளைத்தாலும் குறையாததுமான சிவஞானச் செல்வத்தை ஒருவன் அடைந்தால் அவனது திருவடிகளை வானகத்தோரும் வையகத்தோரும் வந்து வணங்குவர். “இப்படி ஒரு மெய்ஞான வாழ்வு இருக்கிறதென்று அறிந்தபின்னும் வாழ்நாளில் ஐயோ! இந்த மெய்ஞ்ஞானத்தை அடையாமல் எத்தனையோ நாட்களை வீணாக்கினேனே! என்று வருந்த நேரிடும்” என்று எத்தனையோ ஞானிகள் கூறியிருக்கிறார்களே அது தெரிந்தும் நீ ஞானத்தைத் தேடாமல் சுகத்தைத் தேடி அலைகிறாயே.

7. **காணி ஈதுஎமது இடம்இது எனமணைக்**
**கருதிமண் ஆகுகின்றாய்**
**நாண்இ லாய்மட நெஞ்சமே உடல்இது**
**நமதுஇடம் அலஎன்றால்**
**பேண வும்படு மேஇதற்கு இடம்அதாம்**
**பிருதிவி தனைநாகப்**
**பூணி னான்திருச் சரணமே உயிர்க்குஎலாம்**
**புகல்இடம் அதுதேரே.**

இது எமது நிலம் என்றும், இது எமது வீடு என்றும், இது எமது மண் என்றும் எண்ணி மண்ணாகி மக்கி மடிந்து போகிறாய். அறியாமை நிறைந்த நெஞ்சே உனக்குக் கொஞ்சமும் நாணமில்லை போலும். பல நோய்களுக்கு இடமாக உள்ள உடம்பு அறிவற்றது. ஆதலால் இவ்வுடம்பே நமக்கு இடம் அன்று என்று சொன்னால் இந்த உடம்புக்கு இடமாகவுள்ள மண்ணினை நம்முடைய இடமாக எண்ணுதல் தகுதியாகுமா? உயிர்களுக்கு எல்லாம் புகலிடமாக விளங்குவன நாகத்தை ஆபரணமாக அணிந்த சிவபெருமான் திருவடிகளே.

8. **தேர் கிலாய்இவண் புகழ்விழைந் தனைஇனிஇத்**
**தேகம்வேறு அடைந்தாயேல்**
**சாரு மோஅதில் இதில்புகழ் அலதுநீ**
**தான்உணர்ந் திடுவாயோ**
**பேரி யாதுயாம் ஆர்கொல்முற் பவத்துஇகழ்**
**பெறினும்இத் துணைநெஞ்சே**

**ஓரில் நேரில்வீடு உறுதலே புகழ்இகழ்**
**உறல்பிறப்பு எனஉன்னே.**

புகழ் பற்றி நீ யோசனை செய்து அறியவில்லை. ஆனால் புகழைப் பெற நீ விரும்புகின்றாய். இனி நீ வேறு உடலை அடைந்தால் இதனால் வந்த புகழ் அவ்வுடலில் வந்து பொருந்துமா? அல்லது அது பற்றி நீ அறிய இயலுமா? முற்பிறவியில் நமது பெயர் யாது? நாம் யார் சொல்லுக. (இதற்கு மனம் பதில் கூறவில்லை) உனக்கு வெறுப்பைத் தரும் இகழ்ச்சியைப் பெற்றாலும் அதையும் இந்தப் புகழ்ச்சி போலவே ஏற்றுக்கொள்வாயாக. ஆராய்ந்து பார்க்கையில் ஒப்பில்லாத வீடுபேற்றினை அடைதலே புகழாகும். மீண்டும் பிறப்பினை அடைவதுதான் இகழ்ச்சி.

**9.** **உன்னு கின்றனை உனைமணோர் பெரியன்என்று**
**உணருமோ செயஉன்பால்**
**மன்னும் ஈசனே பந்தம்வீடு அளிப்பவன்**
**மற்றையர் அறிந்துஎன்னாம்**
**அன்ன வன்திருப் பொன்னடி கரியதா**
**அருந்தவம் செய்நெஞ்சே**
**பின்னை முன்னவன் உலகுஅறிந்து இறைஞ்சுமா**
**பெருமைசெய் குவன்ஓரே.**

உன்னை இவ்வுலகிலுள்ளார் பெரியவன் என அறியும் நிலையினை அடைய நீ எண்ணுகின்றாய். உன்னிடத்தில் நீங்காது நிலைபெற்றிருக்கிறான் சிவபெருமான். நீ செய்த வீண் செயல்களையும் நீ செய்த தவத்தினையும் அறிந்து அதற்குப் பயனாகப் பிறவியையும் வீடுபேற்றினையும் கொடுப்பவன். பிறர் உன்னைப் பெரியவன் என்று அறிந்து கொள்வதால் உனக்கு என்ன பயன்? சிவனது திருவடியை சாட்சியாகக் கொண்டு தவம் செய். அப்படி நீ செய்தால் உலக மக்கள் உன்னை அறிந்து வணங்கும் படியான அரியநிலையை ஈசனே தருவார். இதற்கு அறுபத்து மூன்று நாயன்மார்களை உதாரணமாகக் கூறலாம். ஈசுவர சாட்சியாகத் தவம் செய். சீவசாட்சி தேவை இல்லை.

**10.** **ஓரின் உள்ளமே பாரில்மா னுடர்முதல்**
**உளஅறு பிறப்பூடும்**
**சேரும் இன்பம்ஒன்று இல்லைஎன் பதுபிரத்**
**தியக்கம் நீவல்லாய்**

**போர்கள் ஆதிதுன்பு இமையவர் அடைவதும்**
**புகலநூல் உணர்ந்தாயே**
**நேர்இ லாஅரன் கழல்அலால் மிகுசுக**
**நிலைபிறி திலைஅன்றே.**

உண்மையை ஆராய்ந்து பார்க்குமிடத்து இந்த பூவுலகத்தில் மக்கள் முதலாகத் தாவரம் ஈறாக உள்ள அறுவகைப் பிறப்பினிலும் தேவப் பிறவியை அடைந்தாலும் கூட இன்பம் என்பது ஓர் அணுவேனும் இல்லை. இதனைக் கண் கூடாக அறிந்து கொள்ளும் திறமை உனக்குண்டு. போர் முதலியவற்றால் முன்பு தேவர்கள் அடைந்த துன்பங்களை நூல்கள் வாயிலாகக் கேட்டிருக்கின்றாய். எனவே தனக்கு உவமை இல்லாத சிவனது திருவடியே இன்பம். இதைத் தவிர சுகம் என்ற நிலை ஒன்றில்லை.

11. **அன்றுஎ னக்குநீ ஒருதுணை பிறப்புஇறப்பு**
**அதில்துய ரமும்கேடும்**
**தின்றல் ஒன்றுஅலால் வியாதிஆ திகளினால்**
**செறிதுயரமும் ஓர்ந்துஓர்ந்து**
**என்றும் ஏழ்பவக்கு அஞ்சிலை நெஞ்சமே**
**இன்பவீடு எதுஎன்றே**
**நின்று நின்றுஅழு திலைதொழு திலைசிவ**
**நேசர்தாள் பூசித்தே.**

மனமே! உன்னை நான் உறுதுணை என்று நம்பினேன். ஆனால், நீ எனக்கு பிறவித் துன்பம் நீங்கத் துணையாகயில்லை. பிறத்தல், இறத்தல் என்ற சுழற்சியில் எத்தனை துயரங்கள்! எத்தனை கேடுகள்! உணவு தேடித் தின்பது, காம இச்சை, பலவித வியாதிகள் முதலிய துன்பங்கள் நிறைந்த வாழ்வை எத்தனை தடவைகள் ஆராய்ந்தும் நீ மீண்டும், மீண்டும் பிறவி எடுக்க அஞ்சவில்லை. பேரின்ப நிலை எது என்று நீ தேடவில்லை. சிவனடியார்களின் பாதங்களை நீ தொழவில்லை. அவர்கள் முன் நின்று பேரின்ப வீட்டை அடையும் வழியைக் கேட்டு நீ கண்ணீர் பெருக்கவில்லையே!

12. **பூசை செய்துதோத் திரம்சொலித் தனைநினை**
**புண்ணியர் பால்நண்ணற்கு**
**ஆசை செய்திடும் அம்பலக் கூத்தனை**
**அடைந்திலை அடைந்தாரில்**

பேசு கின்றனை அறவரின் விளங்கினை
பிறர்மனை நயக்கின்றாய்
சீசி இங்குஇருந்து என்செய்தாய் நெஞ்சமே
செத்திலாய் கெடுவாயே.

வழிபாடு செய்து அருச்சனை சொல்லித் தன்னை வழிபடும் அடியவர்களிடம் சேர்ந்திருப்பதற்காகப் பொற்சபையில் ஆடுகின்ற கடவுளை நீ அடையவில்லை. ஆனால் அடைந்தவரைப் போல் பேசுகின்றாய். துறவறத்தைச் சார்ந்தவர் போலவும் விளங்குகின்றாய். அடுத்தவர் மனைவியை விரும்புகின்றாய். நீ இங்கிருந்து என்ன செயல் செய்கின்றாய்? ஏதும் செய்யாது அழிவாயாக.

13. வாயி னால்பல நூல்படித்து உணர்ந்துநல்
வழிபிறர்க்கு உரைசெய்தும்
நீஉ லோகஆ சாரம்ஓர் அணுத்துணை
யானும்நீங் கிலைநெஞ்சே
தூய தாம்இவண் பிறர்கொளக் குங்குமம்
சுமந்துசெல் கரம்உன்னில்
காயம் மானுடத்து இன்றுஅதற்கு அன்றிஉள்
ளவும்இன் மையினாலே.

(மனமானது தன்னை இகழ்ந்து கூறிய விவேகத்தைப் பார்த்து, நான் செய்த தவறுதான் என்ன? என்று கேட்டது. விவேகம் பதில் சொல்லத் தொடங்குகிறது.)

பல சாத்திர நூல்களைப் படித்து ஆராய்ந்தும் பிறருக்கு நல்ல வழிகளை உரைத்தும் நீ உலக ஒழுக்கத்தினைக் கொஞ்சம் கூடக் கை விடவில்லை. பிறருக்காகக் குங்குமப் பொதியினைத் தாங்கிச் செல்கின்ற கழுதை கூட உன்னை விட உயர்வானது. கழுதை குங்குமத்தை நான் சுமக்கிறேன், இது உயர்ந்த பொருள் என்ற பெருமையோ அல்லது உப்பைச்சுமக்கும்போது சிறுமையோ அடைவதில்லை. அதனால் கழுதை உன்னை விட மேம்பட்ட உயிர், என்று விவேகம் நெஞ்சை இடித்துக் கூறியது.

14. நாலு வேதமும் ஒருசம நிலைசொல
நவைசெய்ஈர் அவத்தைபால்
கோலும் மூஇரு சமயம்ஆ கியபடு
குழியின்ஊடு இழிகின்றாய்

**வேலை யாஉனக்கு உடல்தரு விதிஉற**
**வையும்அதை விடுவிக்கும்**
**கால னார்தொடர் பையும்இனந் தொடருதி**
**போலும்நீ கடைநெஞ்சே.**

"நான்கு வேதங்களும் பிரம்மத்தை அறியும் வழியைச் சொல்லியிருக்கின்றன. அதைப் புரிந்து கொள்ள முடியாத பாமரர்களுக்காக ஆறு சமயங்களை உருவாக்கி வழிபாட்டு முறைகளை ஏற்படுத்தியுள்ளனர். சாமானிய மக்கள் என் தெய்வம், உன் தெய்வம் என்ற பிரிவினைகளிலும், என் வழிபாடு சிறந்தது, உன் வழிபாடு தாழ்ந்தது என்ற மதச் சண்டைகளிலும் காலத்தை வீணாகக் கழிக்கிறார்கள். உனக்கு இதுவே வேலையாகப் போயிற்று. வீடு பேறடைவதற்கு இந்தச் சமயங்களின் வாதங்கள் எதுவும் வழி காட்டாது. அந்தப் பிரம்மமும் நானும் ஒன்றே என்பதை உணர்வதுதான் பிறவிப் பயன். மற்ற சமய நெறிகளில் உழல்பவர்களுக்கு பிறப்பும் மரணமும் தொடர்ந்து கொண்டேதான் இருக்கும். உடலைத் தரும் விதியையும், உடலை மரிக்கச் செய்யும் காலனின் தொடர்பையும் நீ இன்னும் தொடர்கிறாயே.

(பிரம்மமும் நானும் ஒன்றே என்ற அத்வைத நிலையை அடைய முயலாமல் மனம் லௌகீகப் பூஜை முறைகளில் கட்டுண்டு கிடக்கிறதே என்ற தாபத்தினால் விவேகம் பேசியதாகக் கருத்து)

**15.** **நெஞ்ச மேஉடல் அந்தம்ஆ தியைவிடார்**
**நிற்கமற் றையர்க்குஎல்லாம்**
**வெஞ்ச மற்குதிப் புஅரிதுஇவைக்கு ஒருமிரு**
**கண்டுபுத் திரன்சான்றால்**
**அஞ்சல் இவ்உடற்கு இறுதிஇப் பொழுதுஎன**
**அறிஒணா மையின்நாளும்**
**தஞ்சம் என்றுஅரன் சரண்விடேல் யாமும்அச்**
**சமன்வலி தடுப்பாமே.**

("ஆதியைவிடார்" என்றால் ஆதி பரம்பொருளான சிவபெருமானின் திருவடிகளைப் பற்றிக் கொண்டு இடைவிடாமல் தியானம் செய்கின்ற தொண்டர்கள் என்று பொருள்.) சிவபக்தர்களைத் தவிர யாராலும் உடலுக்கு முடிவு வருகின்ற காலத்தில் மரணத்தை ஜெயிக்கமுடியாது என்று விவேகம் சொல்ல, இதற்கு என்ன சான்று கூறப்போகிறாய் என்று மனம் கேட்டது. பல சான்றுகள் இருந்தாலும் மிருகண்டு

மகரிஷியின் புதல்வனான மார்க்கண்டேயன் ஒருவன் போதுமே. வேறு சான்று எதற்கு? நெஞ்சமே நீ அஞ்சவேண்டாம். இந்த உடலுக்கு என்று முடிவு வரும் என்பது நமக்குத் தெரியாத படியால் சிவபெருமானுடைய சரணங்களை விடாமல் பற்றிக் கொள். அவரைப் புகலிடமாக கொண்டவராயின் நாமும் அந்த எமனுடைய வலிமையை தடுக்கலாம் என்றது விவேகம்.

**16.** **தடுத்து மேலும்இவ் உருவம்ஆ யினும்பெறல்**
**சற்றுஅல மறைநாகத்து**
**இடத்தின் மாதவர் இருவர்கங்கு எனஅடைந்து**
**இருத்தல்சான்று அரிதாகிக்**
**கிடைத்த தேகமும் விவேகமும் இருக்கும்ஞான்றே**
**கிரீ சனைநெஞ்சே**
**அடுத்தி லாய்பல கவலைமாய்த் தோர்உணர்வு**
**ஆகிநின்று அகலாதே.**

இவ்வுடலை விட்டு உயிர் பிரிந்து போனபிறகு இனியும் ஒரு மனித உடலைப் பின் ஒரு பிறப்பில் பெறுதல் எளிதன்று. சம்பரன் சம்பாதி என்ற இரு முனிவரும் போகங்களை விரும்பி மேலான தவம் செய்து சிவபிரானைக் கண்டனர். ''என்ன வேண்டும் உமக்கு?'' என்று கேட்ட சிவபெருமானிடம் வீடுபேறு வேண்டுமெனக் கேட்க ''நீர் ஒன்றை எண்ணி ஒன்று கேட்பது நன்றோ?'' எனச் சாபமிட்டார். அதனால் அவர்கள் இருவரும் கழுகின் உடல் பெற்று வேதகிரியில்* இருப்பதே சான்று. எனவே மிக அரிதாய்க் கிடைத்த அறிவும் அதனால் கிடைத்த மனித உடலும் இருக்கும் போதே கிரீசனான சிவபெருமானை வணங்கி அவனுடைய திருவடியை விட்டு அகலாதிருப்பாயாக.

**17.** **அகலும் இவ்உடல் மினின்விரைந்து எனின்விரைந்து**
**அரன்தொழுது ஈதலதுஇங்கே**
**சகல மும்செய நினைகுதல் தனைஇனித்**
**தடப்புனல் இதுஎன்றே**
**பகலி னால்விரி கானலை நெஞ்சமே**
**கருதிநெல் பயிர்ஆதி**
**இகலி னால்செய நினைபவர் நினைவைஒத்**
**திடும்என விடுவாயே.**

* *வேதகிரி = திருக்கழுக் குன்றம்.*

இந்த உடல், மேகத்தில் தோன்றி உடனே மறைந்து போகும் மின்னலைப் போல மாயையில் தோன்றி அழியும். இது உள்ளபோதே கணமும் வீணாகாமல் ஈசன் திருவடிகளை வணங்கு. இதைச் செய்யாமல் பொய்யான இந்த மாய உலகில் எல்லாக் காரியங்களையும் நான் செய்கிறேன் என்று ஒருவன் தொழில் செய்வது வீண். சூரிய கிரணங்களின் வெம்மையால் மணல் மீது தோன்றும் கானல் நீரை குளிர்ந்த தடாகத்தில் நிரம்பியுள்ள தண்ணீர் என்று ஒருவன் மயங்கி நெல் போன்ற நன்செய் பயிர்களை விளைவிக்க நினைப்பது எவ்வளவு மடமை? தான் விரும்பியதை எல்லாம் இந்த உலகில் சாதிக்க நினைப்பதும் மடமை என்று தெரிந்து கொள்வாயாக.

**18.** **வாய்மை ஈதுஉணர்ந் திடுதிநல் நெஞ்சமே**
**வருகணத்து ஏதேனும்**
**நீநி னைந்திடேல் அவ்வளவு உடல்உறல்**
**நிச்சயிப்ப அரிதுஅத்தால்**
**போயது ஓர்கணச் செயல்உனேல் பயன்இலை**
**புகல்நிகழ் கணத்தேனும்**
**தீமை நன்மைநீ நினைவதுஎன் வினைவழிச்**
**சிவன்தரு குதலாலே.**

நான் கூறுகின்ற இந்த நல்ல நெறியே உண்மை என உணர்ந்து கொள்க. ஒரு கணப் பொழுதாயினும் யாதொன்றையும் நினைக்காதே. ஏன் எனில் அவ்வளவு காலம் வரை உடல் இருப்பது உறுதி இல்லை கடந்த காலச் செயல்களை எண்ணாதே. அவற்றால் பயன் ஒன்றும் இல்லை. நிகழ்காலத்தில் சுக துக்கங்களை நினைக்க வேண்டாம். ஏனெனில் இவ்விரண்டையும் சிவன் நமக்கு நம் கர்ம வினை வழியாகவே தருகின்றான்.

**19.** **தருவ தீமையின் நன்மையும் ஊழ்அடுத்**
**ததைஉயர் களைமேல்நின்று**
**உரைகள் ஆதிசெய் கூத்தரில் பிறனைநச்சு**
**ஒருமகள் தவன்ஏவல்**
**புரிதல் தன்னில்ஐம் பொறிகளால் பற்றினும்**
**புகல்நிரா சையைநீஉற்று**
**இரவி னும்பக லினும்விடேல் நெஞ்சமே**
**இன்பவீடு எளிதாமே.**

முற்பிறவிகளில் செய்த புண்ணிய பாபச் செயல்களினால் ஊழ்வினையானது இன்ப துன்பங்கள் என்ற பயனைத் தருகின்றது. உயரமான கம்பத்தின் மீது ஏறி கூத்தாடி பல வித்தைகளைச் செய்து காட்டுகிறான். இடைவிடாத பயிற்சியால் கடினமான வித்தைகளைச் செய்யும்போதும் கூட்டதினரைப் பார்த்து பேசிக்கொண்டே இருக்கிறான். ஒரு பெண்மணி வேறு ஒரு புருடனை மனத்தால் விரும்பியிருந்தாலும் தன் கணவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்கிறாள். அதைப்போல நெஞ்சமே நீ ஐம்பொறிகளின் வழியே எந்தச் செயல்களைச் செய்தாலும் அவற்றில் ஆசை வைக்காமல் இரவும் பகலும் விடாமல் சிவபெருமானின் திருவடிகளை பற்றிக்கொள். ஈசனின் திருவடிகளை விட்டு விடாமல் இருந்தால் பேரின்ப வீட்டை எளிதில் அடையலாம்.

**20.** **ஆம்உன் இச்சையே மேலுமே லும்பிறப்பு**
**அளிக்கும்வித்து எனநெஞ்சே**
**நீம றித்திடுஆ சைக்கடல் சுவறுமே**
**நினைவுஎனும் திரைமாயும்**
**போம்இ றந்துஎலா நினைவும்எப் பொழுதில்அப்**
**பொழுதுபூ ரணம்ஆய**
**சோம சேகரத்து எந்தைபொற் கழலையும்**
**தொழல்ஐயம் இலைநாமே.**

விவேகம் மனத்தைப் பார்த்து, நீ கொண்ட ஆசையே மேலும் மேலும் பிறப்பினை உண்டாக்கும் விதை என்று எண்ணி அந்த ஆசையைத் தடுத்துக் கொள்க. அவ்வாறு தடுத்தால் ஆசை என்னும் கடல் வற்றும். எண்ணம் என்ற அலை நாசமாகும். அதனால் பழைய நினைவுகள் ஒருங்கே பறந்து போகும். எப்பொழுது அவைகள் இறந்தனவோ அப்பொழுதே நிலவை முடியிற் சூடியுள்ள எம் தந்தையாகிய சிவனது பொற்பாதங்களைத் தொழுவோம் என்பதில் சந்தேகம் இல்லை.

**21.** **நாம்அ ரற்குஅருச் சனைமுத லியகொடு**
**நலஞ்செய்தேம் அவைஇன்றித்**
**தீமை செய்துஉளேம் எனவும்உன் நிலைஒரு**
**சிறிதுஅசைவு அடைந்தாலும்**
**யாம்இ யற்றுஅப ராதம்என் நினைவுமற்று**
**அசைகிலை எனில்நெஞ்சே**

**ஏமம் மிக்குஉறச் செய்யும்நன்கு இறைகழற்கு**
**எனத்துணிந் திடுநீயே.**

நாம் சிவபிரான் திருவடிகளுக்கு அருச்சனை முதலியன செய்து, நற்கருமம் செய்தோம் எனவும், இன்றைய தினம் அவ்வாறு செய்யாமையால் தீமை செய்தோம் எனவும், சிறிது சலனம் அடைந்தாலும் அது நாம் இயற்றும் குற்றம் என்றும் அறிக. ஓர் அணுவளவேனும் உலகப்பற்றுக்களைப் பற்றிய நினைவு கூட இன்றி ஆசையில்லாமல் இருப்பின் அதுவே சிவன் திருவடிக்கு இன்பம் உண்டாகச் செய்யும் பூசை எனவும் நீ அறிந்து கொள்ள வேண்டும்.

22. **நீமெய்ஞ் ஞானநல் நிட்டைசா ருதல்அரிது**
**எனவும்நெஞ் சகமேசற்று**
**ஒய்வுஇ லாதுசெய் தியானம்ஆ திகள்எளிது**
**எனவும்உன் னாநின்றாய்**
**சேய்கள் தம்இனத் தாய்கொல்சும் மாஇருக்**
**குதல்செய்தற்கு அரிதுஆகிப்**
**போய்உழைப்புஉனக்கு எளியதாய் இருந்தஇப்**
**புதுமைஎன் புகல்இன்றே.**

சோர்வடைந்த மனத்தைப் பார்த்து விவேகம் கூறுகிறது. "மனமே ஐம்புலன்களை வென்று பயிற்சியினால் அடையக்கூடிய சமாதி நிலையை அடைய முடியாதென்றும், ஒய்வில்லாமல் செய்யும் பூஜை முதலிய உருவ வழிபாடுகளைச் செய்வது தான் எளிது என்றும் கருதுகிறாய். இது சிறுபிள்ளைத்தனமாக அல்லவா இருக்கிறது. தாய் தன் குழந்தையை நீராட்டி பாலூட்டித் தாலாட்டி தூங்கச் செய்தால் குழந்தை சும்மா இருக்காது. விளையாடத் தொடங்கும். அந்தக் குழந்தையைப் போல் உனக்கும் அலைவதே சுகமாக இருக்கிறது. இது என்ன ஆச்சரியம்!. சும்மா இருப்பதுதான் எளிது ஓடியலைந்து திரிதலே சிரமமானது. ஆனால் உனக்கோ சும்மா இருக்கும் சுகம் தான் கஷ்டமாக இருக்கிறது, வேடிக்கைதான்."

23. **நின்றுஉ றாதுஅலை குதல்விருப்பு உனக்குஅதை**
**நீத்துஇருக் குதல்நெஞ்சே**
**என்த னக்குநல் விருப்புவா ளாஇவண்**
**இருத்தல்தீது உயர்வீடு**

**சென்று காண்குவல் எனநினைந்து அலைதியோ**
**சிவம்திரு சியம்அன்றால்**
**ஒன்றும் நீஉனாது இருப்ப தேஅதைத்**
**தொடர்உபாயம் என்றுஅறிகண்டாய்.**

(மனமாதி முக்கரணங்களும் அசைவற ஒரே நிலையில் நின்றால்தான் வீடுபேறு அடைய முடியும் என்பதை வலியுறுத்துகிறார்).

"ஒரு நிலையில் நில்லாமல், அலைவதிலேயே உனக்கு விருப்பம். மனமே, சும்மா இருப்பதே சுகம்" என்று விவேகம் கூறுகிறது. மனமானது, "சும்மா இருப்பதால் மேலான வீடு பேறு எப்படிக் கிடைக்கும்?" என்று கேட்டது. விவேகம் பதில் கூறிற்று, "ஜபம், மந்திரங்கள், பூஜை செய்தல், நாமபாராயணம் செய்தல் முதலிய செயல்களினால் தான் மோட்சம் அடைய முடியும். சும்மா இருப்பது தவறு என்றா நீ எண்ணுகிறாய்? அதனால் தான் கணநேரம் கூட நிற்காமல் அலைகிறாயோ? இதைப் புரிந்துகொள். சிவம் என்பதைக் கண்களால் காணவோ, மனத்தினால் அறியவோ முடியாது. சும்மா இருக்கும் அமைதி நிலையே பேரின்ப வீடு அடைவதற்கு ஒரே வழி."

**24.** **கண்ட ஐம்புலக் காட்சிபோய்க் காட்சியாற்**
**கலந்தவா தனையாவும்**
**விண்டு மூடமற்று அலைஇலாக் கடல்என**
**விளங்கினை எனில்நெஞ்சே**
**உண்டு கொல்நமக்கு ஒருதுயர் ஆங்குவீடு**
**உளங்கையில் கனியேயாம்**
**பண்டை மேவிய பயம்எலாம் அறும்குரு**
**பதத்திலும் புகலாமே.**

மனம் கேட்கிறது, "அசைவற அடங்கினால் வீடுபேறு கிடைக்கும் என்று சொன்னாயே. அசைவற நிற்பது எப்படி என்பதையும் அப்படி நின்றால் என்ன வரும்? என்பதையும் சொல்லவேண்டும்"

விவேகம் பதில் கூறுகிறது. "ஐம்பொறிகளால் உலகைக் காண்கிறோம். இந்தக் காட்சிகளால் வாசனைகள் ஏற்படுகிறது. அதனால் மனமானது கடல் அலைகள் போல் பொங்கித் தணிகிறது. அலை இல்லாத ஆழமான கடலைப் போல் நீ ஆசாபாசங்களையும் பந்தங்களையும் துறந்து மனச் சலனம் இன்றி இருக்கவேண்டும். அப்படி சலனமின்றி இருந்தால் துயரம் என்பது உண்டோ? சனனமரண பயங்கள் நீங்கி பேரின்ப வீடு என்ற அனுபவத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணர்வாய். இந்த வீடுபேறு என்ற

நிலையை ஞான குருவின் பாதங்களில் சரண் அடைந்து அவருடைய உபதேசம் பெறுவதாலும் அடையலாம். நம்முடைய பிறவித் துயர் நீங்கப் பெறுவோம். துரியாவத்தையை அடைந்து விட்டால் துக்கம் என்பதே இல்லை".

**25.** **புகல் அரும்பரப் பிரமம்ஆம் கடல்தனில்**
**புணர்பரைத் திரைஈசன்**
**சகமொடு ஆர்உயிர் எனும்நுரை ஆதிகள்**
**தந்துமாற் றிடும்என்றே**
**பகரும் நான்மறை எனில்அதில் எதைஎதைப்**
**பற்றுவாம் விடுகிற்பாம்**
**சுகசொ ரூபமே அனைத்தும்என்று அகற்றுதி**
**துவிதபா வனைநெஞ்சே.**

"மனவாக்குக்குக் எட்டாத பிரம்மத்தை விளக்க முடியாது. அந்தப் பரப்பிரம்ம சொரூபத்தை எல்லையற்ற கடலாகப் பாவித்துக் கொள்வோம். அந்த பிரம்மத்தில் ஏற்பட்ட அலை ஈசனும் இந்தப் பிரபஞ்சமும் என்று சொல்லலாம். அந்த அலையில் தோன்றும் நுரைகளே எத்தனையோ விதமான உயிரினங்கள். இவை அலையில் தோன்றி மறையும் நுரையைப் போலவே தோன்றி மறைகின்றன. இது வேதங்கள் கூறும் உண்மை. (கடலும் தண்ணீர், அலையும் தண்ணீர், நுரையும் தண்ணீர்) கடல் அலையிலும் நுரையிலும் தோன்றிய உலகத்தில் எதைப் பிடித்துக்கொள்வது? எதை விடுவது? இது எல்லாமே பேரின்ப வடிவமான பரம்பொருளின் தோற்றம் என்பதை நீ உணர்ந்து கொண்டு "அது, இது" என்று வேறுபடுத்தும் நினைவை முழுதும் அகற்றி விடு" என்றது விவேகம்.

**26.** **நெஞ்ச மேஇனிப் பாவனா தீதம்ஆய்**
**நின்றிடுஇன்று எனில்நிற்பாய்**
**எஞ்சு றாதுஅகல் புரணபாவ னையைஓர்ந்**
**திலைஎனில் உலகுஎல்லாம்**
**அஞ்ச னக்கஎன் மேனிஎன்று ஓர்ந்திலை**
**எனின்அருள் சுரந்துஎம்பால்**
**வஞ்சம் அற்றிடும் படிக்குஇவண் அடைந்ததுஓர்**
**வடிவைஓர்ந்து உய்வாயே.**

மனம் விவேகத்தைக் கேட்கிறது. "ஐம்பொறிகளால் காணும் காட்சியை நீக்குவதற்கு வழி சொன்னாய். இனிமேல் நினைவு, மறத்தல் இவைகள் இல்லாமல் சமநிலையில் நிற்க வழி சொல்".

''நெஞ்சமே, நீ உலகத் தோற்றங்களை அது. இது என்று சுட்டிக்காட்டி அறியும் எண்ணங்களை விட்டுவிடு. அதற்கு அப்பாற்பட்ட சமநிலையை அடைந்து விடு. முடியாது என்றால் அணு, துரும்பு, மரக்கட்டை எல்லாவற்றிலும் எங்கும் நிறைந்த பரம் பொருளைக் காணப் பழகு. அதுவும் முடியாது என்றால் இந்த உலகமும், அகிலாண்ட கோடிப் பிரபஞ்சமும் நீலகண்டனாகிய சிவபெருமானின் அஷ்ட மங்கல* மூர்த்தமாகப் பாவனை செய்துகொள். (உருவமற்ற பாவனையில் லயிக்க முடியாவிட்டால் உருவ பாவனையில் கடவுளைக் காணலாம் என்பது கருத்து) மனமே, நீ உய்வதற்கு ஒரு சிறந்த வழி இருக்கிறது. அதையாவது செய். நம்மீது அளவற்ற கருணை கொண்டு, பூர்வ ஜன்மவாசனைகளால் நமக்கு ஏற்பட்ட மலங்களைப் போக்கி அருள்வதற்காக மானுட வடிவில் வந்து உபதேசம் செய்யும் குருவை நீ இடைவிடாது தியானம் செய்'', என்றது விவேகம்.

**27.** **உய்து நெஞ்சமே வாக்கினை மௌனம்ஆக்கு**
**இலைஎனில் உளதேசொல்**
**மெய்த ரும்சொலும் பொய்நயம் பயக்கிலா**
**இடத்தின்அது உடைத்தேனும்**
**பொய்த ரும்சொல்(இ) யான்செய்தேன் பிறர்செய்தார்**
**எனில்அவை போனாலும்**
**மெய்த ரும்சிவம் அன்றுஇதுஎன்று ஒன்றைநீ**
**இசைத்தல்பொய் எனத்தேரே.**

விவேகம் தொடர்ந்து கூறுகிறது.

நெஞ்சமே! உனக்கு நற்கதி அடையவேண்டும் என்ற ஆர்வம் இருக்குமானால் முதலில் பேசுவதை நிறுத்து. மௌனமாக இருந்து பழகு. அது முடியாவிட்டால் உண்மையே பேசு. நீ பேசும் உண்மை உயிர்களுக்கு நன்மை செய்யாவிட்டால் அது பொய்யே. ''நான் செய்தேன், அவர் செய்தார்'' என்று சொன்னாயானால் அதுவும் பொய்யே. ஈசனே அனைத்துக்கும் காரணம் என்பதை மறந்து பேசுவதும் பொய்யாகும். சிவம் ஒன்றே மெய் என்பதை உணராமல் அது, இது என்று குறிப்பிட்டு சிவத்தினின்றும் பொருள்களைப் பிரித்துப் பேசினால் அதுவும் பொய்யே ஆகும் என்பதைத் தெரிந்த கொள்.

(பொய்யும் மெய்யும் பிரித்து அறிந்தால்தான் தத்துவ ஞானம் பெற முடியும்)

---

* *அஷ்ட மங்கல மூர்த்தம்: சூரியன், சந்திரன், ஆகாயம், காற்று, நெருப்பு நீர், மண், சீவன் இவை அனைத்தும் ஈசனின் வடிவம்.*

28. தேரின் இவ்உடல் சமாதியில் அசைவுஅறச்
சித்திர தீபம்போல்
சார வைத்திடுஅஃது இலையேல் குருபரன்
தனதுஅரும் பணிமேற்கொள்
நேரும் ஊழ்வழி தொழில்பிறிது அடையினும்
நெஞ்சமே உயிர்க்குஎல்லாம்
பேர்இதம் செய்வித் திடுமுடை கெழும்மலப்
பிணக்குஇதம் செய்யேலே.

உண்மையை உணர்ந்தால் நீ செய்ய வேண்டியது இதுதான். சித்திரத்தில் எழுதிய தீபச் சுடர் போல நீயும் சமாதி நிலையில் இந்த உடலை அசைவற இருக்கச் செய். (உடலில் பொருந்திய மனமும் சலனமின்றி இருக்கவேண்டும்) அந்த சமாதி நிலை கூடி வராவிட்டால் குருவுக்குப் பணிவிடை செய்து அவர்களால் இட்ட பணியைத் தலையால் ஏற்று ஏவல் செய். அதுவும் இயலாமல் வினைப் பயனால் வந்து சேர்ந்த கருமங்களை நீ செய்ய நேர்ந்தாலும், நெஞ்சமே! நீ எல்லா உயிர்களுக்கும் நன்மை செய். (சரம், அசரம், உயிருள்ள பிராணிகள் தாவரங்களுக்குக்கூட) துன்புறுத்துவதை அடியோடு நீக்கி இதம் செய். இந்த நாற்றமுள்ள சரீரத்தைப் பேணுவதையும், உன் உடலைப் பற்றியே எண்ணுவதையும் தவிர்த்துவிடு. (சரீர சுகங்களை நாடவேண்டாம் என்பது கருத்து.)

மற்ற உயிர்களுக்கு இதம் செய்தல் என்பது மூன்று விதமாகும்.

மெய்ம்மை – சரீரத்தால் உதவுதல், நன்நடத்தை.

வாய்மை – வாக்கினால் நன்மை செய்தல்.

உண்மை – உள்ளத்திலிருந்து வரும் வாக்கு.

1. சமாதியில் அசைவற இருத்தல் – பிரம்ம ஞானம்.

2. குருவுக்குப் பணிவிடை செய்தல் – ஈசுவர பக்தி.

3. உயிர்களுக்கெல்லாம் இதம் செய்தல் – சீவகாருண்யம்.

4. உடலுக்கு இதம் செய்யாதிருத்தல் – பாச வைராக்கியம்.

29. செய்யும் நம்தொழில் ஐந்தொழில் யாமும்அச்
சிவனது வடிவுஎன்றே
ஐயம்அ ற்றுஉண ராதுயான் எனும்செருக்கு
அடைந்துநாள் தொறும்நெஞ்சே

**நைவது என்னைநீ பஞ்சகோ சங்களும்**
**நாம்அல எனாஉண்மை**
**கையில் ஆமல கம்என உனக்குயான்**
**கழறியும் தெளியாயே.**

''நாம் செய்கின்ற அத்தனை செயல்களும் சிவபெருமானின் ஐந்து தொழில்களே யாகும்'', என்று விவேகம் கூற மனமானது, ''நான் செய்யும் காரியங்கள் ஈசன் செயலாக எப்படி ஆக முடியும்?'' என்று சந்தேகம் அடைந்து கேட்டது. நெஞ்சே நாமும் அந்த சிவபெருமானின் வடிவமே என்று சந்தேகமில்லாமல் நீ உணர்ந்திருக்க வேண்டும். பஞ்ச கோசங்களால் ஆன சரீரம் நாம் இல்லை என்பதை நீ உணராமல் நான், நான் என்று கர்வமடைந்து அகம்பாவத்தினால் துன்புற்று நலிகிறாய். உனக்கு நான் எவ்வளவு எடுத்துச் சொல்லியும் உள்ளங்கை நெல்லிக்கனி போன்ற இந்த உண்மையை நீ அறியாமல் தவிக்கிறாயே. தெளிவு ஏற்படவில்லையே, என்றது விவேகம்.

**30.** **தெளிவு உயிர்க்குஅரன் விளக்குதல் மயக்குஅவன்**
**திரோபவிக் குதல்தேகம்**
**விளிவை உற்றல்சங் காரம்இங்கு இதாஅகிதம்**
**மேவுதல் திதிதோற்றம்**
**உளசி ருட்டியேல் அம்பைநோ தலின்உன்னை**
**யும்பிற ரையும்நாடித்**
**தளர்வ தும்மகிழ் வதும்அடைந்து உள்ளமே**
**சம்புவை மறந்தாயே.**

உயிர்களுக்குத் தெளிவு வந்தாலும் அது சிவன் அருளாலே வந்ததாகும். மயக்கம் வருவதும் அவனது மறைத்தலால் உண்டாவது. உடல் நாசம் அடைந்தால் அது அவனது (சங்காரம்) அழித்தல் தொழிலாகும். இங்கு இன்ப துன்பமடைதல், இவ்விடத்தில் அவனது (திதி) காப்பதாகும். உண்டாவது படைப்பாகும். இவ்வாறு எல்லாப் பொருள்களும் இரு வினைகளுக்கு ஈடாக அவனது ஐந்தொழில்களின்படியே நடக்கும். அப்படி அம்பு எய்தவர் இருக்க உன்னாலும், பிறராலும் துன்பம் வந்தது என்று எண்ணிக்கொண்டு வாட்டமும், இன்பமும் வந்ததெனத் துன்பமும், மகிழ்ச்சியும் அடைந்து சிவனது திருவடியை மறந்தாயே. அது ஏன்?

31. மறைத்த லும்நினைத் தலும்செயும் ஆணவ
மாயைநின்று அவைதம்மைத்
துறத்த லேஇராப் பகல்அகல் வீடுஎனச்
சொல்வர்அத் துறவுஎய்தக்
குறித்தி டில்பர பத்திஞா னத்தினால்
கூடும்மற்று அவைநெஞ்சே
நிறத்த பத்திநம் செயல்அறின் நாம்அறில்
நின்றமற்று ஒன்றாமே.

நம்முடைய ஆணவமும், நம்முடைய அறியாமை என்ற மாயையும் சுகதுக்கங்களை நினைக்கச் செய்கிறது. மறக்கவும் வைக்கிறது. மாயை என்பது உலக வாழ்க்கையில் ஊறித் திளைக்கும் பொய்யான உணர்வு. ஆணவத்தையும், மாயையையும் துறப்பதே “பேரின்ப வீடு” என்ற நிலை என்று பெரியோர் கூறுகின்றனர். நெஞ்சே இந்த ஆணவத்தையும், மாயை உணர்வையும் நீ துறந்துவிடக் கருதினால் அது ‘பரபக்தி’ ‘பரஞான’த்தினால் தான் கைகூடும். ‘பரபக்தி’, எதுவுமே நம் செயல் அல்ல, எல்லாம் சிவன் செயலே என்ற உணர்வாகும். ‘பரஞானம்’ என்பது எதுவும் என் செயல் அல்ல என்ற நினைவும் மாறி சிவத்தில் திளைப்பதாகும். (இதற்குமேல் ஒரு ஞானமும் கிடையாது என்பது கருத்து.)

32. ஒன்றும் நம்செயல் இல்லை நெஞ்சே
இவண்ஓர் மயல்அதனாலே
சென்று சென்றுவெம் பவக்கடல் மூழ்கினம்
செறிமயல் ஏதுஎன்ன
நன்று நீவினா வினைஇரு வினையையும்
நான்செய்தேன் எனுமானம்
என்று அறிந்திடுஈது ஒன்றையும் மாற்றினை
எனின்உனக்கு இணையாரே.

நமது செயல் என்பதே கிடையாது என்பதை நீ உணர்ந்து கொள். நெஞ்சமே, ஏதோ ஒரு மயக்கத்தினால் திரும்பத் திரும்பப் பிறவிகளை எடுத்து பாவம் என்கிற ஆழ்கடலில் மூழ்கித் தத்தளிக்கிறோம்.

“அப்படியா சொல்கிறாய். சரி, மயக்கம் என்கிறாயே, அது என்ன? என்று மனம் கேட்டது.”

நெஞ்சே, நீ நல்ல கேள்வி கேட்டாய். இரு வினைகளான புண்ணியச் செயல் பாபச் செயல் இரண்டையும் நான் செய்தேன், அவர் செய்தார் என்று நினைக்கிறாயே அந்த மனோ பாவம்தான் மயக்கம். அது தெளிந்து நன்மைகளையும் நானும் செய்யவில்லை அவரும் செய்யவில்லை. தீவினைகளை நானும் செய்யவில்லை பிறரும் செய்யவில்லை என்ற அறிவு பெற்றாயானால் உனக்கு யாருமே இணையாக மாட்டார்கள்.

(நமக்குப் பிறர் இழைத்த தீங்கு, நாம் பிறருக்குச் செய்த நன்மை தீமைகள் எல்லாமே சிவன் செயல் என்ற உறுதி ஏற்படுமானால் நமக்கு ஒருவர் நன்மை செய்தபோது விருப்பும், தீமை செய்த போது வெறுப்பும் அடையாமல் எல்லாம் ஈசன் செயல் என்ற பக்குவத்தைப் பெறுவோம் என்பது கருத்து.)

**33.** **இணையில் ஞானபூ ரணன்முழுது உணர்ந்துஅமைத்**
**திட்டவாறு அலதுஇங்கே**
**அணைவு உறாதுஒரு தீதுஎமக்கு அவன்தரின்**
**ஆர்தடுப் பவர்நெஞ்சே**
**பணைகொள் தாவரம் மானம்இன் மையின்உருப்**
**பற்றிநின் றிலகொல்லோ**
**உள்நைவு றாதுஉடற் காவல்கை விடுதிஊழ்**
**உள்ளவா விடாதுஎன்றே.**

(மனம் கேட்கின்றது.) ‘‘விவேகமே நான் செய்யும் நல்ல செயல்கள் சிவன் செயல் என்று ஏற்றுக்கொள்கிறேன். பிறர் செய்த நல்ல காரியங்களையும் சிவன் செயல் என்று ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் தீச் செயல்களை ஈசனின் செயல் என்று எவ்வாறு நினைக்க முடியும்?’’

விவேகம் பதில் சொல்கிறது.

‘‘எங்கும் நிறைந்து ஞான வடிவாக ஒப்பற்றவராக விளங்கும் சிவபெருமானின் சித்தப்படியே, அவருடைய ஆணைப்படியே சகல உலகங்களும் இயங்குகின்றன. ஈசனுடைய செயலின்றி எந்தத் தீமையும் நமக்கு வராது. அப்படி ஒரு துக்கத்தை அவர் நமக்குத் தருவார் என்றால் அதை யாரால் தடுக்க முடியும்? இடம் பெயர முடியாத தாவரங்கள் தங்களைப் பேணும் சிந்தனையே இன்றிக் கிளைகளைத் தாங்கி நிற்கவில்லையா? வெட்டினாலும் நீரூற்றிப் பராமரித்தாலும் சுய அபிமானம் இல்லாமல் இருக்கவில்லையா? மரங்களைப் போல நீயும் மனச்சஞ்சலம் அடையாமல் உடலைக் காக்கவேண்டும் என்ற எண்ணத்தை விட்டு விடு. ஊழ்வினைப் படித்தான் நடக்கும் என்பதை அறிந்து கொள்.’’

(சிருட்டித்த காலத்திலிருந்து செய்த பண்டை வினைப்பயன்களின்படி நன்மையும் தீமையும் வகுத்துத் தருகிறார் ஈசன். அவற்றை அனுபவித்தே தீர வேண்டியிருந்தாலும் ஈசன் அருளால் சமபாவனை ஏற்பட்டு விட்டால் துக்கம் உண்டாகாது, மகிழ்ச்சியும் இருக்காது, என்பது கருத்து.)

**34.** **என்றும் வீடுஅடைந் தவர்இறு மாக்கயான்**
**இறப்பைவிட்டு அகலாமல்**
**நின்று தான்தலை சாய்க்கவோ நெஞ்சமே**
**நினைத்துணை யாக்கொண்டு**
**நன்று நீஇதற்கு என்செய்கேன் சாவனோ**
**நான்எனல் இலைஆனால்**
**ஒன்று செய்மலக் குடில்இதில் அவாவைநீக்கு**
**உமாபதி தரும்வீடே.**

(விவேகம் கொஞ்சம் கொஞ்சமாகப் பக்குவ மடைந்து வருகின்ற மனத்தினிடம் தேக அபிமானத்தை விடச் சொல்லி உபதேசிக்கிறது. அதற்கு உபாயம் சொல்கிறது. மனத்தை உற்சாகப் படுத்துவதற்காகப் புகழ்ந்து பேசுகிறது.)

“நீ எனக்குத் துணையாக இருக்கிறபடியால் நான் எத்தனையோ பயன்களை அடைந்திருக்கிறேன். உன்னுடைய துணை இல்லாமல் நான் சாதிக்க முடியாது. அப்படி இருக்க வீடு பேறு அடைந்து சீவன் முத்தர்களாக இருப்பவர்கள் பலர் பெருமிதத்துடன் இருப்பதைக் கண்கூடாகக் கண்டும் நாம் இன்னம் இந்த பிறப்பு இறப்பு என்னும் சுழற்சியிலிருந்து அகலாமல் தலை குனிந்து நிற்கிறோமே. இதற்கு என்ன செய்வது? முடிவு மரணம் தானா என்ன? இந்த அழுக்கு நிறைந்த சீவன் குடியிருக்கும் குடிசையான உடலின் மீதுள்ள பற்றுதலை அகற்றிவிடு. உடனே உமையின் பதியாகிய சிவ பெருமான் பேரின்ப நிலையாகிய வீட்டை அளித்திடுவார்.”

(சரீர அபிமானம் குறையக் குறைய ஈசன் மீது பக்தி அதிகரித்து வரும். தேகாபி மானத்தை விடுவதே வீடு என்பது கருத்து.)

**35.** **வீடு கூட்டுவான் குறித்துஅதின் நிமித்தமா**
**விமலன்ஈ தலின்நம்பால்**
**கூடும் மாயையை எனதுயான் எனஎனிக்**
**கொள்வதுஎன் பயம்ஆசை**

**நாடு போழ்துஇவை சுழுத்தியில் புரந்தவன்**
**எவன்அவன் நனவாதி**
**யூடும் ஊழ்வழி புரப்பன்என்று உள்ளமே**
**உடல்கைவிட்டு இருப்பாயே.**

"நிர்மலமான இறைவன் நமக்கு தன் அளவற்ற கருணையால் அரிய மோட்சத்தைக் கொடுக்க விரும்புகிறார். ஆனால் நாமோ நம்மைச் சூழ்ந்துள்ள மாயையை நம்பிக் கொண்டு இது என்னுடையது, இது நான் செய்த செயல் என்று எண்ணி ஆசா பாசங்களில் உழல்வதோடு, ஆசையினால் உண்டாகும் பயத்தையும் துக்கத்தையும் அனுபவித்துக் கொண்டிருக்கிறோம். இது அவசியமில்லாத பயம் அல்லவா? (தேக போகங்களில் ஆசையை விட்டு நிம்மதி அடைய உபாயம் கூறுகிறார்)

யோசித்துப் பார்த்தால் நம்முடைய சுழுத்தி நிலையில் (நாம் எதுவும் செய்யாமல், மனச் சஞ்சலம் இல்லாமல் தூங்கும் நிலை) நம்மை சிவபெருமான் காப்பாற்றினார் என்பது புரியும். அந்தச் சிவபெருமான் நம்மை என்றென்றும் காப்பார் என்பதை அறிந்து சரீர போகங்களில் உள்ள ஆசையை விட்டு நிம்மதியாக இரு."

**36.** **இருப்பை நாள்தொறும் நெஞ்சமே சுகாசுகம்**
**எதுவரும் அதுவேயாய்ப்**
**பொருப்பு வில்லிதாள் விருப்பம்எவ் வினையினைப்**
**புசிக்கும்ஞான்று அடைவாயோ**
**கருப்பை உற்றுஉதித் துஅறல்கு மிழியின்**
**அழிகாயம் ஈது உளபோழ்தே**
**குருப்பி ரான்திருக் கழற்குமெய் அன்புநீ**
**கொள்ளல் தெள்ளிமையாமே.**

"சுகமோ, துக்கமோ எது வருகிறதோ அதை நீ அனுபவிக்கும்போது நீ அதுவே ஆகிவிடுகிறாய். எந்த நல்வினைப் பயன் வரும்போது உனக்கு மேருவை வில்லாக உடைய சிவபெருமான் திருவடி மீது பக்தி உண்டாகுமோ தெரியவில்லை. தாயின் கருவிலிருந்து தோன்றி நீர்க்குமிழிபோல் அழியக் கூடியது இந்த உடல். ஆனால் இந்த சரீரம் உள்ளபோது தான் ஈசனை நினைக்கவும் பக்தி செய்யவும் முடியும். இந்த சரீரம் ஈசனை அடைய இடைவிடாது முயற்சி செய்யவே கிடைத்திருக்கிறது. இந்த அரிய வாய்ப்பை நழுவவிடாமல் ஈசன் திருவடிகளை அடைய உண்மையாகப் பக்தி செய்தல் எளிய காரியம். குருவாகிய ஈசன் திருவடிகளைப் பற்றிக் கொள்."

37. ஆமை ஆர்உறுப்பு ஐந்தையும் ஓர்மெய்யுள்
அடக்கலில் புலன்ஐந்தும்
தீமை சேர்விட யங்களில் செலாதுஅமைத்து
உள்ளமே சிவைபாக
சோம சேகரன் சரணமே சரண்எனத்
தொழுதுநின்று அழுதுஅன்னோன்
நாமம் நாவினால் செபித்திலை அவத்திலே
நாள்எலாம் கழித்தாயே.

“ஆமை தனது ஐந்து உறுப்புக்களையும் ஆபத்து வரும்பொழுது தனது உடம்பின் கண் அடக்கிக்கொள்ளுகிறது. அதுபோல ஐம்பொறிகளும் பாவங்களுக்குக் காரணமாக் வரும்பொழுது தீ செயல்களில் செல்லவிடாது அடக்கி, உமையவளைத் தன் ஒரு பாகத்தில் வைத்துள்ள சந்திர சூடனாகிய சிவனது திருவடிகளே அடைக்கலம் என்று வணங்கி, அழுது, தொழுது அவனது திருப்பெயரான ஐந்து எழுத்தினையும் நாவினால் உரைக்க வில்லை. வீணான செயல்களாலே வாழ்நாள் எல்லாம் வீண் நாளாகக் கழித்தாயே! இது ஏன்?”

38. தாயும் ஆகிஎன் தந்தையாய் வந்துதாள்
தருசிவப் பிரகாசன்
தூய பொன்அருள் வேண்டிலை ஈண்டுநின்
துணிவுஇருந் தமைஎன்னோ
காயம் மாயம்என்று அறிந்துமா தர்கள்தரு
கலவிவேண் டினைஎன்றால்
தீயை நீமிக நெஞ்சமே இதற்குயான்
செய்வதுஒன்று அறியேனே.

“ஒளிவடிவமாகிய சிவப்பிரகாசன் என்னும் பெயருடைய குருவடிவமான ஈசன் நமக்குத் தாயாகவும் தந்தையாகவும் இருந்து நம்மை ஆதரித்துக் காப்பாற்றத் தயாராக இருக்கிறார். அப்படி எளியராக வந்து தமது அருளைப் பொழிகின்ற குருவின் திருவடிகளைப் பற்றிக்கொண்டு அவருடைய பொன் அருளைப் பெற நீ முயற்சியே செய்யவில்லை. உன்னுடைய முடிவுதான் என்ன? இந்த சரீரம் அழியக் கூடியது என்பதை நீ அறிந்திருக்கிறாய். அது தெரிந்தும் பெண்களுடைய உறவை நீ விரும்புகிறாய். நெஞ்சமே நீ மிகவும் தீயவன். உன்னைத் திருத்துவதற்கு எனக்கு ஒரு வழியும் தெரியவில்லை,” என்று இடித்துக் கூறியது விவேகம்.

39. ஏனை நூல்பல ஓதினை ஓதுஅவற்று
இறையருள் அடையாதர்க்கு
ஊன வெம்பவம் ஒழிப்பதற்கு உள்ளமே
உபாயம்வேறு இலைஆனால்
ஆனை ஈர்உரி போர்த்தஎன் தம்பிரான்
அருள்விரைந்து அடையாதே
தான்இ நாள்மினார் போகம்நீ வியந்தது
தப்புஅலால் சதுர்அன்றே.

"எத்தனையோ ஞான நூல்களை கற்றும் உனக்கு அறிவு வரவில்லையே. நெஞ்சமே இறைவன் அருளை அடையாதவர்களால் பிறவித் துன்பங்களை நீக்கிக் கொள்வதற்கு வேறு எந்த வழியும் இல்லை என்று சாத்திர நூல்கள் சொல்கின்றன. இதைப் பலமுறை படித்தும் யானை உரிபோர்த்த சிவபெருமானின் அருளை விரைவில் அடைய முயற்சி செய்யாமல் பெண்கள் உறவை நாடுகிறாயே. இது தவறல்லவா?" (பேரின்பத்தை நாடாமல் சிற்றின்பத்தை நாடுகிறாயே இது ஒரு சாமாத்தியமா? என்று கேட்கிறது விவேகம்)

40. சதுர்மறைப்பொருள்ஆகியஒரு
சிவசங்கரன் தொழுதுஅன்பாய்
விதிர்வி திர்த்துமெய் பொடித்திலை நடித்திலை
விரைந்துசென்று அவன்ஆடும்
பொதுவை உற்றிலை நிற்றிலை மாதர்பால்
போகுதல் தவிர்ந்துஆஆ
எதுப டக்கட வாய்மட நெஞ்சமே
இனி உடல்அகன்றாலே.

"இருக்கு முதலிய நான் மறையின் முடிகளில் இருக்கும் மெய்ப் பொருளாகிய சிவ சங்கரனது திருவடியை வணங்கி அன்பாகித் தேகம் நடுநடுங்கவில்லை. உரோமாஞ்சலி ஏற்படவும் இல்லை. மகிழ்வால் நடம் செய்யவும் இல்லை. விரைவாய் அவன் நடனம் புரியும் பொற்சபையையும் நாடிப் போய் தரிசிக்கவில்லை. மகளிரை விரும்பி அவர் பால் செல்வதை நிறுத்தவும் இல்லை. அறியாமை உடைய நெஞ்சே! இனி இவ்வுடல் நீங்கினால் என்ன பாடுபடப் போகின்றாயோ?"

41. ஆல நீழலில் அன்றுஒரு நால்வருக்கு
அருநெறி உரைத்தானைக்

**கால காலனைச் சிவப்பிர காசஎன்கண்**
**மணிதனை உன்னாது**
**ஏலவார்குழ லார்மயல் கொண்டுநீ**
**இங்குஊழ லுவதுஎல்லாம்**
**சால வேபிழை ஆகும்நெஞ் சேசொனேன்**
**தவறுஇலை என்மேலே.**

"கல்லால மரத்தின் கீழ் எழுந்தருளி பிரம்மாவுடைய புத்திரர்களான சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனத் சுஜாதர் என்ற மகா ஞானிகளுக்கு அரிய உபதேசத்தைச் சின் முத்திரையால் காட்டியருளிய மௌன குரு சிவபெருமான். காலனையே காலால் உதைத்து அவனுக்கே காலனாக விளங்கியவர். ஒளி வடிவாக உள்ள சிவம் என் கண்மணியைப் போன்றவர். வீட்டின்பம் பெறுவதற்காக சிவப்பிரகாசனாக விளங்கும் அவரை இடைவிடாமல் நினைக்காமல் மணமுடைய கூந்தலுடைய மகளிர் மீது ஆசை வைத்து உழலுகிறாயே. இது பெரிய தவறல்லவா? நெஞ்சே உண்மையைச் சொன்னேன். என்மீது குற்றமில்லை. உன் தவறை உணர்ந்து கொள்."

42. **என்னை கண்டுநீ மாதரார் வடிவம்மீது**
**இச்சைவைத்து உழல்கின்றாய்**
**பொன்னை யும்துகி லையும்பிரித் திடில்வெறும்**
**புழுமலக் கூடுஅல்லால்**
**பின்னை உண்டுகொல் கண்டுநீ மயங்குதல்**
**பிராந்திசங் கரன்பாதம்**
**தன்னை நாடுதி நெஞ்சமே பரசுக**
**உததிஉறப் பெறலாமே.**

"எதைக் குறித்துப் பெண்கள் மேல் ஆசை வைத்து மயங்குகின்றாய்? பொன்னணியினையும் ஆடையினையும் பிரித்து அதனை இயற்கையில் காணுங்கால் வெறும் அழுக்கு நிறைந்த உடம்பு தவிர ஏதேனும் ஒரு சுத்தமான பொருள் உள்ளதோ? இயற்கை வடிவம் அவ்வாறிருக்கச் செயற்கை வடிவத்தைப் பார்த்து நீ மயக்கம் அடைதல் மனப்பிரமையாகும். இனிமேல் சங்கரனது திருவடியை மறவாது நினைப்பாய். அதனால் இன்பக் கடலை அடையலாம்."

43. **பெறுவது என்னைகொல் சுக்கிலம் கலித்தலால்**
**பெருந்தவ வலிகுன்றும்**

**உறுவது அவ்வள வோபினை நீவிரும்பு**
**உடற்கும்ஆ னியதுஉண்டால்**
**அறிவு யாம்அறி யாமைதோய்ந்து உடல்தின**
**வதைச்சுகம் எனாநின்றாய்**
**செறிது நெஞ்சமே நமதுசிற் சுகம்இனிச்**
**சிவனைஆ தரிப்பாயே.**

"மகளிர் கூட்டுறவால் அடையும் பயன் யாது? இந்திரியக் கழிவால் தவ வலிமை குறையும். உனக்கு வரும் கேடு அவ்வளவுதானா? பின்னர் நீ விரும்பும் உடம்பிற்கும் வியாதிகளும் அழிவும் உண்டு. இவ்வுடம்பு பொய் ஆதலின், இதன் கண் நின்ற ஆன்மா யாம், நீ இதனை அறியாது அறியாமையோடுங் கூடி உடல் தினவைச் சுகம் என்று கருதினை. இவ்வின்பத்தின் தன்மை இதுவென அறிந்து சிவனது திருவடியை ஆதரிப்பாயாக. அறிவினால் உண்டாகும் மகிழ்வை அதனால் பெறலாம். உடம்பினது தினவை இன்பம் எனக் கருதாதே. இவை இன்பம் அல்ல. நெஞ்சமே இன்பம் யாதென நீ கேட்பின் சிவனிடம் அன்பு கொள்க. அதனால் ஆனந்தம் பெறலாம்."

**44.** **ஆத ரித்தனை குளகிரு தாதிய**
**அடிசிலைக் கூழ்காடி**
**ஏது பெற்றி டினும்புசித் தால்பசி**
**ஏகலும்ச மித்துஅற்றால்**
**பேதம் அற்றுஎலாம் மலமதுஆ தலும்சரி**
**என்றிடில் பினைசெஞ்சே**
**நீத ரித்துஇலாது அவைவிழைந்து உழல்வதுஎன்**
**நிமலனை நினையாதே.**

"வெல்லமும், நெய்யும் சேர்த்து செய்த பாயாசம் முதலிய உணவு வகைகளை உண்பதில் நாட்டம் கொண்டிருக்கிறாய். கூழோ, புளித்துப்போன நீரோ எது கிடைத்தாலும் உண்ணவேண்டும். பசி அடங்கிவிடுமே. உணவு ஜீரணமான பிறகு எந்த வகை உணவானாலும் பேதமில்லாமல் மலமாகத்தானே ஆகிவிடுகிறது? இதை நீ புரிந்து கொள்ளாமல் அந்த அறுசுவை உணவை விரும்பி உழல்கிறாயே. நிர்மலமான சிவபெருமானை நினையாமல் உணவின்மீதே கருத்தைச் செலுத்துகிறாயே அது ஏன்?"

45. **நினைப்பி னும்குறி காட்டிடும் கோசம்நா**
**இவற்றுள்நே ரிழையாரை**
**இனிப்பை நல்கும்முக் கனிமுத லியஉண**
**வினைஎனில் அவைபோலும்**
**உனைப்பல் வாதைசெய் பகைபிறிது இலைஉணர்ந்து**
**உள்ளமே ஒழித்தாயேல்**
**பினைப்ப ராபரன் திருவடி நீழல்யாம்**
**பெறற்குஇடை யூறுஇன்றே.**

(விவேகம் மனத்தைப் பார்த்து இந்திரிய சுகங்களை வெறுத்து ஒதுக்கி விட்டு ஈசனின் திருவடியில் மனத்தை நிலை நிறுத்துவதே முத்தியடையும் வழி என்று சொல்லிச் சொல்லி வைராக்கியம் ஊட்டுகிறது. கடைசியாக அழுத்தமாக அறிவுரை சொல்கிறது)

“சுக போகங்களை மனத்தினால் நினைத்தாலும் உடல் உறுப்புக்கள் காட்டிவிடும். பெண்களால் பெறும் இன்பமும், முக்கனி போன்ற சுவைமிகுந்த உணவும் நினைத்தால் கூட ஏங்கச் செய்கின்றன. அவற்றைப் போல் துன்புறுத்துகின்ற பகை வேறு எதுவுமே இல்லை. இதை நீ உணர்ந்து ஆசையை ஒழித்தாயானால் பிறகு பராபரனான ஈசன் திருவடிகளை அடைய இடையூறே கிடையாது.”

46. **இன்று சூழ்தரு வனிதையர் ஆதிபல்**
**போகமும் இத்தேகத்து**
**ஒன்று நோய்எனில் தோடமாய் நீங்கும்ஆங்கு**
**உயிர்பெய ரினும்நீற்றை**
**நன்றுஎ னாஅணிந்து உறவினர் இறைபெயர்**
**நவிலுவர் எனில் நெஞ்சே**
**பொன்று நாள்துணை ஆகநீறு ஆதிய**
**போற்றுஅவை போற்றேலே.**

“நெஞ்சமே அனுபவித்தற்கு மனைவியும் இன்னும் பல சுகபோகங்களும் இருந்தாலும் இந்த உடலுக்கு ஏதேனும் ஒரு நோய் வந்துவிட்டால் அனுபவிக்க முடியாமல் போகின்றது. (வியாதிக்காரனுக்கு சுவையான உணவு உண்ணமுடியாது. அதுவே தோஷமாகிவிடுகிறது) உயிர் போய்விட்டதும் உறவினர்கள் திருநீறு அணிவித்துக் காதில் ஐந்தெழுத்தை ஓதுவார்கள். நெஞ்சமே, இறந்த பிறகு கூட திருநீறும் ஐந்தெழுத்தும் நம்முடைய ஆன்மாவுக்குத் துணையாக இருக்கும் என்றால் என்றும் துணையாக இருக்கக்கூடிய திருநீறு முதலிய சிவ சின்னங்களை போற்றுவாயாக.”

47. போற்றி நீறுஅணிந்து உருதிர சாதனம்
பூண்டிடுஐந்து எழுத்துள்ளே
சாற்று நீகுரு ஆதிமூ உருவையும்
தாழ்ந்துஇறைஞ்சு இவைசெய்தால்
மாற்ற லாம்பிறப்பு இறப்பினை நெஞ்சமே
மன்றுள்ஆ டியதாளும்
தோற்றும் உள்ஒளிக்கு உள்ஒளி யாய்அதைத்
தொழுதுவாழ் தலும்ஆமே.

"திருநீறு போற்றுதற்கு உரியது. அதை விரும்பி அணிந்து கொள். ஈசனின் கண்ணீர்த் துளிகளில் பிறந்த உருத்திராட்ச மாலையை அணிந்துகொள். மனத்துக்குள்ளே ஐந்தெழுத்தை எப்போதும் விடாமல் சொல்லிக்கொண்டே இரு. குரு, லிங்கம், சிவனடியார்கள் இந்த மூன்றையும் எப்போதும் தாழ்மையுடன் வணங்கு. இப்படிச் செய்து வந்தால் பிறப்பு இறப்பு என்ற சுழலிலிருந்து தப்பிவிடலாம். என் நெஞ்சமே அம்பலத்தில் ஆடும் பெருமானின் பாதங்களை நீ காணலாம். உன்னுடைய உள்ளத்தின் உள்ளே தோன்றும் ஒளிக்கு ஒளியூட்டுபவனான சிவபெருமானின் திருவடிகளைத் தொழுது பேரின்ப நிலையை அனுபவிக்கலாம்."

48. வாழ லாம்அரன் புகழ்இனம் மலர்கவி
மாலைசெய்து அவன்தாளில்
வீழு மாறுபொன் இதழிசேர் தோள்களின்
மீதுஅணிந்து இனிநெஞ்சே
தாழு வாய்அரி தேடுபொன் சரணமே
சரணம்என்று இதுஅன்றிப்
பாழி லேகருங் காக்கைபோல் கதறிநாள்
பலகழித்து ஒழியேலே.

"சிவபெருமானைப் பலவாறு புகழ்ந்து துதித்து பாடல்களாகிய மலர்களைக் கோர்த்து மாலை செய்து அவருடைய தோளிலிருந்து பாதம் வரை தொங்குமாறு தோள்களில் சூட்டி, என் நெஞ்சமே அவருடைய பாதங்களைப் பணிவாய். திருமால் தேடுகின்ற அவருடைய பொற்பாதங்களே சரணம் என்று நம்பி அடைக்கலம் தேடு. இது செய்யாமல் வெறும் உலகாயதமான நூல்களைப் படித்து காக்கை கத்துவதுபோல் கதறிக் கதறி நாட்களைக் கழிக்கவேண்டாம்."

(துஷ்ட நிக்ரஹம் செய்வது ஈசன்தோள்கள். சிஷ்ட பரிபாலனம் செய்வது அவரது சரணங்கள். மனத்து இருளைப் போக்கும் புயங்களும், இன்பத்தை தருகின்ற பாதங்களும் என்றும் பொருள் கொள்ளலாம்)

**49.** **ஒழித்தி டும்பவப் பகைவிரைந்து உள்ளமே**
**ஒதுமூது உணர்வோர்முன்**
**பழிச்சு பாடலை அரற்குஅவை விடர்க்குஇளம்**
**பாவையர் உரைபோலும்**
**கழித்தி டேல்உப சாரம்என்று இதனைநீ**
**கட்டுரை எனக்கொள்வாய்**
**விழித்து மாரனை எரித்ததே அருள்பெறும்**
**விருப்பினர் விருப்புஈதே.**

"பாவம் என்னும் பகையை சீக்கிரம் ஒழித்துவிடக் கூடிய, பக்தியில் தோய்ந்து சிவனடியார்களான அப்பர், சுந்தரர், மாணிக்க வாகர் போன்றவர்கள் ஒதிய பாடல்களை நீ பாடி சிவபக்தியில் திளைக்கவேண்டும். தன் இளம் காதலியின் அன்பு நிறைந்த இனிய சொற்களைக் கேட்டு ஒரு ஆடவன் எப்படி மகிழ்வானோ அப்படிப்பட்ட மகிழ்ச்சியை அரனாகிய சிவபெருமான் அடைவார். இது வெறும் சொற்கள் என்று நினைக்காதே, நிச்சயமாகச் சொல்கிறேன். தனது நெற்றிக் கண்ணிலிருந்து அக்கினி சுவாலையால் காமனை எரித்த ஈசனுடைய அடியார்களும் இந்த அருள் பெற்ற பாடல்களையே விரும்பி ஒதுகிறார்கள்."

**50.** **விருப்ப மாய்இது கேட்டிநல் நெஞ்சமே**
**விமலனுக்கு ஆள்அல்லார்**
**பொருப்பை நேர்தனம் சொரியினும் அவர்கண்ஓர்**
**புல்நுனித் துணைஅன்பும்**
**திருப்பி டேல்அரன் தொழும்பர்தம் தொழும்பனாய்த்**
**திரிந்துஅவர் பணிசெய்துஈண்டு**
**இருப்பை யேல்மிக நல்லைஇச் செல்லைநம்பு**
**இல்லையேல் பொல்லாயே.**

"நெஞ்சமே நான் சொல்வதை ஆர்வத்துடன் கேட்டு நற்கதி அடைவாய். சிவபெருமானிடம் பக்தி இல்லாதவர்கள் உனக்கு மலையத்தனை செல்வங்களை கொடுத்தாலும் அவர்களிடம் ஒரு புல்லின் நுனியளவு அன்பு கூட வைக்காதே. (சிவனடியார்களைத் தவிர வேறு மக்களுடன் சேரவேண்டாம், என்பது கருத்து) சிவனடியார்கள் கூட்டத்தில் சேர்ந்து அவர்கள் செல்லுமிடமெல்லாம் சென்று

அவர்களுக்கு ஓர் சிறுத் தொண்டனாய் பணி செய்து கொண்டு இரு. சிவத் தொண்டனாய் இருந்தாயானால் நீ மிக நல்லவன். அல்லாமல் பணம் பதவிகளின் மோகம் கொண்டு திரிந்தாயானால் நீ பொல்லாதவன். நான் சொல்வதை நீ நம்பு," என்று விவேகம் நெஞ்சுக்கு உபதேசம் செய்து முடித்தது.

(சிவனடியார்களுக்கு பிரதிபலன் எதிர்பாராமல் சேவை செய்வதே ஞானம் பெற வழி என்பது கருத்து)

ஓம்

# தோத்திரம்

மனம் தானுமன்று தன் வயமும் அன்று என்று அறிந்து அதனை விடுத்துத் தன்னையும் அதனையும் கூட்டவும் பிரிக்கவும் வல்ல சிவத்தை நோக்கி மேல் விவேகம் கூறுகின்றது.

1. **பொல்லாதஎன் நெஞ்சம் ஓர்ஐந்து புலன்கள் தம்பால்**
**அல்லாது அரைமாத் திரையும்நின் னடிக்கண் அன்பாய்**
**நில்லாது இதற்குஎன்னை செய்கேன் இதைநின் றிடுஎன்றே**
**சொல்லாய் திருத்தில் லையுள் மேவிய சோதிநீயே.**

அழகிய தில்லையம்பலத்திலுள்ள ஒளி வடிவே, என்னுடைய பொல்லா மனம் ஐம்பொறிகளால் புலன் வழிச் செல்கின்றதே அன்றி உனது திருவடித் தாமரையின்பால் பக்தியோடு அரை நிமிடமாயினும் நிற்கவில்லை. அப்படிப்பட்ட இம்மனத்தை நின் திருவடியில் நிறுத்த நான் என்ன செய்வேன்? வேறு வழி ஏதும் தெரியவில்லை. எனவே உனது திருவடியின் பால் நிலைக்கவேண்டுமென்று என் மனத்திடம் சொல்லி அருள்வீராக.

2. **நீயேஅருள் செய்யின்அல்லாது பொய்நெஞ்ச வஞ்சத்**
**தீயேன்உனை வந்துஅடைதற்கு ஒருசெய்கை காணேன்**
**பேயேனும் உனைத்தொட ரும்படி பேசுதில்லைத்**
**தூயோய்ஒரு உபாயம்வி டாதுஇனிச் சூழ்ந்துநின்றே.**

தில்லையில் வாழும் தூயவரே! நீரே வலிய வந்து அருள் செய்தால் அன்றிப் பொய்யும் வஞ்சகமும் உடைய மனங்கொண்ட கொடியவனுக்கு உம்மை அடைவதற்கு உரிய எவ்வித வழியும் காணமுடியாது. எனவே பேய்போல அலையும் மனமுடைய யானும் உம்மை வந்து அடையும்படி அருள் செய்க. இனிமேல் கை விடாது என்கூடவே இருந்து ஒரு வழியினை உபதேசித்து அருள்க.

3. **நின்றாய்திருத் தில்லைஉ ளாய்என்றன் நெஞ்சின்உள்ளே**
**என்றாலும் எனக்குஅதி தூரம தாய்இருந்தாய்**
**ஒன்றாலும் உனைத்தொடர் கிற்கும் உபாயம்காணேன்**
**மின்தாழ் சடையாய் தமியேற்கு விளங்கிடாயே.**

தில்லையில் எழுந்தருளியுள்ள இறைவனே. மின்னல் போன்ற ஒளியும் நீண்ட சடையும் உடைய கடவுளே. அடியேனது மனத்தில் அந்தர்யாமியாக உள்ளீர், ஆயினும் அடியவனுக்கு மிகத் தொலைவில் இருக்கின்றீர். உம்மை அடையும் படியான வழியினை ஒரு வகையிலும் உணர்ந்திலேன். எனவே அடியவன் காண விளக்கமாய் முன் எழுந்தருள்க.

**4. விளங்கும்எழில் பேதையர் காதல்வி டாதயான்அக்**
**களங்கம்அறு வோர்தொழு நின்கழல் காணுமாறுஎன்**
**துளங்கும்ஒளித் தூமதி சூடிய தோன்றலேஎன்**
**உளங்கொண்டிடு நீ இனிக் கோயில் அதாஉவந்தே.**

அழகிய பெண்களிடம் கொண்ட காதலை நான் விடவில்லையே! இச்சையைத் துறந்த களங்கமில்லாத பெரியோர் தொழுகின்ற உன் பாத கமலங்களை நான் எப்படிக் காண முடியும்? ஒளியைப் பொழிகின்ற வெண்நிலாத் துண்டத்தைச் சடையில் சூடியிருக்கும் அண்ணலே! தாங்களாகவே உவந்து என் இதயத்தில் கோயில் கொண்டு என்னை உய்விக்க வேண்டும்.

**5. வந்தித்திடு வார்பவ நோய்க்கு மருந்துஅன் னோயைச்**
**சந்தித்திடு வான்மறித் தான்மனம் தப்பிஅப்பால்**
**இந்தப்புவி யும்கட லும்கடந்து ஏகும்என்றால்**
**எந்தப்படி உய்வது யான்தில்லை எம்பபிரானே.**

தில்லைப் பதியில் எழுந்தருளியுள்ள எம்பிரானே! தங்களை வணங்குபவர்களுக்கெல்லாம் இந்த பவம் என்ற நோயைக் (திரும்பத் திரும்பப் பிறவிகள் எடுத்து சம்சாரக் கடலில் உழலும் நோய்) குணமாக்கும் மருந்து தாங்கள் என்பதை உணர்ந்து இந்த மனத்தைத் தங்களை நோக்கித் திருப்ப முயற்சி செய்கிறேன். ஆனால் என் மனமோ, தங்கள் திருவடிகளில் நிலைக்காது தப்பி ஓடி இந்தப் பூமியையும் கடல்களையும் கூடத் தாண்டி அலைந்து திரிகிறது. இப்படிக் கட்டுப் படாத மனத்தை உடைய நான் எப்படி இந்த மாயப் பிறவியிலிருந்து விடுதலை அடைவேன்?

**6. பிரானேதிருத் தில்லை உளாய்அன்றுஇப் பேதையேன்முன்**
**ஓர்ஆனேறுஇவர்ந்து அம்பிகை யோடுஎளிது ஓடிவந்தாய்**

**வரானோஇனம் எம்இறை என்றுஉனை நாடிவாடி**
**இராநாய்அடி யேற்குஎதிர் தோன்றிலை இன்றுஇதுஎன்னே.**

தலைவனே, தில்லை வனத்தில் எழுந்தருளியுள்ளவனே. முற்காலத்தில் இப்பேதையாகிய அடியேனது எதிரில் விடைமேல் எழுந்தருளித் தேவியோடு எளிதாக வந்து காட்சி தந்தீர். இன்னும் ஒரு முறை தாங்கள் வந்து காட்சி தர மாட்டீரோ? என எண்ணி உம்மை நினைந்து வாட்டமுற்று வருந்தும் நாயினும் கீழான அடியேனுக்கு இப்பொழுது ஏன் தரிசனம் தரவில்லை? இதற்கு என்ன காரணம்?

7. **என்நாயக னேஇமை யோர்தொழும் ஈசனேசெம்**
**பொன்ஆர்திரு அம்பலத்து ஆடிய பூதநாதா**
**உன் ஆர்அரு ளால்இனி வீட்டிடை உய்த்திஇன்றேல்**
**பின்ஆர்உயக் கொள்ளவ லார்என் பிழைகள்தீர்த்தே.**

அடியேனுடைய தலைவனே. அமரர்கள் வணங்கும் பரமசிவனே. சிறந்த அழகு பொருந்திய பொற் சபையிலுள்ள பூதங்களுக்கு எல்லாம் இறைவனே. உம் அருளால் வீடுபேற்றை அடைய வைப்பீராக. இல்லையெனில் என் குற்றங்களை நீக்கி வீடு பேறு அடையும் படியாகச் செய்ய வல்லவர் யாவர்? உம்மைத் தவிர வேறு ஒருவரும் இலர்.

8. **தீராதஓர் ஐம்புலச் சேட்டையும் தீர்ந்து போய்வெம்**
**கூர்ஆர் மழுவாளி நின்பாதம் குழைந்து போற்றி**
**நீராய்உரு கித்தொழுது உன்எதிர் நிற்கும் வண்ணம்**
**ஓர்நாள் உளதோ தமியேற் கும்உரைத் திடாயே.**

கொடிய கூரிய மழுவாயுதம் உடையவனே! இதுவரை நீங்காத ஐம்பொறிகளின் செயல்கள் அடங்கி, உம் திருவடித் தாமரைகளை நினைந்து மனம் உருகிக் கசிந்து, வணங்கித் துதித்து, உம் சந்நிதியில் எதிர் நிற்கும் படியான ஒருநாள் அடியேனுக்கும் உள்ளதோ?

9. **உரையேன் நனிவாய் திறந்துஉன் புகழ்தன்னை நாளும்**
**விரையார் மலர்இட்டு அருச்சிக்க விருப்பும் இல்லேன்**

**கரையேன் உளம்நின்நி னைந்துஎத்தி றத்தால்க டப்பேன்**
**திரைஆர் வினையார் பிறவிக்கடல் தில்லை யானே.**

தில்லை வாழ் இறைவனே. உன் புகழினைத் தினமும் என் வாயால் உரைத்திடேன். மன மலர்களால் உம் திருவடிகளை அர்ச்சிக்கும் விருப்பமும் இல்லேன். உம்மை நினைந்து மனம் கரைகிலேன். இருவினைகளால் உண்டான இன்ப துன்பம் என்னும் அலைகளையுடைய பிறவிக் கடலை எப்படித் தாண்டுவேன்? உம் அருளின்றித் தாண்ட இயலாது. (வாக்காலும், காயத்தாலும், மனத்தாலும் வழிபாடு செய்யும் திரிகரண வழிபாட்டை நான் செய்வதில்லையே என்று சாதகன் ஏங்குகிறான்)

**10.** **ஆன்ஏறுஇவர்ந்து என்எதிரே விரைந்து அன்றுவந் தோய்க்கு**
**ஏனோவெறுப்பு இப்பொழுது ஓர்சற்று இரங்கு கில்லாய்**
**நானோ அறிவேன் உன்பெருமை யைநம்ப னேநீ**
**தானே பொறுத்துஆளு கண்டாய் என்தவறு எலாமே.**

கடவுளே! முன்பு ஒரு காலம் விடையேறி அடியேன் எதிரில் விரைந்து வந்த உமக்கு இப்பொழுது என்மீது வெறுப்பு வந்ததேன்? ஒரு சிறிதேனும் இரங்கியருள்க. அறிவற்ற நானோ உம் பெருமையை உணர வல்லேன்? ஆதலால் நீங்கள் அடியேனது குற்றங்கள் அனைத்தையும் பொறுத்து வலிய வந்து ஆட்கொள்வீராக.

**11.** **எல்லாம் அறிவோய் அறிந்தே வகுத்திட்ட வாறே**
**அல்லால் தமியேனும் புரிவதொன்று இல்லை யானால்**
**பொல்லாமை செய்வித்தவன் நீபொறுப் பானும் நீகல்**
**வில்லாய் இளைத்தேனைப் பவத்துஇனி விட்டி டேலே.**

எல்லாம் உணர்ந்தவனே. சீவர்களுக்கு வினைப்பயன்களை வகுத்துக் கொடுத்தவனே! மேருவை வில்லாய் உடையவனே. நீயே அமைத்த வழியில் நடந்து வருவதேயன்றி அடியேன் செய்வது எதுவும் இல்லை. குற்றம் செய்ய வைத்தவரும் நீயே. அதன்பின் மன்னிப்பவரும் நீயே. இப்பொழுதும் வருந்துகின்ற என்னை சனனம் மரணம் சுழற்சியில் விட்டு விடாது அருள்வாயாக.

**12.** **ஏலக்குழ லார்அனு ராகம்அது என்னும் மாயா**
**சாலக்குள் நைந்தேற்கு உனதுஇன் அருள்தந்து காப்பாய்**

**நீலக்கள மால்அய னோடுமுன் நேடி வாடு**
**மூலக்கன லேகனல் ஏந்துகைம் முக்க ணானே.**

நீல கண்டம் உடையவனே! திருமாலும் நான்முகனும் முன்னாளில் அடி முடி தேடிக் காண முடியாமல் வருந்தும்படி செய்த மூலக் கனலே! தீயைத் தாங்கும் கையை உடைய முக்கண்ணனே! நறுமணச் சாந்தணிந்த குழலாரின் சிற்றின்ப விருப்பம் என்னும் மாய வலையில் கிடந்து வருந்தும் அடியேனுக்கு உம்முடைய இன்னருள் தந்து காப்பீராக.

13. **கண்ஆர் நுதலோய் கடையேனையும் ஒன்றது ஆயே**
**எண்ணா அருள்அன்று சுரந்துளைக்கு இன்றுஇ லாதுஎன்**
**விண்ணோர்இறை யோய்க்கும்உண் டோசொல் வெறுப்பி னோடு**
**தண்ஆர் விருப்பும்க ரிப்போர்வை யசாற்றி டாயே.**

. நெற்றிக் கண் உடையவனே! யானைத் தோல் போர்த்தவனே! முன்னொரு சமயம் தாழ்ந்தவனாகிய என்னையும் ஒரு பொருளாக எண்ணி அருள் பாலித்தாய். அவ்வருள் இன்று இல்லாமைக்குக் காரணம் யாதோ? விண்ணோர் கடவுளாகிய உமக்கும் விருப்பு வெறுப்பு உள்ளதோ? சொல்லுங்கள்.

14. **சாற்றாய் திருத்தில்லை உள்ளாய் சிவசங்க ராவெண்**
**நீற்றாய் கடையேன் உயுமாறுஎன்றன் நெஞ்சுள் அஞ்சிப்**
**போற்றாதுஇருந் தேன்வருந் தாமல்என் புத்தி தன்னைத்**
**தேற்றாய் ஒருநீஇனி அன்பினைச் செய்யு மாறே.**

திருத்தில்லையில் எழுந்தருளியுள்ளவனே! சிவசங்கரா! நலம் தரும் வெண்ணீற்றாய்! ஒப்பில்லாதவராகிய நீயே தாழ்வுடைய நான் பிழைக்கும் படியான வழிகளை உரைத்தருள்க. அடியேன் மனதினால் அஞ்சி இதுவரை உன்னைப் போற்றாது இருந்தேன். அதற்காக வருந்தாமல் இனி மேலாவது தங்கள்மீது அன்பு வைக்கும்படி என்னுடைய மனதைத் தெளிவாக்குக.

15. **மாறுஆய ஓர்ஐந்து புலன்வலி மாய்த்து நெஞ்சை**
**நீறுஆர்திரு மேனிய உன்கண் நிறுத்த மாட்டேன்**
**ஏறாத பவக்கடல் ஏறவும் எண்ணி நைந்தேன்**
**கூறாய்எனது எண்ணம்எவ் வண்ணம்கை கூடும் என்றே.**

நீறணிந்த மேனியனே! மனத்துக்குப் பகையாகிய ஐம்பொறிகளை அழித்து நெஞ்சை உன்னிடம் நிறுத்த இயலவில்லை. கடக்க இயலாத பிறவிக் கடலைக் கடந்து கரையை அடையக் கருதி வாடுகின்றேன். என் எண்ணம் எவ்வாறு கைகூடும்? இதனை நீயே கூறியருள்க.

**16.** **அன்றே தமியேற்கு எளிமானுடன் ஆகிநீ வந்து**
**உன்தாள்கள் அளித்தனை பெற்றும்ஒன் றும்பெ றாரின்**
**நின்றேன்அலது ஐம்புலன் என்வசம் நின்றது இல்லை**
**இன்றுஓது அவற்றைக் கொல்உபாயம் ஒன்று ஈச எற்கே.**

பரமனே! அடியேன் காண்பதற்காக குருவடிவாக மனித உருவில் தோன்றி உன் திருவடிகளைக் கொடுத்தாய். அவ்வாறு உனது திருவடிகளை அடைந்தும் ஒரு பயனும் இன்றி எதுவும் அடையாதார் போலவே இருக்கின்றேன். ஐம்பொறிகளும் என் கட்டுப் பாட்டில் இல்லை. அவற்றினை அழிக்கும் படியான வழி ஒன்றினை அடியேனுக்கு உரைத்தருள்க.

**17.** **எற்கோ உனதுஅன்பு மனத்திலை என்றன் நெஞ்சம்**
**கற்கே நிகராயது இக்கல்லை நீகல்லை வில்லா**
**முற்கால் வளைத்தாங்கு வளைத்துஅன்பின் மூழ்கு விப்பாய்**
**சிற்கோல சிதம்பர நாயக தேவ தேவே.**

ஞான வடிவானவனே! சிதம்பரத்திலுள்ள நாயகனே! தேவ தேவே! எனக்கோ உன்னிடத்து அன்பு இல்லை. அடியேன் நெஞ்சம் கல்லுக்குச் சமமாய் இருக்கின்றது. ஒரு காலத்தில் நீயே மேரு மலையாகிய கல்லை வில்லாக வளைத்தீர். அது போல் என்னுடைய கல் மனத்தையும் வளையச் செய்து பக்தியில் மூழ்கச் செய்வீராக.

**18.** **தேவேஉனை அன்பினில் பூசைசெய் தேனும் அல்லேன்**
**நாவால் மிகப்பாடி நின்றுஆடி நயக்கு கில்லேன்**
**ஓவாதுஉழல் தீமனத் தோடுஇவண் உற்று ளேன்மற்று**
**ஆஆஇனி என்வரும் என்பது அறிந்தி லேனே.**

எல்லா தேவர்களுக்கும் தேவனாக விளங்கும் நாயகனே! உன்மேல் பக்தி கொண்டு வழி பட்டவனும் அல்லேன். நின் முன் நின்று உன்னை நாவாரப் பாடி ஆனந்தமாக ஆடிப்பாடி விருப்பமுடன் வணங்கவுமில்லை. இடையறாது சுற்றித் திரிகின்றது என் தீய மனம். அந்தோ! இதனால் தீங்கு வரும் என்பதை யான் உணரவில்லையே!

19. **அறியாமையில் கீழவர் பல்பிழை ஆற்றி னாலும்**
**குறியாதுஅருள் செய்வது மேலவர் கொள்கை அன்றோ**
***மறிஆர் கரத்தோய் சிறியேன்வினை மாற்றி ஆளப்**
**பொறியேல் உனக்குஎன் முகமன்சொல்அப் பொய்ய னேனே.**

அறியாமையினால் பக்குவமடையாத மக்கள் பல தவறுகள் செய்தாலும் பொருட்படுத்தாமல் அருள் செய்வது, பெரியோர் இயல்பு. மான் ஏந்திய கரத்தானே! என் வினைகளை மனமிரங்கி நீக்கி அருளவில்லையானால் பொய்யான மாயையில் உழலும் நான் உன்னைத் தோத்திரம் செய்து என்ன பயன்?

20. **பொய்அற் றவர்வந்துஅடை யும்பரி பூர ணாஇம்**
**மெய்அற்ற எற்குநின் அலால்நிலை வேறும் உண்டோ**
**தையற்கு இடமேஇட மாஅருள் தாணு வேஎன்**
**மையல் தவிர்ப்பான் உன்கடாட்சம் வழங்கி டாயே.**

கள்ளம் அற்ற மனமுடைய, உலகப் பற்றற்றவர் வந்து அடையும்படியான முழுமை பெற்றவனே! அம்மைக்கு இடப் பகுதியை அருளிய பெருமானே! நிலை பேறுடையவனே! உண்மை அறியாத இந்த அடியவனது மயக்கம் தீர்க்கும் பொருட்டு அருளை வழங்குவீர்.

21. **வழங்குஎற்கு இவண்ஏது செய்தால் எதுஆகும் என்றுஎன்று**
**எழும்கற்ப னையாவும் இறந்துஉணர்வு ஏக மேயாய்**
**ஒழுங்கில் புலன்ஆதி உபாதிஒ ழித்தஒரு உன்னைச்**
**செழுங்கைக் கனிஒத்து உணரும்படி தில்லை யனே.**

---

* *மறி – மான்.*

தில்லைப் பதியுடைய பெருமானே! முறையாகப் பொறி உணர்வுகளை நீக்கி அருள்வாய். இவ்விடத்தில் என்ன செய்தால் என்ன விளைவு ஏற்படும் என்று தோன்றும் கற்பனைகள் அனைத்தும் நசித்துப்போகச் செய்வாய். ஒப்பற்ற உன்னை என் உணர்வுகளோடு கலந்து உள்ளங்கை நெல்லிக் கனியென உணருமாறு அடியவனுக்கு உரைத்தருள்க.

**22. தில்லைப் பதிமேய சிவப்பிர காச னேயோ**
**தொல்லைப் பிறவா நெறிமேவிய தோன்ற லேயோ**
**அல்லல் பிறவிக்குஇளைத் தேன்தனை அஞ்சல் என்றுஓர்**
**சொல்லைப் பகராய் விடைமீதுஇனம் தோன்றி நின்றே.**

தில்லைச் சிவப்பிரகாசனே! தொன்று தொட்டு வரும் பிறப்பு இறப்பு அற்ற பெருமையாளனே! இன்றே விடை மீது எழுந்து வந்து இந்தப் பிறவித் துயரில் வருந்தும் தனியேனைப் பார்த்து "அஞ்சாதே" என ஒரு சொல் கூறியருள்க.

**23. தோன்றாத் துணையே புணையே பவத்தொல் கடற்குஎன்**
**போன்றார்க்கும் இரங்கும் அருட்பெரும் போத மேஇங்கு**
**ஈன்றார் மனைஆதிய மோகம்எ லாம்வி டுத்துஉள்**
**சான்றாம் உனையே வினையேன் இனிச்சார எண்ணே.**

தோன்றாத் துணையே! தொன்று தொட்டு வரும் பிறவிக் கடலைத் தாண்டுதற்குரிய மரக்கலம் ஆனவனே! என் போன்றார்க்கும் கருணை புரியும் பேரருள் வடிவினனே! இங்கு பாவியாகிய நான் இனிமேல் தாய், தந்தை, மனைவி ஆகியோரின் பேரிலுள்ள ஆசைகள் யாவற்றையும் விட்டு விட்டு இதய சாட்சியாய் விளங்கிக் கொண்டிருக்கும் உம்மை அடைய அருள் செய்வீராக.

**24. சார்ந்தாய் குருஆதிய வாய்விடை தன்னில் வந்தாய்**
**கூர்ந்தாய் அருளில் பிறவாநெறி கூட்டு வித்தாய்**
**ஓர்ந்தேன் குறைஇன்று எனினும்குறை உண்டு கண்டாய்**
**பேர்ந்தோடும் என்நெஞ்சுள் உன்அன்பு பிறக்கும் மட்டே.**

குரு வழிபாடு, இலிங்க வழிபாடு, அடியவர் வழிபாடு ஆகியவற்றை ஏற்று விடைமேல் எருந்தருளி வந்தாய். என்னைப் பிறப்பு இறப்பற்ற நெறியில் சேர்த்தாய். இவற்றை எல்லாம் அடியேன் உணர்ந்தேன். குறை ஏதும் இல்லை. ஆயினும் நில்லாதோடும் என் நெஞ்சம் சதா உன்னையே நினைத்து அன்பினால் உருகவில்லையே, என்ற குறை மட்டும் இருக்கின்றது.

25. பிறவா நெறியாகிய துழர்திருப் பேரை யாளம்
உறவே அறவே தவிர்ந்துஎன் மனம்ஓடி வாடிப்
புறவாதனை பற்றிவ ளர்ந்திடு புன்மையா லின்று
இறவே அதனைப் புரிவான் உளத்துஎண்ணு வாயே.

பிறவா நெறியினனே! அழகிய பேரையூரில் எழுந்தருளி இருப்பவனே! எனது ஒரே உறவே! என் உள்ளம் அறவே என்னை விட்டு நீங்கி ஓடிப் புறவாசனை அடைகின்றது. அந்த இழிந்த தன்மையினால் இன்று பிறவா நெறிபுகமுடியவில்லை. இச்சைகளை அடியோடு நாசம் அடையும்படி செய்ய உன் மனத்தின்கண் நினைத்து அருள்க.

26. எண்ணும்வடிவு ஏதுஇனி நீபுணைந்து எய்தி னாலும்
திண்ணம்என் அவாஅக லாஅச்சி தம்ப ரத்தே
நண்ணும்உனது உண்மையைக் காணந யந்துஉ ளேன்என்
உள்நின்று அதைக்காட்டு தற்குஈசசற் றுஉன்னு வாயே.

நீ நினைத்த போதெல்லாம் நினைத்த வடிவம் எடுத்துக் கொள்ளும் சக்தியுடையவன். ஆயினும் என் உள்ளம் உறுதியாகச் சிதம்பரத்தில் ஆடுகின்ற உனது நடராஜ கோலத்தையே உண்மையான வடிவம் என நம்பித் தரிசனம் செய்ய ஆசைப் படுகிறது. என் இதயத்திலுள்ளே நின்று உன் நடனமாடும் கோலத்தை எனக்குக் காட்டியருள்க.

27. உன்னும் உணர்வுக்கு உணர்வாய் எனக்குஉண்மை தந்தாய்
மன்னும் சுருதிப் பொருளாய் வழிகாட்டி நின்றாய்
பின்னும் குருவாய் அடைந்துஉன் அருள்பேண வைத்தாய்
என்என்று உரைப்பேன் நின்கருணை இருந்த வாறே.

என் உணர்வுக்கு உணர்வாக இருந்து எனக்கு உண்மை வடிவைக் கொடுத்து அருள் செய்தீர். நிலைபெற்ற வேதத்தின் பொருளை எனக்குக் காட்டியருளினீர். பின்னும் குரு வடிவாய் வந்து அடியவன் உம்மைச் சரண் அடைந்தபோது அருள் செய்தீர். என் மீது உமது அருள் இருந்த தன்மையை எவ்வாறு கூறுவேன்?

**28.** **இருந்து ஒரும்இடத்து உணர்வுஇல்லை மாயைக்குஇ தன்பால்**
**பொருந்தா இடத்துஇல்லை உயிர்க்குஒரு போத மேனும்**
**திருந்தா இவைகொண்டுஇறை ஐந்தொழில் செய்தி என்றே**
**வருந்தா அருள்முன்னி லைதன்னை மதித்து யானே.**

ஆராயும் பொழுது மாயைக்கு உணர்வு இல்லை. இந்த மாயையின் பால் சேராதிருப்பின் சீவனுக்கு எந்த வித ஞானமும் இல்லை. மாற்றமில்லாத இவ்விரண்டினையும் கொண்டு பரமேசுவரனாகிய நீர் ஐந்தொழில் செய்கின்றீர் என்று உணர்ந்து கொண்டு விட்டேன். அதனால் என் துக்கத்திற்குக் காரணமானவர்களை எண்ணி எண்ணி நான் வருந்தாமலிருக்க அருள் செய்வீராக.

**29.** **மதித்துஎன் பருவத்து அளவில்குரு ஆதி யாகி**
**உதித்துஉள்அறிவு ஓங்கும் வகைக்குஉபா யம்செய் தோயை**
**எதிர்த்து இங்ஙனம் சற்குரு சற்குரு என்று நைந்தும்**
**துதித்தும் திரியாஎனக்கு இன்அருள் தந்து தோன்றே.**

அடியவனின் பக்குவத்திற்குத் தகுந்தவாறு குரு, லிங்க, அடியவர் வடிவமாய்த் தோன்றி, மனத்தின் கண் ஞானம் வளர்கின்ற வகை வழி செய்த உம்மைத் தேடி அடைந்து, "சற்குரு, சற்குரு" எனக்கூறி உருகித் துதித்துத் திரியாத அடியேனுக்கு இனிய அருள் தந்து காட்சியளிப்பீராக.

**30.** **தோன்றாமல் முனிந்துஒரு தாய்வயிற்று தோன்று பாலர்**
**ஈன்றாள்தனைத் தம்மின்வே றாக்கொடு இகழ்ந்த வாபோல்**
**பூன்றாஒரு நீஅரு ளால்புனை மேனி எல்லாம்**
**யான்தான் பலதெய்வம் எனக்கொடு இகழ்ந்த வாறே.**

தமக்குள் சண்டை போட்டுக்கொள்கிற பிள்ளைகளைத் தாயார் கண்டித்து அடக்குவாள். அப்போது கோப மடைந்த பிள்ளைகள் தாயை நிந்திப்பார்கள். தாய்க்கும் தனக்கும் சம்பந்தம் இல்லாதது போலப் பேசுவார்கள். நீ ஏகவஸ்துவாகவும், பரிபூரணனாகவும் இருக்கிறாய். உன்னுடைய பேரருளால் பல்வேறு உருவங்களை எடுத்துக் கொள்கிறாய். நாங்கள் பிரம்மம் ஒன்றே என்று அறியாமல், "உன் தெய்வம் தாழ்ந்தது, என் தெய்வம் உயர்ந்தது," என்று பூசலிட்டுக்கொள்கிறோம்.

**31.** **இகழும்பொருள் ஒன்றுஇலை மண்முதல் எட்டும் எந்தாய்**
**நிகழ்உன்வடி வேஎனத் தேர்ந்துஉளம் நெக்கு நின்தாள்**
**புகழும்படி யேஇனி ஈசஎன் புத்தி தன்னைத்**
**திகழும்படி செய்தி*தி ரோபவம் செய்தி டேலே.**

என் தந்தையாகிய ஈசனே! உலகில் நிந்திக்கத் தகுந்த பொருள் ஒன்றும் இல்லை. மண் முதலான எட்டு (வானம், காற்று, அக்கினி, நீர், மண், சூரியன், சந்திரன், சீவன்) மங்கள வடிவங்களும் உன் வடிவங்களே என்று தெளிந்து மனம் நெகிழ்ந்து உன் திருவடித் தாமரைகளைப் புகழும் படியாக இப்பொழுதே அடியவன் புத்தியினை மயங்காது விளங்கச் செய்வீராக.

**32.** **செய்யாய்கரி யான்தொழும் வெள்இளம் சேவை ஊர்வோய்**
**வையார்மழு வோய்திரு உள்ளம்இவ் வஞ்ச னேனும்**
**ஐயாவிழி பெய்வுற நீர்பெரிது அன்பி னோடு**
**கையால்தொழுது ஏத்திநின் கூத்தினைக் காணு மாறே.**

திருமால் வணங்கும்படியாக இளைய விடைமேல் ஏறி காட்சி தரும் இறைவனே! கூரிய மழுவுடையாய்! அய்யா! வஞ்சகனாகிய நானும், மிக்க அன்போடு கண்கள் நீர் சொரியக் கையினால் தொழுது வணங்கி உமது திருக்கூத்தினைக் காணும்படி திருவுள்ளம் செய்க.

**33.** **காணாத பவக்கட லின்கரை காண எற்குக்**
**கோள்நாகுஅணி மார்பமெய் அன்புகொ டுத்தி என்றே**

---

* *திரோபவம் = மயங்கச் செய்தல்.*

**நாணாதுஇசைத் தேன்திருக் காளத்தி நாத உன்தாள்**
**பேணாதுஅவ லக்கடல் மூழ்கிய பேதை யேனே.**

நாகராஜனை அணியென அணிந்த மார்பனே! திருக்காளத்தி நாதா! உம் திருவடிகளைப் போற்றாது அவலக் கடலில் மூழ்கும் இந்த அறிவிலா எளியேனுக்கு பிறவிக் கடலைக் கடந்து கரையை அடையும்படி அன்பினால் அருள்செய்க. இதனை நான் பலரறிய வெட்கமின்றிக் கேட்கிறேன்.

**34.** **பேதைக்கு ஒரு பாகம்அளித் திடுபேரை யாளம்**
**கோதைக்குநின் தோள்உறு கோதைகொடு என்று நின்பால்**
**ஓதற்குஎன் உளத்தை விடுத்தனன் ஓடி மாதர்**
**காதல்களை உண்டமை யால்உனைக் கண்டது இன்றே.**

அம்பாளுக்கு ஒரு பாதி உடல் கொடுத்த பேரையூர் இறைவா. என் தலைவிக்கு* உன் தோளில் உள்ள பூமாலையைக் கொடுத்தருள்க என்று உன்னிடம் சொல்வதற்கு அடியேன் மனத்தினைத் தூதாக அனுப்பினேன். அது வேகமாய் விரைந்தோடிப் பெண்களது ஆசை என்னும் கள்ளை உண்டமையால் உம்மைக் கண்டு வணங்கவில்லை.

**35.** **கண்டேன் களிகூர்ந்து சிவப்பிர காச நாமம்**
**கொண்டுஓங்குஉரு வோடுஇவண் உற்றுஎனை ஆண்ட கோவே**
**பண்டேஒரு நீவகுத் திட்டப டிக்கு யான்உன்**
**தொண்டுஆகி வந்துஇன்றுஉனைப் பாடத்தொடங்கி னேனே.**

கண்டேன்! சிவப்பிரகாசன் என்று பெயர் கொண்டு பெருமை பொருந்திய வடிவுடன் இங்கு எழுந்து வந்து அடியவனை ஆட்கொண்ட தலைவா! மிகுந்த ஆனந்தம் அடைந்தேன். நீர் என்னை ஆண்டு கொண்டதால் உம் தொண்டனாகி இன்று தங்களைப் பாடுகின்றேன்.

---

* *தலைவி என்பது இங்கே நாயகனின் அன்புக்காக ஏங்கும் சீவாத்மாவைக் குறிக்கும்.*

36. தொடக்காய்எனைச் சூழ்ந்துள ஐம்புலத் தோற்றம் எல்லாம்
கெடக்கூறுதி நீஒரு சூழ்ச்சி கிளக்கி லாயேல்
அடக்கா அவைஎன்றன் அகத்துள் அடங்கு காறும்
கடக்கேன் பவவேலை எவ்வண்ணம் முக்கண்ணி னானே.

முக்கண்ணனே! அடியவனைச் சூழ்ந்து கட்டுண்டு இருக்கும் ஐம்பொறிச் செயல்கள் யாவும் அழியும்படி ஒரு வழி சொல்க. அங்ஙனம் கூறாதிருப்பின் அடக்க இயலாத ஐம்பொறிகளும் அடியேனது மனத்தின் கண் அடங்கும் வரை பிறப்பு இறப்பாகிய கடலினை எவ்வாறு தாண்டுவேன்?

37. கண்ணால்மத னைப்பொடி யாம்வகை கண்ட எண்தோள்
அண்ணாஉயிர் யாவும் அளித்திடும் அப்ப னேயோ
தண்ஆர் பொழில்தில்லை உளாய்எனக்கு ஈது தாராய்
மண்ஆதிய ஆசைகள் அற்றுஉனை வாழ்த்து மாறே.

நெற்றிக் கண்ணால் மன்மதனைப் பொடி செய்த எண்தோள் ஈசனே! அனைத்துயிர்களையும் காத்திடும் தந்தையே! குளிர்ந்த சோலைகள் சூழ்ந்த தில்லையில் எழுந்தருளியுள்ள சுவாமி! அடியவனுக்கு மண், பெண், பொன் என்பவற்றில் உள்ள ஆசைகள் முற்றிலும் நீங்கி உனை வாழ்த்தித் துதிக்கும் படியான வரத்தினைத் தந்தருள்க.

38. வாழ்த்தேன்உனை நாள்தொறும் வாழ்த்துவல் லோர்கள் தாளில்
தாழ்த்தேன் தலைஆங்கு அவர்ஏவல் தலைக்கொள் கில்லேன்
வீழ்த்தேன் நெடுங்காலம் அவத்தில் ஒண்மேரு வில்லோய்
பாழ்த்தேன் கிளிபோல் பாநூல்கள் படித்தும் யானே.

ஒளி பொருந்திய மேருவை வில்லாக உடையவனே! உம்மை நாள்தோறும் போற்றவில்லை. உன்னை வணங்கும் அடியார்களின் திருவடிகளில் தலை தாழ்த்தி அவர்களிட்ட பணிகளைச் செய்திலேன். கிளியைப்போல பொருள் உணராமல் பல நூல் கற்று ஓதியும் பயனடையாமல் நாட்களை வீணாக்கினேன்.

39. யான்ஆர்உடற்கு இன்பதுன் பங்களை எண்ண எண்ணித்
தானேசிறு பாலரின் என்மனம் சஞ்ச லிக்கும்
மீனாயினன் பால்அலது என்கண் விடுத்தி கொலோ
ஆன்ஏறு உடையாய் திதியாம்அதி காரம் நீயே.

விடை வாகனம் உடையவனே! காத்தல் தொழிலை மச்சாவதாரம் எடுத்த திருமாலிடம் கொடுத்துள்ளீர். அதனை என் பால் கொடுத்தாயில்லை. ஆதலால் உடலுக்கு உள்ள இன்ப துன்பங்களை உணர்ந்து காப்பாற்றிக்கொள்ள அடியவனால் எவ்வாறு இயலும்? சிறு குழந்தை போல் உள்ளம் சஞ்சலப்படுகின்றது. அதை நீக்கி அருள்க.

**40.** **காரார் மிடற்றாய் அளிசூழ்தரு பொற்க டுக்கை**
**தாரார் புயனே சிவகாம சவுந்த ரிக்குஓர்**
**சீரார்மண வாளஎன் றன்குல தெய்வ மேநீ**
**பாராய்கடைக் கண்எனது எண்ணம்ப லிக்க இன்றே.**

நீலகண்டனே! வண்டுகள் மொய்க்கும் பொன்னிறக் கொன்றைப் பூ மாலையணிந்த புயமுடையவனே! சிவகாம சுந்தரி மணவாளா! அடியவனின் குல தெய்வமே! நீ இன்று அடியவனின் எண்ணம் முற்றுப் பெறக் கடைக்கண் பார்த்தருள்க.

**41.** **இன்றுஎன்னை செய்கேன்என நாடிஇருந்த தீயேற்கு**
**ஒன்றுஎய்தின்எவ் வண்ணம் அறும்அதை ஓதுவேனோ**
**அன்றுஅன்னமும் ஏனமும் ஓர்வுஅரும் ஐயநின்தாள்**
**ஒன்றுஅன்பர் குழாத்துற ஈதுஅரு ளாய்உவந்தே.**

முன்பு நான்முகன் அன்ன வடிவமாயும் திருமால் பன்றி வடிவமாயும் முறையே மேலும் கீழும் தேடி அறிதற்கரிய தந்தையே! இப்பொழுது என்ன செய்வேன்? எப்படி எனக்குள்ள பற்று நாசமாகும் என எண்ணிக் கலங்கும் இத் தீயவனுக்கு ஒரு வழி புலப்பட்டது. அது கிடைக்கும் வழி கேட்டு விண்ணப்பம் செய்கிறேன். உம் திருவடியைச் சேர்ந்த அடியார்கள் கூட்டத்தில் சேரும் படியான ஒரு நிலையை மட்டும் மனமுவந்து அருள்வீராக.

**42.** **உவந்தாய்எனது ஐம்புல னும்இரிந்து ஓடஓர்நாள்**
**தவந்தான்சிறி தும்இலிபால் விடைதன்னில் மின்னோடு**
**இவர்ந்தேவர நாளும்வி ளங்கிலை என்னைகொல்லோ**
**அவம்தான் மிகுபாவி உன்லீலை அறிந்திலேனே.**

ஐம்புல உணர்வுகளும் நாசம் அடைய நெடுங்காலம் தவம் செய்யும்படியான எண்ணம் என்னிடம் கொஞ்சமும் இல்லை. அப்படிப்பட்ட என்னிடம் விடை வாகனம் ஏறி அம்பிகையோடு மனம் உவந்து காட்சி தந்தீர். அதன்பின் இந்நாள் வரையும் என்பால் எழுந்தருளி வரவே இல்லை. என்ன காரணமோ? அறியேன். தீயவனாகிய என்னால் உம் திருவிளையாடலை புரிந்து கொள்ள முடியவில்லை.

**43.** **அறியாமையில் கட்டுணல் உற்றதுஎன் ஆண்மைஅத்தைப்**
**பிறியாது விடேன்எனல் எந்தைபிரான் உன்ஆண்மை**
**குறியீதுஇரு வர்க்கும்என் றால்எனைக் கோபியேலே**
**செறிவாய் மலமே இறையோடுஇகல் செய்ததன்றே.**

என் தந்தையே! அறியாமையால் கட்டுப்பட்டிருப்பதே என்னுடைய திறமை. என் மிகுந்த அறியாமையை நீக்குவதே உங்கள் திறமையும் குறிக்கோளும் ஆகும். இதுதான் நம் இரண்டுபேருக்குமே குறிக்கோள் என்றால் இந்தக் கலகமானது என்னுடைய அஞ்ஞானத்துக்கும், தங்கள் அருளுக்கும் உள்ள பகையே அல்லாமல் என்மீது என்ன குற்றம்? என் மீது கோபம் கொண்டு என்ன பயன்?

**44.** **செய்விப்பன் வினைத்தொகை வெம்பவம் சேர்ப்பன்உன்னை**
**உய்விப்பனேல் அச்சிவன் ஆண்மையும் ஓர்வன்என்றோர்**
**ஐவர்க்கு எதிரேஎனை நோக்கி அறைந்ததுஐயா**
**மைவெற்புஅன ஆணவம் நீஅதை மாற்றிடாயே.**

"நல்வினைகளையும் தீவினைகளையும் உன்னை மீண்டும் மீண்டும் செய்ய வைத்து பவக் கடலில் உன்னை வீழ்த்துவேன். அந்தச் சிவபெருமானால் உன்னை உய்விக்க முடியுமா என்பதையும் பார்த்து விடுகிறேன்" என்று என்னுடைய இருள் மலைபோன்ற ஆணவம் அடித்துச் சொல்கிறது. ஞானேந்திரியங்கள் ஐந்துமே இதற்குச் சாட்சியாக இருக்கின்றன. இதைத் தாங்கள் தான் மாற்றி அருளவேண்டும். (ஆணவம் என்ற இருளைப் போக்கி அருளவேண்டும் என்பது கருத்து)

**45.** **மாற்றாய்எனக்கு ஆணவம் மாயையில் வந்துவந்தே**
**தோற்றாஉள கேவலம் ஆதிய சுத்தம்ஒன்றுஊடு**
**ஏற்றாய்அவண் ஏற்றி இரண்டுஅறுத்து எங்கும்ஆகிக்**
**கூற்றுஆவிகொள் பதத்துஎன் ஆவியும் கொள்ளுவாயே.**

என்னுடைய ஆணவம் காரணமாக ஏற்பட்ட அஞ்ஞானத்தினால் மாறி மாறித் தோன்றிக் கொண்டிருக்கும் அவத்தைகள் மூன்று. (சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி என்று மூன்று நிலைகள்.) இதிலிருந்து என்னை விடுவித்து துரியாவத்தையில் நான் ஆழ்ந்திருக்க அருள் புரிவீராக. பிரம்ம சொரூபம் ஒன்றே, இரண்டல்ல என்ற ஞானத்தை அருள்வீராக. எமனுடைய உயிரைப் பறித்த தங்கள் சேவடிகளில் என் உயிரையும் சேர்த்துக்கொள்வீராக.

**46.** **கொள்ளேன் எனினும்எழுத்து ஐந்தும்உள் கோதுயாதும்**
**தள்ளேன் எனினும்உனைச் சார்தவம் சார்ந்திலாரை**
**விள்ளேன் எனினும்எனை நீகைவிடேல் விடேல்காண்**
**நள்ளாறுஉடை யாய்அவி நாசி நயந்துளானே.**

திருநள்ளாறுடையவனே! அவிநாசியை விரும்பி உறைபவனே! ஐந்தெழுத்தையும் அடியேன் இடைவிடாது ஓதவில்லை. மனத்துக்கண் உள்ள குற்றங்கள் எதையுமே போக்கவில்லை. உம்மை அடையவேண்டி தவம் செய்யாத பாவிகளின் கூட்டுறவை விடவில்லை. ஆனாலும் என்னை நீர் கைவிடாதீர்.

**47.** **நயவாதுதில் லாபுரி யோய்உனை நாடிநாளும்**
**வியவாதுஉட லோடுஉறவு என்றும்விடாது என்உள்ளம்**
**கயவாதுறு போகம் எலாம்இவை கண்டுவீடும்**
**பயவாதுஇது என்றேபயந் தேன்மிகப் பாவியேனே.**

தில்லைப் பதியுடையவனே! அடியேனது மனம் நாள் தோறும் உம்மைத் தியானித்து அடைய விரும்பமாட்டேன் என்கிறது. துதிக்கவும் மாட்டடேன் என்கிறது. உடலோடு உள்ள உறவை விட மாட்டேன் என்கிறது. உலக இன்பங்களையும் துறக்க மாட்டேன் என்கிறது. இத்தகைய என் மனம் முத்தியை எப்படி எனக்குப் பெற்றுத் தரும் என்று பயமாக இருக்கிறது.

**48.** **பாவால்பெரி யோர்புகழ் சிற்றம்ப லத்துஉளோயை**
**நாவால்சிறி யேன்துதி செய்யும்இந் நன்குஇல்சொல்லும்**
**ஓவாதுஇரை யோர்உழை தாவிய உன்செவிக்கே**
**மேவாதுஅல என்று துணிந்து விளம்பினேனே.**

பெரியோர்கள் தம் தீந்தமிழ்ப் பாடல்களால் புகழ்கின்ற சிற்றம்பலத்தில் நடனமாடும் தங்களை சிறியேனாகிய நானும் பாடத் துணிந்தேன். என்னுடைய பொருளற்ற பாடல்களைத் தங்கள் திருச்செவியில் ஏற்றுக்கொள்வீர்களென்று துணிந்தேன். தங்கள் செவியின் அருகில் தாங்கள் ஏந்தியிருக்கும் மானும் ஓயாமல் கத்திக்கொண்டிருக்கிறது. அந்த ஒலியுடன் கூடவே என் பாடல்களையும் தங்கள் திருச்செவியால் கேட்பீர்கள் என்று நம்பிப் பாடினேன்.

**49.** **விளம்பற்குஅரும் சோதிஎன்கோ விடையோன் என்கோஎன்**
**உள்ளம்புக்க சிவப்பிர காசன்என்கோ என்அங்கைத்**
**தளம்பற்றிய சாந்தன்என் கோநின் தனதுநாம்**
**வளம்பெற்ற திருக்கயி லாயசொல் வாய்எனக்கே.**

அனைத்து வளங்களும் பெற்ற திருக்கயிலை நாதனே! உனது நாமத்தை சொல்லுகையில் அரிய அறிவு வடிவம் என்று கூறுவதா? அழகிய காளை வாகனத்தில் எழுந்தருள்பவன் என்று கூறுவதா? என் மனத்தில் எழுந்தருளி இருக்கின்ற எனது குருவாகிய சிவப்பிரகாச சுவாமிகள் என்று கூறுவதா? நான் உள்ளங்கையில் வைத்து வழிபடும் சாந்தலிங்க சுவாமி என்று கூறுவதா? எப்படி கூறுவதென்று அருள்வீராக!

**50.** **எனக்குஈந்து ஆண்டிடல் வேண்டும்எம் ஈசனேமற்று**
**உனக்கேசர ணம்சர ணம்புல னோடும்என்றன்**
**மனக்கோதுஅனைத் தும்இறந்து ஒங்குஅறிவு ஆகிஆங்கே**
**பினைக்காண்பவன் காட்சியும் அற்றுஅ பேதவாழ்வே.**

எம்பிரானே! உன்னை சரணடைந்தேன். உலக சுகங்களையே நாடும் என் மனதில் குற்றங்கள் யாவற்றையும் நாசம் செய்து, நானே அறிவு வடிவம் என்பதை உணர்த்தி, ''காண்பவன், காணும் அறிவு, காணப்படும் பொருள்'' என்னும் திரிபுடி அற்ற அத்வைத ஞானத்தை அடியேனுக்குத் தந்தருளி எனை ஆளவேண்டும்.

**வைராக்கிய சதகம் நிறைவுற்றது**

## முகவுரை

இந்நூலாசிரியர் பேரூர் சாந்தலிங்க சுவாமிகள். பதினேழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். வீரசைவ சமயத்தில் தோன்றிய சிறந்த ஞானி. கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார் என்ற நூல்களை இவர் நம் சமய உலகுக்கு வழங்கியுள்ளார்.

இவை முறையே சீவகாருண்ணியம், ஈசுர பத்தி, பாச நீக்கம், பிரம்ம ஞானம் என்பவற்றை உணர்த்துவனவாய் அமைந்துள்ளன.

வைராக்கிய தீபத்தில், புறத்துறவே அகப்பற்றையும் வாசனையையும் கெடுத்து, அஞ்ஞான இருள் துறந்து ஞானம் அடைவதற்குச் சாதனம் எனவும், துறவற நியமங்களையும் வற்புறுத்திக் கூறியிருக்கிறார்.

ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அருளிச் செய்த வைராக்கிய தீபம், உலகில் மக்களால் விரும்பப்படுவது சுகம் ஒன்றேயாகும், அந்த சுகமும் விடயயின்பம், முத்தியின்பம் என இருவகைத்தாகும். விடயங்கள் மக்களுக்கு அவரவர் வினைக்கு ஏற்ற விதமாக உயர்வு தாழ்வோடு கூடும். ஆதலால் அவற்றால் வரப்பட்ட சுகமும் உயர்வு தாழ்வு உடையனவாம். இப்படியில்லாமல் முத்தியின்பம் அனைவருக்கும் ஒரேபடித்தாக இருக்கும். அந்தப் பேரின்பத்தை அடைவதற்கு விவேகம், வைராக்கியம், சமாதிசட்க சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்ற நான்கும் சாதனங்களாகும். இந்த நான்கு சாதனங்களுள் வைராக்கியம் மிக முக்கியமாகும். வைராக்கியத்தைப் பூரணமாகப் பெற்றவனிடமே மற்ற சாதனங்கள் எல்லாம் கூடி நிற்கும்.

''வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை மற்றது
வேண்டாமை வேண்ட வரும்,''

என்று திருவள்ளுவர் அருளிச் செய்துள்ளபடி நிராசையினால் தான் முத்தியின்பம் கைகூடும். இந்நூல் வைராக்கியம் பழகுபவர்களுக்கு மிகவும் உபயோகம் உடையது.

இந்நூல் கோவிலூர்த் திருமடத்தில் ஆரம்பம் முதல் பாட நூலாக அச்சிடப்பட்டு வந்துள்ளது. இந்நூல் வெளிவர முதல் காரணமாக இருந்த பேரூர் சாந்தலிங்க அடிகளார் திருமடத்திற்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

# பாயிரம்

## பிள்ளையார் வணக்கம்

ஆரணமுகம்புகழ் வாரணம்துதிசெயக்
காரணசுகபரி பூரணம்வருமே.

வேதம் புகழும் யானைமுகனைத் துதித்தால் எல்லா சுகங்களுக்கும் காரணமாக இருக்கின்ற பேரின்ப நிலை கிட்டும்.

## முருகன் வணக்கம்

போரூர்இறைவன் சீரூர்தாளை
ஏரூர்தரநினை நேரூர்நெஞ்சே.

திருப்போரூரில் குடிகொண்டுள்ள முருகப் பெருமானின் அழகிய பாதங்களை நேர்மையான வழியில் சென்று முக்தியைத்தர இறைஞ்சுவாயாக.

## நூலாசிரியர் வணக்கம்

ஆய்ந்தஇன்பம் வாய்ந்துஉளம் நிறையச்
சாத்தையன்பதம் யாம்தொழுவோமே.

வேதங்களால் விளக்கப்பட்ட உண்மையான பேரின்ப நிலையை அடைய சாந்தலிங்க சுவாமிகளை உள்ளத்தில் நினைத்துத் தொழுவோம்.

## குரு வணக்கம்

தாயினும் இரங்கிஎன் தனைவந்து ஆண்டுஅருள்
தூயவன் சரணமே சுமக்க என்தலை
வாய்துதி செயக்கர மலர்கள் தூய்த்தொழ
நேயமோடு அனுதினம் நினைக நெஞ்சமே.

தாயைவிடக் கருணை மிகுந்து என்னை வந்து ஆண்டு கொண்டருளிய தூய்மையே வடிவான குமாரதேவரின் சரணங்களை என் தலையில் சுமக்கிறேன். என் வாய் அவரையே துதி செய்கிறது. என் கைகள் அவரையே பூஜிக்கின்றன. என் நெஞ்சமே அவரைத் தினந்தோறும் அன்போடு நினைத்துப் போற்றுவாயாக!

(இந்நான்கு துதிகளும் உரையாசிரியர் தவத்திரு. சிதம்பர சுவாமிகளால் இயற்றப்பட்டது.)

# கடவுள் வணக்கம்

1. திருவளர் கமலத்து அயன்செய்இப் புவிமுன்
திகழ்தரும் உலகுஎலாம் தன்பால்
மருவுசிற் சத்திஎ னும்கி ரணத்தால்
வந்துஎழு கானல்நீர் ஆக
இருமையாம் மதிமாய்த்து அறிஞராம் காந்தத்து
இடைஅருள் சுடர்உமிழ்ந்து இலங்கும்
ஒருசிவா தித்தன் தனைநமது இருள்போய்
ஒழியநாள் தொறும்இறைஞ் சிடுவாம்.

அழகிய தாமரை மலர் மீது வீற்றிருக்கும் பிரமனாலே படைக்கப்பட்ட இந்தப் பிருதிவி தத்துவம் முதலாக நாத தத்துவம் ஈறாக விளங்குகின்ற உலகம் எல்லாம், சூரிய கிரணத்தால் பொய்யாய்த் தோன்றுகின்ற கானற்சலம்போல, சிவனிடத்தில் உள்ள "சித்" சக்தி ஆகிய கிரணத்தால் கானல் நீர் போல தோன்றின. சூரியன் தோன்றியதும் சந்திர ஒளி மறைவது போல, அறிஞர்களுக்கு தானே பிரம்ம சொரூபம் என்ற ஞானத்தினால் அவர்களது துவித புத்தி நீங்கும். காந்தக் கல்லில் தீயை உண்டாக்கும் சூரியனைப் போல அவர்களிடத்து அருள் ஆகிய ஒளியை தோன்றச் செய்யும். அப்படி ஒப்பற்று விளங்கும் சிவன் ஆகிய சூரியனை, நமது அஞ்ஞானம் ஆகிய இருள் போய் ஒழிய தினந்தோறும் வணங்கி வேண்டுவோம்.

2. துன்னியஆ ணவப்பாம்பு எமதுஅறிவு எனும்ஓர்
சுடர்கெழு பூரண மதியை
முன்னமே தீண்டிற்று ஒளிவெளிப் படலால்
மோசன காலம்எய் தியதால்
தன்னிடத்து ஈசன் முதல்புவி முடிவுஎண்
தருநுரை ஆதிவந்து ஒடுங்கப்
பின்னைய பினையாம் திரைகள்வீ சிடும்ஓர்
பிரமவேலை யில்இனிப் படிவாம்.

கிரகண காலம் முடிந்ததும் சந்திரன் முழுமையாக ஒளி வீசுவது போல், ஞானம் ஆகிய ஒளியால் அஞ்ஞானத்திலிருந்து விடுபடும் காலம் வந்து பொருந்தியது. பிரம மாகிய தன்னிடத்து ஈசுவர தத்துவம் முதல் பிருதிவி தத்துவம் ஈறாக எண்ணப்பட்ட தத்துவங்கள், நுரை திவலை குமிழிகள் அலைகள் கடலில் எப்படி ஏக காலத்தில் உண்டாயிற்றோ, அப்படி தத்துவங்கள் தோன்றி ஒடுங்கும்படி, பின்னாசத்தி, அபின்னாசத்தி ஆகிய இரண்டு அலைகள் வீசிக்கொண்டிருக்கின்ற, ஒப்பற்ற பிரம்மமாகிய பெருங்கடலில் மூழ்கி திளைப்போம்.

## அருளிறை வணக்கம்

3. எப்பொருள் களுமாய் ஒப்புஉயர்வு இன்றி
இருந்ததன் உருஇறை குறையாது
அப்படி இருக்க ஆலியா நீரின்
அருள்இறை யாய்எமக்கு ஏம
வைப்புஎன அன்னை எனப்பிதா எனக்கண்
மணிஎனத் தவப்பயன் எனஉள்
செப்புஉயிர் எனவந்து ஆண்ட காளத்தி
தேசிகன் திருவடி பணிவாம்.

பிரபஞ்சத்தில் உள்ள எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி இருப்பவரும், ஆயினும் குறைவற்ற ஒரே பொருளாய்ப் பிரம்ம சொரூபமாகி இருப்பவரும் இறைவன். தண்ணீரானது குளிர்ந்து ஒரு வடிவம் பெற்று ஆலங்கட்டியாக மாறித் திடத்தன்மை பெறுகிறது. அதுபோல எங்கும் நிறைந்து பூரணமாக விளங்கும் ஈசனே குரு வடிவாக வந்து கருணைமிகுந்து என்னைப்போன்றவர்களுக்குப் புதையல் போலவும், தாய் போலவும், தந்தை போலவும், கண்ணின் மணிபோலவும், உடலுக்குள் உயிர் போலவும், தபோபலம் போலவும், ஆட்கொண்டு அருளுகிறார். அப்படி ஆட்கொண்ட காளத்தி நாதன் என்னும் குருவின் பாதங்களைப் பணிகிறேன்.

(குறிப்பு – தனது குருவின் பெயரான சிவப்பிரகாசர் என்று குறிப்பிடாமல் மரியாதை காரணமாக அவர் தங்கியிருந்த ஊரின் பெயரால் குறிப்பிடுகிறார்.)

4. அருந்திய காலத்து அற்பமாப் பிற்பேர்
ஔடதம் உடலினின்று உடலை

**வருந்தல்செய் பிணிஎல் லாம்அகற் றுதலின்**
**வஞ்சனேன் நெஞ்சில்மாற் றரிதாய்**
**இருந்தஎப் பற்றும் பிற்றைநாள் களில்விட்டு**
**ஏகஅன் றேகடைக் கணித்தல்**
**புரிந்தநம் குரவன் அருள்இருந்தமை எப்பொழுதும்**
**உள்நி னைத்துவாழ்த் திடுவாம்.**

நோய் வந்தபோது அந்த நோய் தீர்க்கும் மருந்தை உண்கிறோம். அதே மருந்து நமது உடலில் ஊறி மற்ற உடற் பிணிகளையும் போக்குகிறது. அதுபோலத் திருவடிகளில் சரணம் அடைந்த அன்றே அஞ்ஞான இருளில் மூழ்கியிருந்த என் மனத்தில் உள்ள எல்லாப் பற்றுக்களையும் நீக்கி அருளிய ஆசாரியருடைய அருள் நோக்கை எண்ணி எண்ணி வாழ்த்துவோம்.

## வேதாகமச் சிறப்பு

**5.** **அரையன்வாய் உரைகள் வரைதரு முடங்கல்**
**அதுவரக் காணின்மற்று அவனால்**
**தரையில்வாழ் பவர்உள் நடுங்கிஓர்ந்து அதன்வாய்ச்**
**சாற்றிய முறைசெய்வார் என்றால்**
**கரைஇல்பேர் இன்பம் தரஎமக்கு இறைசொல்**
**கட்டுரை என்னின்வேறு என்னை**
**உரைஉள வேதா கமம்அவன் எனக்கண்டு**
**உரைத்தவா புரிகுவ தல்லால்.**

அரசனுடைய ஆணையைக் கண்ட உடனே அரசனைக் காணாத இடத்தும் அவருடைய ஆணைக்குக் பயத்துடன் மக்கள் கீழ்ப்படிவார்கள். அதைப்போல இறைவனை நாம் காணாதபோதிலும் மட்டில்லாத பேரின்ப நிலைக்கு அழைத்துச் செல்லும் இறைவன் அருளிய வேதாகமங்களில் விதிக்கப்பட்டபடி செயலாற்றுவோம்.

## முதல் நூல்

**6.** **கற்பழம் ஆகப் புரிதலில் பெரிதுஎன்**
**கருத்தினைத் திருத்திவந்து ஆண்ட**

**சிற்பரன் அருளால் சொற்பொருள் அறியா**
**தேனும் வேதாகம வழியீண்டு**
**உற்பவம் ஆதித் துயரைமுன் தவத்தால்**
**உணர்ந்தவர் துறவுஎனும் வாளால்**
**இற்பொருந் துதலை முதலவா அறுத்தோர்**
**இன்பவீடு உறல்சொலற்கு இயைந்தேன்.**

கல்லைப் பழமாகச் செய்தது போல், என் மனத்தினைப் பக்குவம் செய்து வலியவந்து ஆட் கொண்டார் என் குரு. அவருடைய அருளினால் சொல், பொருள், இலக்கணங்கள் அறியாத நானும் இந்த நூலை சொல்லத் தொடங்கினேன். முற்பிறவியில் செய்த தவத்தினால் பிறத்தல், இறத்தல் இவற்றால் ஏற்படும்துன்பங்களை இப்பிறவியில் உணர்ந்து துறவு என்கிற வாளால், இல்லறத்தில் உண்டாகும் ஆசைகளை அறுத்தவர்களுக்காக, ஒப்பற்ற பேரானந்தம் என்ற மோட்சத்தை அடைவதற்காக, சொல்லத் தொடங்கினேன்.

## அவையடக்கம்

7. **துணையில்பே ராசைக் கடல்உளோர் கரையாம்**
**துறவுஅத்து றவுவந் ததற்குஓர்**
**புணைஎனப் பெரியோர் வகுத்தநூல் களின்முன்**
**போதம் இலேனும்ஈது உரைத்தல்**
**உள்ளையமெய் வருந்த அயன்நெடு மால்அன்று**
**உயர்ந்து தாழ்ந்துஓடி யும்காணா**
**இணையிலி நடித்தல் செயமருங்கு அலகை**
**இனம்அசைந் திடுதலின் அன்றே.**

அளவற்ற பேராசைக் கடலில் ஆழ்ந்திருப்பவர்கள் துறவு என்ற கரை ஏறுவதற்காகப் பெரியோர்கள் பல நூல்களைத் தெப்பமாகச் செய்து கொடுத்தார்கள். அப்படி இருக்க அறிவிலியாகிய நானும் இந்த நூலை ஆர்வத்தினால் இயற்றத் துணிந்தேன். முன்னொரு சமயம் உள்ளம் திகைக்க, மெய் வருந்தி நான்முகன் சிவனின் சிரத்தைத் தேடினார். திருமால் சிவபெருமானின் திருவடிகளைத் தேடினார். பிரமனும் மாலும் தேடித்தேடிக் காணமுடியாத ஒப்புவுமை அற்ற ஜோதி வடிவம் சிவபெருமான். அப்படிப்பட்ட நடராஜ மூர்த்தி திரு நடனம் செய்யும்போது அருகில் நின்று பூதகணங்களும் கூத்தாடும். அதுபோல பெரியோர்கள் வகுத்துச் சொல்லிய நூல்களின்படியும் ஈசனின் திருவுளப்பாங்கின் படியும் இந்நூலை இயற்றத் துணிந்தேன்.

8. கயல்விழி மனைவி அனைமுத லியவாம்
கட்டது தனைஎனது எனவும்
இயல்பதாம் அசுத்தம் ஆதிஆர் உடற்கட்டு
இதனையான் எனவும்வைத்து எணும்ஓர்
மயலதாம் இருளைத் துறவுஎனும் ஒளியால்
மாற்றிநெஞ் சகத்தினை விளக்கம்
செயலின்இந் நூற்குப் பெயர்வயி ராக
தீபம்என்று உரைத்திடப் படுமால்.

பெண்டிர், தாய் முதலான தொடர்புகளை என்னது எனவும், குற்றம், துன்பம், நிலையாமை என்ற கட்டுக்களை உடைய தேகத்தை யான் எனவும், மனத்தின் கண் வைத்துக் கருதும் மயக்க இருளைத் துறவு என்ற ஒளியால் நீக்கி மன வீட்டினை விளக்கம் செய்தலால் இந்தச் சாத்திரத்தின் பெயர் வைராக்கிய தீபம் என்று சொல்லப்படும்.

9. உருள்கறங்கு ஊசல் மனம்ஒடுங் கிடஎன்
உணர்வுநேத் திரக்கியான் எனதாம்
இருள்கெடுத்து எலாமாம் பொருள்தி கழ்த்திடும்
ஓர்எழில் வயிராகதீ பத்தை
மருள்கொடும் பாசக் குழிக்கண்யாம் வீழா
வகைஅரு ளினன்மறை முடிவின்
தெருட்குஅமை வீர சைவன்எம் சாந்த
லிங்கதே சிகன்தெருள் சுடரே.

தேர்ச்சக்கரமும், காற்றாடியும், ஊஞ்சலும் போல மனமானது அலைகின்றது. அந்த சஞ்சலத்திலிருந்து மீண்டு மனம் ஒடுங்க வேண்டுமானால் அகங்காரம், மமகாரம் (நான், எனது) என்ற மயக்கத்தைத் துறக்க வேண்டும். இந்த அஞ்ஞான இருளைப் போக்கி, உலகம், சீவன், ஈசுவரன் ஆகிய மூன்றும் ஒரே பரம்பொருளாகிய சிவபெருமானே என்று தெளிய வேண்டும். மேலும் பாசக்குழியில் விழாமல் தடுத்தாட்கொள்ள வைராக்கிய தீபம் என்ற இந்த நூலை இயற்றி அருளினார், ஞான சூரியனான சாந்தலிங்க தேசிகர் என்ற வீரசைவர்.

**பாயிரம் நிறைவுற்றது**

# நூல்

1. **தோன்றிநின்று அழியப் படுங்கொடும் பிறப்பில்**
**துன்பமே அன்றிஎள் துணையும்**
**ஊன்றிநெஞ் சகத்துஓர்ந் திடில்பிறிது இலையால்**
**உண்டுபோல் திரித்துஉயிர்க்கு எல்லாம்**
**தான்திகழ்ந் திடும்ஓர் அகற்று இருளும்**
**தவிர்ந்துமற் றதும்உள படியே**
**ஆன்றவீடு உறமுற் பவம்தவம் புரிந்தோர்**
**அகத்தினுள் தெரிதரும் அன்றே.**

அறிவு பூர்வமாக எண்ணிப் பார்க்கும்போது பிறவியினால் துன்பமே அல்லாமல் எள் அளவேனும் சுகம் இல்லை. அஞ்ஞான இருளானது பிறவித்துயரை சுகம்போல் பாவிக்கச் செய்கிறது. முற்பிறவிகளில் தவம் செய்த பெரியோர்கள் மனத்தில் அந்த அறியாமை இருள் நீங்கி விடும். ஆதலால் மீண்டும் மீண்டும் பிறவி எடுப்பது துன்பமே என்பதை உணர்ந்து வீடுபேறு அடைவதையே குறிக்கோளாகக் கொள்வார்கள்.

2. **உடல்இது உற்பவத்தோர் ஐம்பெரும் துயர்மாய்ந்து**
**உறுகணத்து யரின்எண் மடங்கால்**
**இடைஉள திதிக்கண் துயரம்மூப்பு அறிவுஓங்கு**
**இளமையில் பிணிஉறா இடத்தும்**
**விடல்அரும் பசிநோய் காமநோய் தணிப்பான்**
**மிகுபொருள் தேடுதல் துயர்ஈண்டு**
**அடையினும் அதனைக் காக்குதல் துயர்வேந்து**
**ஆயினும் மிகுநரால் துயரே.**

கருவுற்ற நாள் முதலாகப் பெருந்துன்பங்களை பிறக்கு முன்பே அனுபவிக்கிறது உடல். மரண காலத்தில் அதைவிடப் பன்மடங்கு துன்பம் அதிகரிக்கிறது. இதற்கு மத்தியில் உலக வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் காலத்திலோ நரை, திரை, மூப்பு என்ற துன்பங்கள் நம்மைத் துன்பத்தில் ஆழ்த்துகின்றன. இளமைக் காலத்திலோ பல துன்பங்கள், பசிநோய், காமநோய் இவைகளைத் தீர்க்கப்பொருள் தேடுதல் என்ற துன்பம். பொருள் கிடைத்தாலும் அதைக் காப்பாற்றுவது என்ற துன்பம். அரசனாக இருந்தாலும் அவனைவிட வல்லமையுடைய பேரரசனால் துன்பம்.

3. இளமையில் பிணிஅற்று ஒருகுடை நிழற்கீழ்
இருநிலம் முழுவதும் புரக்கும்
வளமைபெற்று உடைய மகற்கும்எப் பொழுது
வருங்கொல்கூற்று எனும்பயத் தானும்
உளம்மிகப் பறைநின்று அறையுமேல் புவிமீது
உடையரோ மற்றையர் இன்பம்
களிமிகுத்து இருப்பர் தெளிவுஇலா மையின்மேல்
காரியம் கருதுறா நரரே.

அறிவு தோன்றிய காளைப் பருவத்தின்கண் நோயின்றி உறுதியுள்ள உடலுடையவனாய்த் தனது ஒப்பற்ற வெண்கொற்றக் குடை நிழற்கீழ் பெருமை மிக்க அரசைக் காக்கும் செல்வத்தினை அடைந்தமையால் மகிழ்ச்சி கொண்ட அரசனுக்கு அதனால் இன்பம் இல்லையோ எனின், அவனுக்கும் எந்தக் கணத்தில் எமன் வந்து நம் உடலை அழிப்பானோ என்ற அச்சத்தினாலும், மக்கள் செய்த பாவம் அரசனையே சேரும் என்பதாலும், அவனுக்கு நரகத்துன்பம் வரும் என்ற பயத்தினாலும், உள்ளம் திடுக் திடுக்கென்று மாறாது பறை அறையும். அதனால் இன்பம் இல்லை. அவனை அல்லாத பிறருக்குப் பூமிமேல் இன்பம் உண்டோ எனின்? இல்லை. பெரிய சுகங்களை அனுபவித்துக் கொண்டு மனக்களிப்புடன் இருப்பான் என்று நீ சொல்வாயானால், அறிவின்மையால் மேல்வரும் காரிய ஆராய்ச்சி செய்யாத மனிதர்க்கு மனக்களிப்பு உண்டு. ஆனால் அறிவும் ஆராய்ச்சியும் உடையோர்க்குத் துன்பமேயன்றி இன்பம் இல்லை.

4. பிறப்புஇறப்பு உடையராய் இடையி னும்பல்
பிணிபயம் தணிவுஇல் காமாதி
உறப்படு தலின்வா னவர்க்கு மற்றுஎன்னை
உளசுகம் தேவின்மா னிடத்தில்
சிறப்புஇவை என்றால் குறுக்குயோ னிகளின்
தீமையும் கொடியர்வீழ் நிரயத்து
அறப்பெரும் துயரும் உரைப்பதுஎன் பிறப்பூடு
ஆதலால் தீதுஅலாது இலையே.

மனிதர்களைப் போல பிறப்பு இறப்பு உடையவர்களாய், இடையில் வாழுங் காலத்திலும் பல வியாதிகளையும், பகைவர்களால் பயமும், தணிக்க இயலாத

காமங்களையும் அடைவதால் தேவர்களுக்கும் யாது இன்பம் உளது? தேவப் பிறவியிலும், மனிதப் பிறவியிலும் வரும் துன்பங்கள் இவைகள் என்றால், குறுக்கே நீண்டு வளர்கின்ற மிருகப் பிறவியில் உள்ள துன்பங்களையும், கொடியவர்கள் சென்று அடையும் நரகத்தில் ஏற்படும் மிகுந்த துன்பங்களையும் எப்படி உரைப்பது? ஆதலால் பிறப்பில் துன்பமே அல்லாது இன்பம் இல்லை.

5. அரிதுபெற் றிடினும் பெற்றதின் விருப்பம்
அறப்பெறா தனவிரும்பு உயிர்கள்
தெரியகிற் கிலம்ஈது எனைமுனம் அடையாச்
செல்வமாய்ச் சொல்பவித் திரமாய்
உரியசிற் சுகமாய் நித்தமாய் ஓருவீடு
உளதுஎனக் கேட்டும்மற்று அதனில்
பிரியமற்று இனமும் முனம்உறும் பொல்லாப்
பிறவியே பெறவிரும் புதலே.

சீடனின் கேள்வி – மனிதப் பிறவியில் இன்பம் கிடையாது என்று சொன்னீர்கள். இதைவிட உயர்ந்ததான தேவப் பிறவியில் கூட இன்பம் இல்லையோ?

சிறந்த பொருள்களை அடைந்தும் அவற்றால் திருப்தி அடையாமல் கிடைக்காத பொருள்களை அடைய ஆசைப்படுவது மனித இயல்பு. இது ஏனோ தெரியவில்லை. வீடு பேறு என்ற நிலைத்த இன்பம் உண்டென்று தெரிந்திருந்தும் அந்தப் பேரின்பத்தை அடைய ஆசைப்படாமல் மீண்டும் மீண்டும் நிலையில்லாத உலக வாழ்க்கையை விரும்புகிறார்களே. இதுவும் ஏனென்று தெரியவில்லை.

6. துன்பவெம் பிறப்பின் இழிவையும் அழியாச்
சுகபர வீட்டுஉயர் வினையும்
பின்புஅவை தொலைத்துஎய்த அருங்கரு வியதாப்
பெற்றஇப் பிறப்பையும் இதனின்
மின்புரை நிலையா மையையும்ஓர்ந் தனன்ஓர்
விவேகியும் எனிற்பினும் விடயத்து
அன்புறா வீடு புகமிக விரையாது
அரைக்கணம் தரைக்கண்உற் றிடுமே.

நல்வினை தீவினைகளால் கிடைத்த இந்தப் பிறவி இழிவானது. நிலைத்த பேரின்பம் தரும் மோட்சமே உயர்வானது. அந்தப் பேரின்ப நிலையை அடைவதற்காகவே கொடுக்கப்பட்டது மனிதப் பிறவி. மின்னலைப்போலத் தோன்றி மறையும் இந்த உடலின் நிலையாமையை அறிந்தவனே விவேகி. இதை உணர்ந்தவன் விஷயங்களில் உள்ள பற்றை விட்டுப் பேரின்ப நிலையை அடையத் தீவிரமாக முயற்சி செய்யாமல் அரைக்கணப் போதாவது வீணாக்குவானா?

**7. வினைப் பிறப்பு ஒருவன் துயரமென்று உணரின்**
**விடயபோகங்கள் நச்சுதலும்**
**தனக்கு உடல் அனியம் உணர்தரின் மரணம்**
**சார் குறிக்கு உளம் நடுங்குதலும்**
**நினைத்திடின் இதன் பேற்றருமை மாதவங்கள்**
**நீங்கிநாள் கழித்தலும் துணிவில்**
**அனித்தம் ஓர்ந்திடில் ஓர்கணம் எதிர்காலத்து**
**அவதி கூறிடுதலும் இலையே.**

இருவினைகளால் வருகின்ற இந்தப் பிறவியால் துயரம் என்பதை அறிந்து கொண்டவன் விஷய சுகங்களை அடைய ஆசைப்படுவதில்லை. தன்னுடைய உடல் தனக்கு அன்னியமானது என்று உணர்ந்துகொண்டதால் மரணத்துக்கு அஞ்சுவதும் இல்லை. வீடுபேற்றை நாடி அடைவதற்காகவே இந்தப் பிறவி கிடைத்தது என்று உணர்ந்து தவம் செய்யாமல் வாழ்நாளை வீணாக்குவதில்லை. இந்த உடலின் அநித்தியத்தை உணர்ந்த படியால் எதிர்காலத்தில் 'இதைச் செய்வேன்! அதைச் செய்வேன்!□ என்று கூறுவதும் இல்லை.

**8. கருமம்ஒன்று இயற்றப் பிறர்கையில் கருவி**
**கவர்ந்துளோன் பினும்அவர் கொளுமுன்**
**விரைவின்எண் ணியசெய் யாதுமற்று அதையே**
**மிகச்சிறப் பித்துநோக் குதல்போல்**
**புரையில்வீட்டு இன்பம் அடைகுவான் அதற்குப்**
**பொருந்திய அருந்தவம் புரியாது**
**ஒருகண மேனும் நிலையில்இவ் உடல்வைத்து**
**ஒப்பனை செய்துநோக் குதலே.**

ஒருவன் ஏதோ ஒரு வேலைக்காக மற்றவனிடமிருந்து ஒரு ஆயுதத்தை வாங்கிக் கொண்டு வந்து உடனே அதைச் செய்து முடிக்காமல் தன்னுடையதாக எண்ணிக் கொண்டு வேடிக்கை பார்த்துக்கொண்டிருக்கிறான் என்று வைத்துக்கொள்வோம். அதைப்போல விவேகம் இல்லாதவன் நிலையில்லாத இந்த உடலைத் தன்னுடையதாக பாவித்துக்கொண்டு பேரின்ப நிலையை அடைவதற்குரிய தவம் செய்யாமல் இருக்கிறான்.

(சிவபெருமானால் தவம் செய்வதற்காகக் கொடுக்கப்பட்டது இவ்வுடல். அதை மறந்து இந்திரிய சுகங்களை நாடுகிறோம்.)

**9.** **பவத்தனிப் பரவைக் குரவையைத் தானப்**
**படுவையைக் கொடுகடப்பு அரிதால்**
**உவப்பொடு தவப்பாதை யில்இவர்ந்து அன்றி**
**உண்மைஇத் தகவுஇகந்து உலகோர்**
**அவப்பொழுது அகல இருப்பதுஎன் விருப்போ**
**அகன்றவர்க்கு அருத்தல்ஆ திகளால்**
**தவத்தினை மறந்தார் கொல்எனும் சொல்லைத்**
**தமதுஉளத்து உணர்கலார் போலும்.**

சீடனின் கேள்வி – "இல்வாழ்க்கையில் இருந்து கொண்டே தானம் தருமம் முதலிய நற்கருமங்களைச் செய்வதால் பிறவிகள் எடுப்பதைத் தவிர்க்க முடியாதா?"

பிறவி என்பது பெருங்கடல். இதனை இல்வாழ்க்கையில் இருந்துகொண்டே தானதருமங்கள் என்ற தெப்பத்தினால் கடக்க முடியாது. ஆர்வத்துடனே துறவு பூண்டு தவம் என்ற கப்பலில் ஏறினால்தான் இந்த ஸாகரத்தைக் கடக்க முடியும். இதுவே உண்மை. இதைவிட்டு உலகத்தார் தாமே விரும்பி வீண்பொழுது போக்குவதேனோ? முற்றும் துறந்தவர்களுக்கு உணவு, வஸ்திரம், மருந்து முதலியனவற்றைக் கொடுத்து உதவி செய்வதற்காகவே தாங்கள் தவம் செய்வதை மறந்தார்களோ?" என்ற வள்ளுவர்* வாக்கை இல்லறத்தார் விசாரணைசெய்து புரிந்து கொள்ளவில்லை. தானம் செய்தாலே போதும் என்று நினைக்கிறார்கள்.

*"துறந்தார்க்குத் துப்புரவு வேண்டி மறந்தார்கொல்
மற்றையவர்கள் தவம்."

**10.** **ஈதலே அறமும் அநித்தமாம் அனைத்தும்**
**இகழ்ந்துகை விடுதலே வீடும்**

**ஆதலால் தானக்கு உரியஇல் வாழ்க்கை**
**அதனையே அறமெனக் கூறிக்**
**கோதிலா வீட்டின் இலக்கணம் இருத்தல்**
**குறித்துமெய் உணர்வையும் துறவூடு**
**ஓதினார் வேதம் தனைத்தமிழ் உருவத்து**
**ஒளித்துஎமக்கு அளித்த வள்ளுவரே.**

சீடன் கேள்வி – இல்லறமே உயர்ந்தது என்று வள்ளுவர் பெருமான் கூறியிருக்கும்போது தாங்கள் அதனை மறுத்துத் துறவறமே மேலானது, அதன்மூலமே பேரின்ப நிலையை அடைய முடியும் என்று சொல்வது ஏன்?

ஈதலே அறம், அதனால் வள்ளுவர், மற்றவர்க்குத் தானம் செய்யக் கூடிய நிலையான இல்லறமே அறம் என்று கூறினார். வேதப் பொருளைத் தமிழில் அளித்த வள்ளுவரே நிலையாத பொருள்களை விரும்புதல் துன்பம் என்றும், ஆசைகளைத் துறப்பதே, (பற்றை நீக்குவதே) வீடுபேறு அடையும் வழி என்றும் கூறினார். அதனாலேயே மோட்சமடைவதற்குரிய வழிகளைக் கூறும் "மெய்யுணர்வு" என்ற அதிகாரத்தோடு "துறவு" என்ற அதிகாரத்தையும் சேர்த்துக் கூறினார்.

**11.** **நிறந்தரும் தெய்வப் புலமைவள் ளுவனார்**
**நீத்தவர் பெருமைநூல் முகப்பால்**
**சிறந்திட அமைத்தாங்கு அதுகொடுஇல் வாழ்க்கைச்**
**சிறுமைதூற் றினர்அது தெரியார்க்கு**
**அறந்தவாது இயற்றின் அவனினும் கோடி**
**அதிகமாம் எனமனம் அறாது**
**துறந்துளோ னையும்பட் டணத்துஎமது அடிகள்**
**தொகுத்தகட் டுரைதிகழ்த் திடுமே.**

திருவள்ளுவர் துறந்தோரது பெருமையைச் சாத்திர நூலுக்கு முன்னுரையாக வைத்து, அத்துறவியர் பெருமையைப் பொருளாய்க் கொண்டு, அதன்பின் இல்வாழ்க்கையின் சிறுமையைப் புகழ்ந்தது போல் இகழ்ந்தார். அந்த நுட்பம் தெரியாதவர்க்கு, முப்பத்திரண்டு அறமும் தவறாது செய்யும் இல்லறத்தானை விட ஆசைகள் நீங்காத புறத்துறவு உடையோன் உயர்ந்தவன் என்று பட்டணத்து அடிகள் கூறிய உறுதி மொழியாலே விளங்கும்.

**பட்டணத்துப் அடிகள் பாடல்**

**அறந்தான் இயற்றும் அவனினும் கோடி அதிகம் இல்லம்**
**துறந்தான் அவனிற் சதகோடி உள்ளத்துறவுடையயோன்**
**மறந்தான் அறக்கற்று அறிவோடிருந்து இரு வாதனையற்று**
**இறந்தான் பெருமையை என் சொல்லுவேன் கச்சி ஏகம்பனே!**

12. **பிறப்பெனும் உவரிச் சுழியதாம் எழிலார்**
**பெண்டிர்ஆ தியஉயிர்ச் சார்வும்**
**சிறப்புறு புவிஆ தியபொருட் சார்வும்**
**தீரநீக் குதல்துறவு அவற்றூடு**
**உறப்படும் ஏவைநீப் பினும்அறிவு உடையோர்**
**ஒருதமது அனைபிதா வினையும்**
**துறப்பரேல் துறப்போர்க்கு அருநரகு எனநீ**
**சொற்றசொல் சத்தியம் ஆமால்.**

சீடனின் கேள்வி – "துறவறத்தின் இலக்கணம் என்ன?"

பெண்டிர் மற்றும் உறவினர்களான அன்னை, தந்தை, சகோதரர், குழந்தைகள் ஆகியோரிடத்தில் வைக்கும் பாசம் உயிர்ச் சார்பு என்று சொல்லப்படும். பெருமை தருகின்ற நிலம், செல்வம், தானியங்கள், ஆடையாபரணங்கள், பசுக்கள், இவற்றின்மீது உள்ள பற்றுதல் பொருட் சார்பு எனப்படும். இவை இரண்டும் பிறவி என்ற கடலில் உள்ள சுழி போன்றவை. இவற்றின் மீது உள்ள இச்சையை விடுதலே துறவு.

"அறிவுடையோர் எதைத் துறந்தாலும் பெற்றோரைக் கைவிடலாமா? அப்படிச் செய்தால் நரகத்தில் விழமாட்டார்களா?" என்று சீடன் கேட்க,

"அப்படித் துறந்தால் நரகம் என்று நீ சொல்வது உண்மையேயாம்" என்று குரு அருளினார்.

13. **விடையதுஊர் இறையே தாதைமற்று அவன்பால்**
**மின்னமது அன்னைஅன் னவரைக்**
**கடையரே மறந்து துறந்துதான் அன்றோ**
**கடும்பவ இடும்பைஉற்ற னம்இவ்**

**வடைவுஉணர்ந் திலைபோன்று உடல்இதற்கு ஏது**
**வாய்அவர் தாய்பிதா எனநெஞ்சு**
**உடைவுறா நின்றாய் பவம்தொறும்இவ் வணம்உற்று**
**உளஉயிர்க்கு அளவுயாது உரையே.**

(தாய்தந்தையர் எவர் என்று விளக்குகிறார்.)

விடைஏறும் சிவபெருமானே எமது தந்தை. மின்னல் போல ஒளி பொருந்தி பாகம் பிரியாளாகிய சக்தியே எமது அன்னை. இந்த உண்மையை நாம் மறந்து விட்டபடியால் தான் கடுமையான பிறவித் துன்பத்தை அனுபவிக்கிறோம். இதையறியாமல் உடலைத் தந்தவர்களைத் தாய் தந்தை என எண்ணி மயங்குகிறோம். பிறவி தோறும் மாறுபடுகின்ற தாய் தந்தையரைப்பற்றி என்ன சொல்வது?

**14.** **தனதுஅகத்து அகலாது இருந்துபேர் இன்பம்**
**தருதலால் மனைவியும் தன்பால்**
**இனிதுஉதித்து ஒருதன் வினைஒழித்து அசையாது**
**இருத்திவீட்டு அமுதுஅருத் துதலால்**
**உனல்அரு சுதனும் ஒருவனுக்கு அவன்ஊடு**
**உதயமாய் எழுந்தமெய் உணர்வே**
**பினைஇஃது அன்றி மனைசுதர் எனயாம்**
**பேணிநாட் கழிப்பதும் பிழையே.**

கேள்வி – ''தாய் தந்தையரைத் துறந்தாலும் தன்னையே நம்பி இருக்கும் மனைவி மக்களைக் கைவிடலாமா?''

மெய்ஞ் ஞானம் என்பது தன் மனத்திலேயே தோன்றி இடைவிடாமல் பேரின்ப நிலையில் ஆழ்த்துவது. இது மனைவி, கணவனுடன் எப்போதும் கூடவே இருந்து சுகத்தைத் தருவது போல் ஆகும். தன்னிடமிருந்தே தோன்றி வினைகளை ஒழித்து வீடு பேறு என்னும் அமுதத்தை ஊட்டுகிறது ஞானம். இது மகன் பொறுப்புகளை ஏற்றுப்பொருள் ஈட்டித் தன் தந்தையை மகிழ்ச்சி பெறச் செய்வதற்கு ஒப்பாகும். இதைத் தெரிந்து கொள்ளாமல் 'என் மனைவி, என் மக்கள்' என்று பற்றுக்களால் பிணைக்கப்பட்டு வாழ்நாளை வீணாகக் கழிப்பது தவறாகும்.

15. **வேண்டின்உண் டாகத் துறக்கஎன் றமையால்**
**விருத்தனாய்க் கருத்துஅழிந்து உருவம்**
**காண்டல்செய் விழிபஞ் சடைந்துஉடல் நடுக்கும்**
**காலம்வந்து அடைவதன் முன்னர்**
**மாண்டகற்பு அதனால் சாலியைப் போலும்**
**மனைவிஆ தியசமா தியின்உற்று**
**ஈண்டும்ஆ னந்தம் பலஅடைந் திடுதற்கு**
**எண்ணி நீத்தி டுவர்புண் ணியரே.**

சீடனின் கேள்வி – இல்லறத்தில் ஈடுபட்டுச் சிலகாலம் வாழ்ந்த பிறகு வயதான காலத்தில் துறவறம் மேற்கொள்ளக் கூடாதா?

புண்ணியம் செய்தவர்களே இளமையில் துறவு நிலையை அடைவார்கள். வயது முதிர்ந்து, மனம் தடுமாறி, கண்கள் பஞ்சடைந்து, உடல் நடுங்கும் காலம் வருவதற்கு முன்பே துறவு மேற்கொண்டால் அந்தப் பேரின்பத்தை இம்மையிலேயே பெற்று நெடுங் காலம் சீவன் முத்தனாக இருக்கலாம். ஆதலால் கற்பினில் சிறந்த அருந்ததி போன்ற மனைவி முதலிய சார்புகளை விடுத்து, இந்த உடலிலே சமாதி உற்றுப் பேரின்பம் அடைவதற்கு எண்ணிப் புண்ணியம் செய்தவர்கள் துறப்பார்கள். இதைத் திருவள்ளுவரும் வலியுறுத்தியுள்ளார்.

“வேண்டின் உண்டாகத் துறக்க துறந்தபின்
ஈண்டியற் பால பல.”

16. **இளமையின் மனையைத் துறத்தல்தீது எனில்தான்**
**இறத்தலில் துறத்தல்ஈடு அலவால்**
**அளவில்தீது அஃதாங்கு உயிர்ச்செயல் அன்றேல்**
**ஆபற்சன்னி யாசம்தீது அதுமெய்**
**விளிதலால் பழுதின்றேல் பினும்இருப்பார்**
**விடுதல்தீது அடுபிணி குறித்தேல்**
**உளையும்நோய் இலரும் இறப்பதுஎன் பிறப்புஓர்ந்து**
**ஒழித்திடில் பழித்திடாது உலகே.**

சீடனின் கேள்வி – இளமையில் மனைவியைத் துறப்பது பாபமில்லையா?

(இந்த பிறவியின் நிலையாமையை விசாரித்து அறிந்து உலக வாழ்க்கையைத் துறந்தவர்களை உலகம் பழிக்காது, போற்றும் என்ற கருத்தை வலியுறுத்துகிறார்.)

மனைவியை நிர்க்கதியாக விட்டுத் துறவறம் மேற்கொள்ளுதல் தவறு என்றால் திடீரென்று இறந்து போவது பாபமில்லையா? இது இரண்டும் சமமாகாது. மரணம் என்பது காலனின் செயலே அன்றி நம் செயல் இல்லை. அதனால் பாபம் இல்லை. ஆனால் நோய் வாய்ப்பட்டு மரணத் தறுவாயில் ஆபத் சந்நியாசம் வாங்கிக்கொள்வது சரியா என்றால் உடனே மரணம் சம்பவித்தால் பாபம் இல்லை. அப்படி சந்நியாசம் வாங்கிக் கொண்டபிறகு பிழைத்து எழுந்து வாழ்ந்தால் அது பாபமே. வியாதியே இல்லாமல் இறந்து போவதும் உண்டு. மரணத்துக்கு அஞ்சி சந்நியாசம் வாங்கிக் கொள்வதைவிட ஆராய்ந்து விசாரணை செய்து உலகத்தின் நிலையாமையை உணர்ந்து துறவறம் பூணுவதே சிறப்பு.

**17.** **இக்கணத்து இருந்தது இனிவரும் கணத்தூடு**
**இருக்குமோ மரிக்குமோ உடல்என்று**
**அக்கணம் மனைஆ திகட்குஅரன் துணையாம்**
**அன்றுஎன எணித்துறவு அறஞ்சார்**
**மிக்கவன் ஆபற் சன்னியா சியும்சார்**
**வினுக்குஉரம் சேர்த்திவிட் டவனும்**
**துக்கம்மே வலிற்பின்பு அவர்இவன் போலும்**
**துறவர்அன்று என்பதும் துணிவே.**

சீடனின் கேள்வி – வயது வந்த புத்திரர்களிடம் குடும்பப் பொறுப்பை ஒப்படைத்து விட்டுத் துறவறம்மேற்கொள்ளுதல் சரி, ஆபத்துக் காலத்தில் சந்நியாசம் வாங்கிக்கொள்வதும் சரி, ஆனால் குடும்பத்தை நிர்க்கதியாக விட்டுவிட்டுத் துறவறம் பூணுதல் தீதல்லவா?

இந்தக் கணம் இருந்த உடல் அடுத்த கணம் இருக்குமோ இருக்காதோ என்று நிலையாமையைப் பற்றிய ஞானம் வந்துவிட்டால், குடும்பத்தினருக்குச் சிவபெருமானே துணை என்று தெளிவு உண்டாகும். இப்படி மெய்யறிவு பெற்றவனே குடும்பத்துக்குப் பாதுகாப்பு அளித்தவன். இவனே ஆபத் சந்தியாசம் பெற்றுக் கொண்டவன். மரணத்துக்குப் பயந்து சந்நியாசி ஆனவனும், சொந்த பந்தங்களுக்குப் புதல்வர்களே துணை என்று நம்பினவனும் உண்மையான துறவியாக முடியாது.

**18.** **பிறந்தஅப் பொழுதே இனிஒரு தலையாப்**
**பிறப்புஅறுத் திடுவம் என்று எணியே**

**உறைந்தனை வயிற்றில் பினைஅதுஉற் பவத்தூடு**
**உறுபெரும் துயரினால் உயிர்கள்**
**மறந்துஉறு முறையும் சுகர்அகன் றமையும்**
**மதித்துநெஞ்சு அழிவில்நம் போல்வார்க்கு**
**அறைந்திடும் அலது பிறப்புஉணர்ந்து அகல்வார்க்கு**
**அவதியும் அறையுமோ மறையே.**

சீடனின் கேள்வி – வயது முதிர்ந்த பிறகு துறவறம் மேற்கொண்டால் போதாதா, வேதங்கள் கூறுவது என்ன?

தாயின் வயிற்றில் இருக்கும் போது அந்த சிசுவுக்கு, "இத்தனை நாள் மோசம் போனோம். இந்தப் பிறவியிலாவது ஞானாசிரியனைத் தேடி நற்கதி அடைய வேண்டும்" என்று நினைவு இருக்கிறது. பிறக்கும்போது ஏற்படும் துன்பங்களினால் அந்த விவேகம் மறந்து போய்விடுகிறது. சுகப் பிரம்ம ரிஷி ஒருவரே பிறந்த உடனேயே பெற்றோர்களை விட்டு அகன்று தவம் செய்து ஞானம் அடைந்தார். இதை அறிந்து வேதம் சொல்வதை அறிந்தும், குருவிடம் உபதேசம் கேட்டிருந்து வைராக்கியம் அடையாதவர்கள் நாம். நம்மைப்போன்றவர்களுக்குத்தான் வேதம் உபதேசம் செய்கிறது. சுகரைப் போன்ற நிலையாமையை உணர்ந்த பிறவி ஞானிகளுக்கா வேதம் உபதேசிக்கிறது?

**19.** **கருப்பம்ஆர் உயிர்அத் துயர்பெயர்த் திடுதல்**
**காரண பூரண ஞானம்**
**விருப்பமாய் அடையக் கடவம்என்று இருக்கும்**
**வியாசர்சேய் அடைந்ததும் அதுவே**
**திருப்பிஈண்டு அதனைத் துறவின்மீது ஏற்றிச்**
**செப்பல்என் எனில்துற வினைவிட்டு**
**இருப்பதோர் ஞானம் எவன்கொல்நீத் தவர்என்று**
**இசைப்பதுஎன் பெயர்மெய்ஞ் ஞானிகட்கே.**

தாயின் கருப்பையை அடையும் எல்லா ஆன்மாக்களும் மீண்டும் இத்துன்பத்தை அடையக்கூடாது, பூரண ஞானம் பெறவேண்டும் என்ற விருப்பத்தோடு இருக்கும். வியாசர் புதல்வரான சுகர் ஒருவரே பிறந்த உடனேயே சீவன் முத்தர் ஆக முடிந்தது. அப்படி ஆன்மாக்களுக்கு தாயின் வயிற்றிலேயே விடுதலை பெற வேண்டும் என்ற எண்ணம் இருக்கிறதே, அதை துறவறம் மேற்கொண்டால்தான் ஞானம் கிடைக்கும் என்று சொல்வது ஏன்? துறவினைவிட மேலான ஞானம் எது? மெய்ஞ்ஞானிகளைத் துறந்தோர் என்று ஏன் சொல்கிறோம்?

**20.** **ஞானிஅஞ் ஞானம் கெடுத்தலால் துறவோன்**
**எனப்படும் நவிற்றின் அஞ்ஞானம்**
**தான்உட லினைநான் எனும்அக இருள்**
**என்றனைஇஃது எமக்கும்ஒத் ததுவால்**
**ஊனம்இல் மறைதேர்ந்து ஒருசிவம் நான்என்று**
**உளத்துள்நிச் சயித்தஅக் கணமே**
**யான்எனல் தவிர்ந்துஅவ் இருளும்மாய்ந் திடும்என்று**
**இசைத்தனை இதுபழுது அன்றே.**

ஞானி அஞ்ஞானத்தை அழித்தலால் துறவோன் எனப்படுவான். அஞ்ஞானத்தின் இலக்கணம் எவ்வாறு என்று சொல்லப் போனால், அது தான் அல்லாத உடம்பைத் தான் எனக் கருதச் செய்யும் உள்ளிருள் என்றாய். இஃது எமக்குச் சம்மதமே. குற்றமிலா வேதத்தை ஆராய்ச்சி செய்து, அனைத்தும் பொய், ஒப்பிலாத சிவம் ஒன்றே சத்தியம். அச்சிவம் நான் என்று உள்ளத்தின்கண் நிச்சயம் செய்த அந்தக் கணமே, அகங்காரம் நீங்கும். அஞ்ஞான இருளும் அழியும் என்று கூறினை. இவ்வாறு சொன்னது சரியில்லை.

**21.** **திரிவித உலகத்து அரிதுஒரு ஞானி**
**தேர்விடத்து என்றும்ஓர் ஒன்றை**
**உரைசெயில் பிரம வித்தைஒத்து அரிதோ**
**என்றும்இவ் உலகுஉரைப் பதனால்**
**அரிசொல்கீ தையிலும் பிரமசா தகரின்**
**ஆர்க்குஉள வருத்தம்என் பதனால்**
**பெரியதுஓர் வருத்தம் எனைமறை துணிந்துஅப்**
**பிரமம்நான் எனஇருத் தலினே.**

மூன்று உலகங்களில் தேடினாலும் ஒரு ஞானி கிடைப்பது அரிது. பற்பல கலைகளைக் கற்றுக்கொண்டு ஆராய்ந்தவனிடம்கூட இது என்ன பிரம்ம வித்தையா? அவ்வளவு கடினமானதா? என்று உலகத்தோர் கேட்பார்கள். கண்ணபரமாத்மா உபதேசித்த கீதையிலும் கூட, ''பிரம்ம சாதகனைவிட கஷ்டங்களை அனுபவிப்பவர் யார்? அந்த வித்தைபோன்ற அரிய வித்தையும் கிடையாது. அதை அடைவதற்குரிய சாதனை செய்யும் போது அடையும் கஷ்டங்களைப்போல வேறு எதுவும் கிடையாது'' என்று கூறுகிறார். ஆதலால் நூல்களைப் படித்து மனத்தில் உணர்ந்தால் கூட பிரம்ம சொரூபமே

நான் என்ற அனுபவத்தை அடைய முடியாது. மனத்தில் எத்தனையோ காலமாகப் படிந்திருக்கும் வாசனைகளை அகற்றித் தீவிரமாக சாதகம் செய்தாலே மெய்ஞ் ஞானம் பெற முடியும்.

**22. வருத்தம்ஒன்று இன்றிச் சாரலாம் பிரமம்**
**என்றுஅயன் வகுத்த கீதையின்ஊடு**
**உரைத்ததுஎற் றினுக்காய் எனில்பர ஞானம்**
**உணர்பவர்க்கு உன்னுதல் உரைத்தல்**
**நிரைத்திடு தொழில்கள் ஒன்றும் வேண்டாது**
**நீத்துவா ளாஇருத் தலினால்**
**அருத்தம்மற் றதனுக்கு ஓர்ந்துநூல் தெளிதல்**
**ஆகநீ துணிந்தனை போலும்.**

வருத்தம் எதுவும் இன்றிப் பிரம்மத்தை அடையலாம் என்று பிரம்ம கீதையில் சொல்லப் பட்டிருப்பது எதற்கு எனக் கேட்டால் மனோவாக்கு காயங்களால் செய்கின்ற தொழில்களை அறவே விரும்பாமல் விட்டு விட்டுச் சும்மா இருப்பதே பர ஞானத்தை அறிவோரின் செயல். பிரம்ம கீதையின் பொருளை அறியாத நீ இந்தச் செய்யுளுக்கு வேதத்தை ஆராய்ந்து அறிந்து கொண்டால்மட்டும் போதும் என்று கருதத் துணிந்தாய்.

**23. சிறியவர் மணற்சோறு உண்டுதேக் கிடல்போல்**
**தேர்ந்துநூல் தெளிந்தமாத் திரத்தின்**
**அறிதரில் சிவமும் விடயமாம் எனநீத்து**
**அகத்துஇருள் அறாதுவைத்து அந்தோ**
**உறும்அகம் பிரமம் எனஉரைத்து இறுமாந்து**
**உறைதலோ ஞானம்அஞ் ஞானம்**
**துறவினை உறாது மாயுமே வாயால்**
**சுடர்எனில் இருள்துமிந் திடுமே.**

மணல் வீடு கட்டி விளையாடும் சிறுமிகள் அந்த மண் சோற்றைச் சாப்பிடுவதுபோல் பாவனை செய்து ஏப்பம் விடுவார்கள். அதுபோல நூல் படித்துச் சிவத்தினை அறிய முனைவதும் பாவனையே ஆகும். ஏன் என்றால் அறிவினால் அறியப்படுவது எல்லாமே புற விஷயங்கள். நூல் கற்பதன்மூலம் சிவத்தை அறிந்தோம்

என்று கர்வம் அடைவதா ஞானம்? அஞ்ஞானம் என்பது பற்றுக்களைத் துறந்தால்தான் நீங்கும். இருள் சூழ்ந்த வீட்டில், "விளக்கு, விளக்கு" என்று சொன்னால் இருள் நீங்கிவிடுமா?

**24.** **ஞானியே எவரும் வணங்குதற்கு உரியோன்**
**நவிலும்ஆ சௌசம்இல் பெரியோன்**
**மானிலத்து அவன்தான் உடல்விடில் குகைப்பால்**
**வைக்கஎன் மறைப்படி புரிதல்**
**தானும்வே தாந்தப் பொருள்துணிந் திடினும்**
**சாற்றின்இல் வாழும்அந் தணர்க்குஇன்று**
**ஆனதால் துறவு பெற்றநல் தவரே**
**அமலவீடு அடையும்ஞா னிகளே.**

சீடனின் கேள்வி – ஞானம் பெற்றால்தானே அஞ்ஞானம் அழியும்? துறவறத்தால் ஞானம் வருமா?

முக்கரணங்களிலும் தூய்மையுடைய ஞானியே எல்லாரும் வணங்குதற்குரிய பெரியோன். துறவியின் உயிர் உடலை விட்டு நீங்கிவிட்டால் அவருடைய சரீரத்தை சமாதியில் வைத்து வணங்கவேண்டும் என்பது வேதங்களின் கருத்து. இல்லறத்தில் இருந்து கொண்டே சீவன்முத்த நிலையை அடைந்துவிட்ட அந்தணரைக் கூட சமாதி வைத்து வணங்கும் வழக்கம் இல்லை. ஆதலால் துறவறம் பூண்ட பூரணஞானிகளே வீடுபேறு அடையும் தகுதி உடையவர்கள்.

**25.** **தேர்ந்திடின் அபரம் பரம்என இரண்டாய்த்**
**திகழ்தரு ஞானம்ஆங்கு அவற்றூடு**
**ஓர்ந்திடும் மறைஆ தியகலை அபரம்**
**உயிர்பர னொடுவிரவு அயிக்கியம்**
**கூர்ந்துஉணர் உணர்வே பரம்அதைத் தெளியக்**
**கூறல்மாத் திரம்கலை ஞானம்**
**சார்ந்துஉணர்வு அரிதுஅப் பரனைஓர்ந்து அன்றிச்**
**சாற்றின்அவ் அயிக்கமாம் தலமே.**

சீடனின் கேள்வி – ஞானம் என்பது என்ன?

ஞானம் இருவகைப்படும். நூல்களைப் படித்தும், குருமுகமாகப் பாடம் கேட்டும் இறைவன் தன்மையை அறிவது அபர ஞானம். தன் சாதனையின் பலத்தால் தானே பரப்பிரம்ம சொரூபம் என்பதை உணர்வது பரஞானம். சீவ பிரம்ம ஐக்கியத்தைத் (இரண்டல்ல ஒன்றே) தெளிவதே பரஞானம். கல்வி கேள்விகளினால் உண்டாகும் அறிவுத் தெளிவினால் மட்டும் பரத்தை அறியமுடியாது. சீவ பிரம்ம ஐக்கியம் என்பதை சமாதி பழகி உணர்ந்தால் அன்றி அறிய இயலாது.

**26.** **அடுத்தஇச் சீவன் தன்மைஓர்ந்து அன்றி**
**அறியொணாப் பரனைஅஞ் ஞானம்**
**கெடுத்தலால் சீவன் தனையும்ஓர்ந்து ஒருவர்**
**கிட்டொணா நனவினில் சுழுத்தி**
**உடைத்துமற்று எவனுக்கு அவன்அவ் அஞ்ஞானம்**
**உடைக்கும்உட் கரணவா தனைகள்**
**துடைத்திடின் அபாவம் எனப்படு நனவில்**
**சுழுத்தியும் எளிவந்து தோன்றும்.**

சீடனின் கேள்வி – சரி! அந்தப்பரமனைஅடையும் வழி என்ன?

இந்த பூத உடலில் உள்ள சீவனின் இயல்பை அறிந்தால்தான் பரனை அறியமுடியும். அஞ்ஞானத்தை நீக்கினால் ஒழிய சீவனை அறிய முடியாது. நினைவிருக்கும்போதே சுழுத்திநிலையில் ஆழ்பவனே அஞ்ஞானத்திலிருந்து மீள முடியும். நினைவில் சுழுத்தி நிலை எப்படி வரும்? மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்ற அந்தக் கரணங்களில் படிந்துள்ள மாசுகள் நீங்கினால் நனவில் சுழுத்தி நிலை கை கூடும். அந்தக் கரணத்தின் மாசுகள் என்பது என்ன? முற்பிறவிகளிலும் இப்பிறவியிலும் நம்மைவந்து அடைந்த வாசனைகள். அவற்றைத் துறந்தால் ''நனவில் சுழுத்தி'' என்ற துரிய நிலையை உணரலாம்.

**27.** **யோகசா தனையால் வாதனை கரணக்கு**
**ஒழியும்அவ் வியோகமும் இருமைத்து**
**ஆகுமே கிரியை ஞானம்என் பேதத்து**
**ஆதனஆ தியதொழில் யோகம்**
**ஏகமாம் பொருள்தேர்ந்து அதுஇது எனும்சுட்டு**
**இறத்தல்மற் றையதுஇரு வகைக்கும்**

**போகவேண் டிடும்ஐம் புலன்களும் இறந்துஅப்**
**புலன்அவா ஒழித்தலாற் போமே.**

பயிற்சியால் அகக் கருவிகளுக்கு உண்டான வாசனைகள் ஒழியும். அந்த யோகம் கிரியை, ஞானம் என வேறுபாட்டால் கிரியா யோகம் என்றும், ஞான யோகம் என்றும் இருமுறையில் இருக்கும். கிரியா யோகம், இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிராத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எண் வகையாய் இருக்கும். ஒன்றாய் உள்ள மெய்ப்பொருளை வேதாகமங்கள் மூலம் உறுதி செய்து கொண்டு பின்னர் ஞான நிட்டை கூடி அதுவென்றும் இதுவென்றும் சுட்டி அறியும் அறிவு எல்லாம் இறந்து அந்தக் கரணம் அசைவின்றி நிற்றல், ஞான யோகம். இந்த இருவகை யோகத்தினை அடைவதற்கு ஐம்புலன்களும் செயல் அற்று இருக்க வேண்டும். ஐம்புலன்களால் உண்டாகும் ஆசையை ஒழித்தால் அவை இறந்து போகும்.

**28.** **ஐம்புலன் அடல்வேண் டும்விடல் வேண்டும்**
**ஒருங்குவேண் டியஅனைத் தையும்என்று**
**உம்பரும் பரவும் ஒருதமிழ் வேதம்**
**உரைத்தலால் ஓர்இரு வகையாம்**
**நம்புறச் சார்பை வெறுத்துஅவா அறுத்துஐம்**
**புலன்ஒழித்து ஒழுங்கின் நாட அரும்அச்**
**செம்பொருள் காண்பது அறிவுஅறி யாமை**
**சிதைத்தல்வீடு எனத்திகழ் தருமால்.**

வீடு அடையக் கருதுகிறவன் ஐம்புலன்களையும் அடக்க வேண்டும். அவ்வைந்தினையும் நீக்கிட, அவற்றால் அனுபவிக்க வைத்த பொருள் அனைத்தையும் ஒருங்கே விடல் வேண்டும் என்று தேவர்களும் வழிபடும் ஒப்பற்ற திருக்குறள் கூறுகிறது. நூல் கூறியபடி, உயிர்ச் சார்பு, பொருட் சார்பு என இருவகையாய் உள்ளவற்றில், முதலில் நம் புறச் சார்பினை வெறுத்து நீக்கி, அதன்கண் வைத்த ஆசையை அறுத்திட வேண்டும். பின்னர் ஐம்புலன்களால் உண்டாகும் ஆசைகளின் பின் செல்லாது, உள்ளடக்கி இவ்வாறு ஒவ்வொன்றாக நீக்கிட வேண்டும். பின் யாவராலும் அறிதற்கு அரிய அந்தச் செம்மையான மெய்ப் பொருளை அறிவதே ஞானம். அந்த ஞானத்தால் அஞ்ஞானத்தை அழிப்பதே வீடு என்பது விளங்கினால் ஞானமும் வீடும் இன்னதென்பதை அறிவாய்.

**29.** அரம்பைஉள் உறுதண்டு எடுத்தலின் ஒருவன்
அனுபவ மாம்சிவன் உணர்தல்
நிரம்புமெய் உணர்வுஅத் தண்டின்மீது ஒன்றி
நின்றநார் அனைத்தும்நீக் குதல்போல்
விரும்புஇரு வகைப்பற் றையும்துறந்து இருளை
வீட்டல்வீடு இவற்றையே அன்றி
வரும்பர உரனும் வீடும்வேறு அறியேம்
வார்த்தைமாத் திரத்துயாம் பெறவே.

வாழை மட்டைகளை எல்லாம் நீக்கி உள்ளே இருக்கின்ற பயன்தரும் தண்டினை ஒருவன் எடுத்தல் போல், மாயா காரியங்களுக்கு எல்லாம் உள்ளீடாய் விளங்கும் சிவத்தினை அனுபவமாய் அறிதலே முழுமையான இறையறிவு. அந்த வாழைத் தண்டின் மேல் இருக்கும் மட்டைகளை ஒவ்வொன்றாக நீக்குதல் போல், நம்மால் விரும்பப் பட்ட உட்பற்று, புறப்பற்று என்ற இருவகைப் பற்றினையும் நீக்கி அஞ்ஞானம் ஆகிய இருளை அழித்தலே வீடுபேறு. இந்தப் பரஞானத்தையும் வீடுபேற்றையும் அன்றி, வெறும் சொற்களால் கிடைக்கும் பரஞானத்தையும் வீடுபேற்றையும் நாம் ஒப்புக்கொள்ளவில்லை.

**30.** இருவகைச் சார்பாம் ஒருபுறப் பற்றும்
இடையதாம் கடைஉடல் பற்றும்
விரிகர ணங்கள் ஆகும்உட் பற்றும்
எனத்திரி விதம்விளங் கிடும்இத்
திரிவிதத் தினையும் காத்திரம் கரணம்
சேர்த்திஒன் றாக்கொடுஉட் பற்றும்
வருபுறப் பற்றும் எனஇரண்டு ஆக
மதிப்பர்அவ் வணம்துற வையுமே.

பற்றுக்கள் மூன்று வகைப்படும். உயிர்சார்பு, பொருட் சார்பு என்ற இரண்டையும் சேர்த்துப் புறப் பற்று என்பார்கள். கீழ்நிலையிள்ள தேகப் பற்றே இரண்டாவது பற்று. அந்தக் கரணங்களிலுள்ள பற்று மூன்றாவது பற்று. தேகப்பற்று, அந்தக்கரணப்பற்று இரண்டையும் ஒன்றாகக் கொண்டு உட்பற்று எனவும், உயிர்ச்சார்பு, பொருள் சார்பு இரண்டையும் ஒன்றாகக் கொண்டு புறப்பற்று எனவும் பெரியோர் கூறுவர். இதைப் போலவே துறவையும் உட்துறவு, புறத்துறவு என்று இரண்டாக வகுத்திருக்கிறார்கள் பெரியோர். (உள்துறவு:மனத்தில் ஏற்படும் துறவுநிலை. புறத்துறவு: உயிர்சார்பு, பொருட்சார்பை விடுதல்.)

**31.** **இருவகைப் பற்றில் ஒருவனே ஞானி**
**எனப்படில் புறப்பற்ற தேனும்**
**ஒருவுதல் இலரும் எவணம்அப் பெயருக்கு**
**உரியர்வேர் ஒன்றும்இல் கொடியும்**
**தரும்இலை மலர்காய் எனின்அகப் பற்றில்**
**தவர்புறப் பற்றையும் தணவார்**
**மருவினும் அஃதோர் ஒருவர்வேர் அன்றீர்**
**மலர்க்கொடி வாடுறா வகையே.**

உட்பற்று, புறப்பற்று என இருவகைப் பற்றுக்களும் இல்லாத ஒருவனை ஞானி என்று சொன்னால், புறப்பற்று ஆயினும் அதனை விட்டு நீங்காதார் எந்த முறைப்படி ஞானி என்னும் பெயருக்கு உரியவர் ஆவார்? புறப்பற்று இருக்க அகப்பற்றை நீக்கியோர் ஞானிகள் அலரோ எனில், வேர் இல்லாத கொடி, இலை, மலர், காய்களைத் தருமானால் அகப்பற்று இல்லாத தவத்தோர் புறப்பற்றினையும் விட்டு நீங்கார். அப்படியானால் புறப்பற்று இருக்க அகப்பற்றைக் நீக்கியோர் இல்லையோ என்றால் அவ்வாறு புறப்பற்று இருக்க அகப்பற்றை ஒருவர் நீக்கினாலும், வேரினை அறுத்த அன்றே அறுபட்ட மலர்க்கொடி, சிறுபொழுது வாடாமல் இருப்பதைப் போல அகப்பற்றை நீக்கியோர்க்கும் புறப்பற்றுச் சிலநாள் இருக்கும்.

**32.** **வேர்அறக் கொடிவா டுதலின்உட் பற்றை**
**விடுக்கின்மற் றையபற்று நேரே**
**சோருதல் இயல்பாம் அதனையே முன்னர்த்**
**தொலைக்கவேண் டுவதுஎனில் கடுமுள்**
**சாரும்ஓர் கொடியின் கிளைஅனைத் தையும்முன்**
**தறித்துஒழித்து அலதுஅதன் இடைஆர்**
**ஓர்தனி வேர்கொள் அரிதுஅரிது அகப்பற்று**
**ஒழித்தலும் புறப்பற்ற துஉறவே.**

காரணமாகிய வேர் அறுந்து போக, அதன் காரியம் ஆகிய கொடி உலர்ந்து போகும். அதுபோல் காரணம் ஆகிய அகப்பற்றினை முன் ஒழித்தால் அதன் காரியம் ஆகிய புறப்பற்றும் உடனே நீங்குதல் இயல்பு. அந்த உட்பற்றினைத்தான் முன் ஒழிக்க வேண்டும் என்பாயானால், கடிய முள்கள் பொருந்திய ஒரு கொடியின் கிளைகள் அனைத்தையும் முன்னர் வெட்டி நீக்கினால் அன்றி அதன் நடுவே பொருந்திய மூல

வேரினைப் பிடுங்குதல் அரிது. அதுபோல் முதலில் புறப்பற்றை நீக்கி, அகப்பற்றை ஒழிக்க வேண்டும். அதனை விட்டு, புறப்பற்று இருக்க அகப்பற்றினை முன் ஒழித்தல் இயலாது.

33. முள்இல்சில் கொடிவேர் கொளலின்முன் சனகன்
முதலவோர் ஒருவர்மற்று ஒருதம்
உள்ளமாசு அணுகா இயல்பினால் அகப்பற்று
ஒழிப்பினும் முனம்எனை உறழும்
கள்ளநெஞ் சினர்பற் பலரும்வீடு அடையும்
கதிஅதன் மையில்துறவு அளந்த
தெள்ளியோர் புறப்பற்று ஒழித்தலே முதற்கண்
செப்பினர் எவர்க்கும் ஒப்புறவே.

முள் இல்லாத சில கொடியின் வேரினை கொடியை வெட்டாது பிடுங்கிக் கொள்ளுதல் போல் சனகர் முதலான சிலர் தம் உள்ளத்தில் காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் இல்லாத தன்மையால் புறப்பற்று இருக்க அகப்பற்றினை முன்னர் ஒழித்தனர். ஆயினும் என்னைப் போல முக்குற்றங்களை (காமம், வெகுளி, மயக்கம்) உடைய மனத்தினர் பலரும் வீடு அடையும் வழி அது அல்ல. ஆதலால், தெளிந்த அறிவினை உடைய பெரியோர் புறப்பற்றை ஒழித்தே அகப்பற்றை ஒழிக்க வேண்டும் என்று யாவரும் ஒப்புக் கொள்ளத் தக்க வகையில் கூறியுள்ளனர்.

34. விடத்தகும் அகப்பற் றினைமுனம் புறப்பற்று
ஒழிப்பதுஎற் றினுக்குஎன விளம்பல்
படிற்றுஒழுக் கினர்சம் மதமும்வா னவரும்
பயில்இல்வாழ்க் கையும்விடுக் குதல்என்று
எடுத்துஉமைக்கு அறிவுஆ சாரம்ஓ தியசொற்கு
இழுக்கும்ஆ குதலின்மாசு இயல்பாத்
துடைத்தசிந் தையர்க்கு நிந்தைஇல் ஒழுக்காச்
சொல்வர்முன்பு உறல்புறத் துறவே.

முன்னர் அகப்பற்றினை ஒழிக்க வேண்டும். புறப்பற்றினை ஒழிப்பது எதற்காக என்று கேட்பது கூடா ஒழுக்கத்தார்க்குச்* சம்மதமே. வானவர் ஆயினும்

---

*துறவறம் மேற்கொண்டும் ஆசாபாசங்களை விடாதவர்கள்.

இல்வாழ்க்கையை விடுத்தலே ஞானத்தின் ஒழுக்கம் என்று இறைவனாகிய சிவபெருமான் உமையவளுக்கு விளக்கி இருக்கிறார். ஆதலில் புறப்பற்றை ஒழிப்பது எதற்காக என்று கேட்பது தவறு. முக்குற்றங்களையும் இயல்பாக நீத்த மாசற்ற மனமுடையவர்கள் முன்னரே புறத்துறவு அடைதலை உயர்ந்த நெறி என்று பெரியோர் சொல்வர் .

35. ஒன்றிய பாச இருள்துரந் திடுதற்கு
உபாயம்ஐம் புலன்ஒடுக் கிடுதல்
ஒன்றுஅலது இலைஎன்று அதுசெய்வோன் அவைவேண்டு
அனைத்தும்முன் விடாதுவைத்து உறுதல்
என்றும்எவ் இடத்தும் எனைமுதல் உயிர்கள்
எவற்றையும் கொலைசெயேன் வெருட்டேன்
என்று சொல் விரதி ஒருவன்நாள் தொறுங்கை
இடையின்ஓர் படைகொளும் இயல்பே.

உயிருடன் பொருந்திய அஞ்ஞான இருளைப் போக்கும் வழி ஐம்புல உணர்வுகளை நீக்குதல் மட்டுமே. இதைத்தவிர வேறு வழி இல்லை. ஐம்புல உணர்வுகளை நீக்குவோன், அந்த ஐம்புலன்களால் விரும்பப் பட்ட பொருள்கள் அனைத்தையும் முன் நீங்காது வைத்துக் கொண்டிருத்தல் ஏன்? அது, “எவ் உயிர்களையும் கொல்ல மாட்டேன், பயப்படச் செய்ய மாட்டேன்” என்று சொல்லும் கொல்லா விரதி ஒருவன், எக்காலமும், எவ்விடத்திலும் இடைவிடாது வாளைக் கையில் வைத்துக் கொண்டிருப்பது போல் ஆகும்.

36. சாதக தசைக்கண் விடயமே தடையாம்
சாத்திய மானபின் புசித்தற்கு
ஆதல்வைத் திடின்அப் பிரமவா னந்தத்து
அதிகமோ விடயஆ னந்தம்
கோதுஇல்வீட்டு இன்பம் பெறுகலா விடினும்
கூடுதற்கு எனில்கரி பிழைக்கில்
தீதில்ஓர் சிங்கம் அதனையே அன்றித்
தேடுமோ தேரைஊன் தினவே.

சீடனின் கேள்வி – விஷய சுகங்களை வைத்துக்கொண்டே ஞான சாதகம் செய்யக் கூடாதா?

ஞான சாதகம் செய்யும்போது பொருள்களை வைத்துக்கொள்வதே அதற்குத் தடையாகும். ஆகையால் பொருள்களை வைத்துக்கொண்டு ஞான சாதகம் செய்யக் கூடாது. பயிற்சி முடிந்த பிறகு விஷயங்களை அனுபவிப்பேன் என்று நினைத்துக்கொண்டால் அந்தப் "பேரின்பத்தை" விட இந்த விஷயசுகம் இன்பத்தைத் தருமா? விஷயானந்தமே போதும் என்றால் பிரம்மானந்தம் அடைவதற்குச் சாதகம் செய்ய வேண்டியதில்லை. சிங்கம் யானையை அடித்து விடுகிறது யானை தப்பி ஓடிவிடுகிறது. சிங்கம் தான் அடித்த அந்த யானையைத் தேடிச் செல்லுமா? அல்லது எதிர் காணும் அற்பமான தேரையைப் பிடித்துத் தின்னுமா? அதுபோல பேரின்ப நிலையை அடைய சாதகம் செய்யத் தொடங்கியவன் அந்த நிலையை இன்னும் எட்டாவிட்டால் கூட விஷயங்களில் பற்று வைப்பானா?

**37.** **படைஎடுத்து அமர்கண் சாரும்ஓர் வீரன்**
**பகைஞரைச் சயம்கொளா விடினும்**
**விடைஎனப் பொருதுஆங்கு இறத்தலே அன்றி**
**வெந்நிட உன்னிடான் அதுபோல்**
**கடைஎன விடயம் இகழ்ந்துபேர் இன்பம்**
**கருதினோன் பெறுகலா விடினும்**
**இடையறாது அதைநா டுவதுஅலால் மறந்தும்**
**எண்ணுமோ மண்ணின்வாழ்க் கையையே.**

படையுடன் போர்க்களம் செல்லும் ஒப்பற்ற வீரன் பகைவரை வெற்றி கொள்ளாத போதும், காளை போல் அப்பகைவரோடு போராடி அந்தப் போர்க்களத்தில் இறந்து போவதை விடுத்து, புறமுதுகு காட்டி ஓடுவானோ? ஞானப் பயிற்சி தொடங்கியவன் அது கைகூடி அவ்வின்பத்தைப் பெறாமல் இருந்தான் ஆயினும், ஒருகணமும் இடைவிடாது அவ்வின்பத்தை எப்பொழுது அடைவேன் என்று எண்ணுவதே அன்றி மறந்தாயினும் தான் முன்னர் இகழ்ந்து கைவிட்ட இல் வாழ்க்கையை மீண்டும் நினைப்பானோ?

**38.** **இந்திர சாலத்து ஒருநகர் காண்போர்**
**எனத்தனு முதல்பிர பஞ்சம்**
**நந்தினும் கெடினும் பூரியா வாடா**
**நன்மனச் சனகன்ஆ தியரும்**
**மந்திரி முதலோர் மீதுபூ பாரம்**
**வைத்தொர்ஏ காந்தத்துள் வதியாத்**

தந்தொழில் ஒருக்கிச் சமாதிஉற்று அன்றோ
தவிர்ந்தனர் கரணவா தனையே.

மக்கள் இந்திர சால வித்தையினால் உண்டாக்கப்பட்ட ஒரு நகரைச் பொய்யென்று அறிந்து வேடிக்கையாகக் கண்டு களிப்பார்கள். அதுபோல உடல் முதலான பிரபஞ்சம் எல்லாம் மாயையின் செயல் ஆகிய பொய் என்று அறிந்து, அவை மேன்மையாய் விளங்கும் போதும், அழிவு வந்த போதும் மகிழ்வும் வருத்தமும் கொள்ளமாட்டார்கள். குற்றமிலாத சித்தம் உடைய சனக மன்னர் முதலானோரும் மந்திரி முதலானவர்களிடத்தில் அரச பாரத்தை எல்லாம் ஒப்புவித்து, தனிமையில் இருந்து கொண்டு தமது அரச காரியங்களை எல்லாம் ஒழித்துவிட்டு, ஞான சமாதி கூடியல்லவோ அந்தக் கரண வாதனையை ஒழித்தார்கள்!

**39.** சொற்றிடின் மயக்க மற்றுஉதித்து உளஅச்
சுகரும்ஒண் தாதையைத் துறவா
உற்றுஇரும் சமாதி உற்றுஅகப் பற்றும்
ஒருவிவீடு அடைந்தனர் சனகர்
முற்றவ முனிவர் நால்வரும் ஒருநான்
முகப்பிதா விடத்துஅவன் வளத்துஓர்
பற்றும்அற்று அகப்பற் றையும்உயர் சமாதி
பணிஒழித்து எணியவீடு அடைந்தார்.

சொல்லும் இடத்து, பிறக்கும்போது மயக்க இருள் இன்றித் தோன்றிய அந்தச் சுக முனிவரும் பிதாவினைத் துறந்து, பெருமை மிக்க ஞான சமாதியை அடைந்தார். மற்ற அகப் பற்றினையும் நீக்கி, வீடுபேறு அடைந்தார். சனகர் முதலான தவமுனிவர் நால்வரும், நான்முகனாகிய தமது தந்தையிடம் உள்ள செல்வங்களின் மேல் ஒரு பற்றும் இன்றித் துறந்து, உயர்ந்த ஞான சமாதி கூடி அகப்பற்றினையும் ஒழித்து, அதனால் தாம் கருதிய வீட்டின்பத்தையும் அடைந்தார்கள்.

**40.** தத்துவம் உணர வேண்டினோன் மனைமுதல்
சகலமும் விடுத்துமெய்ஞ் ஞான
முத்திரை திகழச் சமாதிஉற்று அல்லால்
முடியுமோ எனஉமை முதலா
வைத்ததன் குாழத்தை ஒருவிநீள் கல்லால்
மரத்தின்நீ ழலில்சமா தியைஉற்று

**அத்தனே உணர்த்தி னான்எனில் பினும்வேறு**
**அறைதல்நம் மிகுமடன் அன்றே.**

இறை இயல்பை அறிய விரும்பினோன் மனவி முதலான எல்லாப் பற்றுக்களையும் விட்டு நீங்கி மெய்ஞ்ஞான முத்திரை விளங்க ஞான சமாதியை அடைந்தால் அன்றி, அதனை அறிய இயலுமோ? உமை முதலாய் உள்ள தனது கூட்டங்களை எல்லாம் நீங்கி, கல் ஆல மரத்தின் நிழலின் கீழ் ஞான சமாதி அடைந்து சிவபெருமானே இருந்தான் என்றால், பின்னரும் வேறு உதாரணங்களை எடுத்துக் காட்டாகக் கூறுதல் நமது அறியாமையே.

41. **எடுத்துஉள குடும்பச் சுமையொடுஈண்டு ஒருவன்**
**எங்ஙனம் ஞானஆ சானை**
**அடுத்துஅவன் ஏவல் தொடுத்துஅருள் சுரக்கும்**
**அளவுநின்று உளம்மகிழ்ந்து அன்னோன்**
**கொடுத்தநாள் வாங்கிக் கொளும்பர மார்த்தம்**
**கூடினும் காலம்ஆ திகளால்**
**தடுத்துஉரை தொழிலை விடுத்தலால் சமாதி**
**சார்ந்துஅஃது உணரவும் படுமே.**

ஒருவன் தான் ஏற்றுள்ள குடும்பச் சுமைகளை விடாமல், ஞான குருவை அடைந்து, அவருக்கு முழுமையான கருணை உண்டாகும்வரை அவருக்கு எவ்வாறு ஏவல் செய்ய முடியும்? பணிவிடையினால் அக்குருவும் மகிழ்ந்து அருளும் போதுதான் ஞானோபதேசத்தைப் பெறுவான். கால தேச முறைகளால் அந்தக் குருவை அடைந்து, அருள் பெறக் கூடுமாயினும் மனோ வாக்கு காயங்களை அடக்கினாலன்றி ஞான சமாதி கூடி ஞானத்தை அறியக் கூடுமோ?

42. **தனித்துஇருந்து ஒருதம் மனத்தைஐம் பொறிவாய்த்து**
**அடுத்துஅகப் படுத்திஃது எத்தை**
**நினைத்துஎழா நின்றது என்றுநோக் குநரே**
**நீக்குவர் வாக்கொடு தொழிலைப்**
**பிணைத்தடை யாம்போக் குவர்இல்வாழ்க் கையையும்**
**பேச்சைநாள் தொறும்பழ குநர்ஈது**

அனைத்தின்ஒன் றேனும் விடார்பிறர் காண்ப
தன்மையால் அகப்பற்றே விடுப்பார்.

தனிமையை அடைந்து ஒப்பற்ற தம் மனத்தினை ஐந்து பொறி வழியே செல்லவிடாது உள் வாங்கி அகமுகப் படுத்த வேண்டும். இந்த மனம் எதை நினைத்து எழுகின்றது என்று அறிந்து கொள்ள வேண்டும். அவ்வாறு காண்பவரே வாக்கு, உடல் ஆகியவற்றை நினைத்துக் கொண்டு மனம் எழுகின்றது என்று அறிந்து, அவ்வாக்கினால் சொல்லும் தொழில்களையும், உடலால் செய்யும் தொழில்களையும் நீக்கி விடுவர். வாக்கு சொல்வதையும் உடல் செய்கின்ற தொழில்களையும் விட்டுவிட்டால் இல்வாழ்க்கைக்குத் தடை வரும். எனவே பின்னால் இந்த இல்வாழ்க்கையையும் விட்டு நீங்குவர். கல்வியறிவு இருந்தும் வீண் பேச்சுப் பேசுகின்றவர்கள் மனோவாக்கு காயங்களால் செய்யும் தொழில்களை விடமாட்டார்கள், அகப்பற்றைத் தான் நீக்கிவிட்டதாக பிதற்றிக் கொண்டிருப்பார்கள்.

43. தந்தைதாய் முதலாம் பந்தம்நீங் கிலர்கள்
தாம்உயும் நெறியதுஇன்று எனும்சம்
பந்தனார் உரையும் வேண்டியது எய்தப்
படாது சுற்ற மும்விடா விடின்என்
எந்தைவாக்கு அரையர் உரையும்ஆ தியவாக்
கியம்பிர மாணம்ஆம் எனக்கொள்
புந்தியார் புறப்பற்று உறஅகப் பற்றைப்
போக்கவாய்ப் போக்குதல் இலரே.

'தந்தை தாய் முதலான பற்றுக்களை விட்டு நீங்காதார்க்கு உய்ந்து போவதற்கு உரிய வழி இல்லை' என்று கூறிய திருஞான சம்பந்தர் சொல்லையும், 'பெண்டிர் முதலான சுற்றத்தை விடாவிடின், தாம் அடைய வேண்டியவற்றை அடைய இயலாது' என்று சொன்ன நாவுக்கரசர் சொல்லையும் சத்தியம் எனக் கருதும் நல்ல அறிவு உடையோர், புறப்பற்று இருக்க நாம் அகப்பற்றை ஒழிப்போம் என்று வாயினால் கூட சொல்லமாட்டார்கள்.

44. விடுக்குநர் புறப்பற்று அதின்உயிர்ச் சார்பை
விடுத்துமற் றையபொருட் சார்பைப்
பிடிக்குதல் ஒழுங்குஅன்று எனின்உறை இடமும்
பேணுறாது ஒழித்தல்தீது எனவே

படிக்கண்நீ உரைக்கக் கேட்டனம் உனைப்போல்
பற்றிநோக் காமையின் அன்றோ
இடுக்கண்என்று அனைத்தும் விடுத்தனர் உலகம்
ஏத்துபத் திரகிரி முதலோர்.

"சுற்றத்தாரை விட்டு நீங்கி, பொருள் சார்பை மட்டும் வைத்துக்கொண்டு அகப்பற்றை ஒழிக்க முயலக் கூடாதா? புறப் பற்றுக்களில் உறவினர்களைத் துறந்துவிட்டாலும் பொருள்களிடம் வைத்த ஆசையையும் விட்டுவிட வேண்டும் என்றால் வசிக்க ஒரு இடமாவது வேண்டுமல்லவா?" (என்று சீடன் சொல்ல குருவானவர் வேடிக்கையாகக் கூறுகிறார்) "வசிக்க இடம் வேண்டுமே என்று நீ ஒருவனே சொல்லக் கேட்டோம். உன்னைப் போல ஆராய்ச்சி செய்யாமல் அல்லவா பத்திரகிரி முதலான பெரியோர்கள் அனைத்தையும் துறந்தார்கள்".

45. துறந்தவன் பொருள்சார்பு உறஅறிவு இலர்க்குத்
தூயஞா னாதிசாத் திரங்கள்
அறைந்துஇதம் பேசிப் பொருள்கவர்ந் ததனால்
அச்சமும் இச்சைஆ திகளும்
செறிந்துஉற அகத்துஉண்டு இனியஊண் இருக்கும்
செய்தியால் நெய்சொரி தழல்போல்
இறந்திடா மனவா தனைபினைத் தனதுஓர்
எணத்தைஎவ் வணத்தினால் முடிப்பான்.

உற்றார் உறவினர் என்ற பந்தங்களை விட்டு நீங்கியவன், கல்வியின் பயனால் சிறந்த ஞான சாத்திரங்களை இதமாக உபதேசித்து அதன்மூலம் பொருள் ஈட்டுகிறான் என்று வைத்துக்கொள்வோம். இதனால் ஏற்படும் பயன் என்ன? பொருள் சேர்ப்பதில் ஆசையும், அதைக் காக்கவேண்டுமே என்ற பயமும், அதனால் குரோதமும் தான் ஏற்படும். சுவையுள்ள உணவை விரும்பி உண்பதால் மனதில் ஆசாபாசங்கள் அதிகரிக்கும். இது தீயில் நெய்யை ஊற்றியதுபோல ஆசைத் தீயை வளர்க்கும். இப்படிச் செல்வங்களின் மேல் ஆசை கொண்டவனால் எப்படி அகப்பற்றினை ஒழிக்க முடியும்?

46. பொருள்அறத் துறந்து பயிக்கம் ஏற்று அருந்திப்
பொருந்தினும் ஓர்இடம் பிடித்துஉள்
வெருள்அறப் பனிஆ தியின்உடற் பழக
வேண்டும்இன்று ஆகுதல் தானும்

**இருள்அறத் தீபம் ஏற்றல்முன் தொழில்கள்**
**என்றும்வேண் டிடுதலால் இடரும்**
**அருள்அறச் சிதலை முதல்உயிர்க்கு உறுகண்**
**ஆற்றலும் அதன்பொருட்டு ஆம்ஆல்.**

பொருட் சார்பினையும் துறந்து, பிச்சை ஏற்றுண்டு ஓர் இடத்தைப் பற்றிக் கொண்டு இருந்தாலும், மனபயம் அகலவும், பனி முதலியனவற்றால் உடல் பழகவும் வேண்டும். பழக்கம் இல்லாவிடில் இருள் அகலத் தீபம் ஏற்றுகை முதலான தொழில்கள் எக்காலத்தும் வேண்டும். ஒரே இடத்தில் வசிப்பதால் உயிர்க் கருணை இன்றி எறும்பு முதலான அற்ப உயிர்களுக்குத் துன்பம் இழைக்க நேரிடும்.

**47.** **பிறிதுநோய் தன்நோய்* போன்றுபோற் றானேல்**
**பெரிதுநூல் அரிதின்ஓர்ந்து உணர்ந்த**
**அறிவினால் உண்டோ ஆவதுஎன் றமையால்**
**அறைதரு சராசரம் எவைக்கும்**
**சிறிதும்ஓர் துயரம் மறவிஉற் றேனும்**
**செய்யுமே மெய்உணர்வு அடைவான்**
**மறுஅறு துறவைப் பொன்செய்வா ணிகர்போல்**
**வருந்திநாள் தொறும்வளர்ப் பவனே.**

பிறிதோர் உயிருக்கு வந்த துன்பத்தினைத் தனக்கு வந்த துன்பம் போலக் கருதாவிடில், பெரிய நூல்களை அரிதாகக் கற்றமையால் பயன் உண்டோ? இவ்வாறு திருவள்ளுவர் சொன்னபடி இங்குள்ள எல்லா உயிர்களுக்கும் ஒருவன் மறந்தாயினும் துன்பம் செய்வானோ? நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல் முதலிய செயல்கள் உயிர்களின் நாசத்துக்கு ஏதுவாகும். அதனால் உயிர்க்கொலை புரியாது, தங்க நகை வியாபாரிகள் எப்படித் தங்கள் லாபத்தைப் பெருக்கிக் கொள்கிறார்களோ அதுபோல அதே நினைவாக துறவறத்தினை பெருக்கிக் கொள்ள சலிப்படையாமல் முயலவேண்டும்.

*"அறிவினான் ஆகுவதுண்டோ பிறிதின் நோய்
தம்நோய் போல் போற்றாக் கடை". *திருக்குறள்*

**48.** **தனக்குஇனி யவன்ஆம் வகைசரா சரங்கள்**
**நினைகஎன்று உமைக்குஉரைத் ததுவும்**

**வினைக்கடல் கடந்த பரதர்*முன் சிவிகை**
**சுமந்துசென் றதுவும்ஓர் மேலோர்**
**பினைக்கொல்பாம்பு ஆதி உறுதலம் செலுங்கால்**
**பேணலின் தமைநடந் திடும்போது**
**இனக்கறை யான்ஆ தியமரி யாதுஅங்கு**
**உரம்முரி யாதுஇயங் கிடுவார்.**

உமைக்கு சிவபெருமான், "தன்னை ஒருவன் எப்படிப் பாதுகாத்துக் கொள்கிறானோ அதேபோல உலகத்திலுள்ள எல்லா உயிர்களையும் காப்பாற்ற வேண்டும்" என்று உபதேசித்தார். பிறவி என்ற பெரிய கடலைக் கடந்தவரான பரத முனிவர், அரசனின் பல்லக்கைத் தூக்க நேரிட்டபோது, வழியில் ஊர்ந்த சிறு உயிர்களைக் கூட மிதிக்காமல் நடந்து சென்றார். இதை அறிந்த ஞானிகள் பாம்பு முதலிய விஷ ஜந்துக்களிடமிருந்து நம்மை எப்படிப் பாதுகாத்துக் கொள்கிறோமோ அதைப்போல கரையான் எறும்பு முதலிய சிறு உயிர்களுக்குக் கூடத் தீங்குவராமல் பாதுகாப்பார்கள். புல் பூண்டுகளுக்குக் கூட தீங்கு செய்யமாட்டார்கள்.

**49.** **தம்மிடத் தேனும் தமக்குஇனி யவர்பால்**
**ஏனும்ஓர் இடர்வந்து சாரின்**
**அம்மஊழ் முறைஎன்று அறிந்தும்ஏழ் கடல்ஓர்**
**அணுவென உருகும்என் போல்வார்**
**இம்முறை துயர்வேறு உயிர்உறின் இரக்கம்**
**இன்றிஅது அன்றியும் தம்மால்**
**வெம்மைய கொலைஒன்று அடையினும் அதன்ஊழ்**
**என்பதுஎன் மிகமுகம் மலர்ந்தே.**

தம்மிடத்திலோ, தமக்கு இனியவராய் உள்ள சுற்றத்தார் இடத்திலோ ஒரு துன்பம் வந்து சேர்ந்தால், அது ஊழ்வினையின் பயன் என்று அறிந்து இருந்தும், ஏழ்கடல்களும் ஓர் அணு என்று சொல்லுமாறு நெஞ்சம் நெக்கு உருகி கண்ணீர் சொரிவர். இவர்கள் முறைப்படி வேறு ஓர் உயிர் துன்பம் அடையின் இரக்கம் இன்றி இருக்கின்றனர். அது அன்றியும் தம்மால் ஓர் உயிர் கொலையுண்டபோது, மிக முகமலர்ச்சியுடன் அதனுடைய ஊழ் வினை என்று சொல்வது ஏன்?

---

*ஜடபரதர் என்ற ஞானி

**50.** **இம்மையின் இகழ்ச்சி மறுமையில் சிறுமை**
**எய்தும்என்று உயிர்க்கொலை புரியாச்**
**செம்மைபைங் கனகம் ஆதிகைப் பற்றாத்**
**துறவினைச் சிலர்அடைந் திடினும்**
**தம்மைஒத்து உயிர்கள் அனைத்தையும் காணும்**
**தயவுஉயர் தபனியம் முதல**
**மும்மையும் ஒட்டில் காட்டில்அன் னையில்காண்**
**துறவுஒருஒர் தவர்க்குஅலால் முடியா.**

இம்மையில் உயிர்களால் பழிப்பும், மறுமையில் பிறவித் துன்பமும் வரும் என்று கருதி, உயிர்க் கொலை செய்யாத செம்மையினையும், பொன், மண், பெண் என்னும் மூவகையில் பற்றில்லாத துறவினையும் இம்முறையில் சிலர் அடைந்துள்ளனர். ஆயினும் தம்மைப் போல் உயிர்கள் அனைத்தையும் காணும் கருணையும், பொன்னை ஒட்டினைப் போலவும், நிலத்தைக் காட்டினைப் போலவும், பெண்களை அன்னையைப் போலவும் காணும் துறவும் ஒருசில துறவிகளுக்கு அன்றி மற்றவர்க்கு முடியாது.

**51.** **அறைதலில் கொல்லா நலத்தது நோன்மை**
**எனஅருள் துறவுசார் அகத்துஊடு**
**உறுமஃது உறவே சினம்அழுக் காறுஅங்கு**
**உறாமையால் கொடுஞ்சொல் கூறாமை**
**புறம்உரை யாமை மருவிய இரண்டால்**
**பொருவின்மெய் உறுதிஓர்ந்து உரைத்தல்**
**நிறைபெரும் தவத்தோர் வாக்கின்இந் நான்கு**
**நிகழும்என்று இயம்புவர் நெடியோர்.**

உயிர்களைக் கொல்லாத நலத்தினை உடையது தவம் என்பார் திருவள்ளுவர். அதனால் பற்றற்ற துறவுடையோர் உள்ளத்தில் உயிர்க் கருணை நிலை பெற்று இருக்கும். அவ்வாறு இருந்தால் அவ்வுள்ளத்தின் கண் உயிர்கள் மேல் கோபமும் பொறாமையும் வந்து சேராது. எனவே கோபம் இல்லாமையால் கொடுஞ்சொல் கூறார். பொறாமை இன்மையால் புறங்கூறார். இவை இரண்டும் கூறாமையால் உண்மையையே கூறுவர். புறங்கூறாமையால் வீடுபேறு அடைவதற்கான நெறியை ஆராய்ந்து கூறுவர். கோபம், பொறாமையின்மை, புறங்கூறாமை, உண்மையே கூறுதல் இந்த நான்கு நெறிகளும் நிறைந்த தவம் உடையார் பேசும்போதே அவர்தம் பெருமை விளங்கும்.

**52.** **கான்றசோறு அதனில் கண்டுபொய்ப் போகம்**
**அனைத்தையும் கைவிடுத் திடினும்**
**தோன்றுஉல கினைமெய் எனக்கொடு மீக்கூற்று**
**உறவிருப்பு அடையின்அத் துறவோன்**
**சான்றுஅதாய் உளதன் உளம்இலை எனவும்**
**தற்பரா னந்தம்உற் றவனைப்**
**போன்றுஇரு விழிமேல் செருகிஈண்டு உரைக்கும்**
**பொய்யைஎவ் விதத்தினால் போக்கும்.**

மாயையின் செயல்களால் விளையும் பொய்ப் போகங்கள் அனைத்தையும், கக்கின சோறு போல் கண்டு, துறக்கவேண்டும். கானல் நீரைப் போலப் பொய்யாய்த் தோன்றுகின்ற உலகத்தினை உண்மை எனக் கருதி அதனால் கீர்த்தி அடைய விரும்புகிறவன் பேரின்ப நிலையை அடைந்து விட்டவன்போல நடித்தால் அவனுடைய மனச்சாட்சியே "நீ இன்னும் பேரின்ப நிலையை அடையவில்லை" என்று இழித்துக்காட்டும். மேலும், உலகத்தவர்க்கு தான் அமைதி நிலை அடைந்தவன்போல் கண்களை மேலே செருகி ஏமாற்றுபவன் எவ்வாறு அந்தப் பாபத்தைப் போக்கிக் கொள்வான்?

**53.** **இத்திறன் அருள்கைப் பிடித்துஎலாம் விடுத்தோன்**
**ஏவலன் ஒருவனோடு உறினும்**
**சித்தசஞ் சலம்உண்டு அவன் ஓர்ஓர் காலை**
**செயும்செயல் பிழைக்கின்உட் சீற்றம்**
**வைத்திடப் படுத லால்தனது உடற்பால்**
**வந்துஒரு பிணிஉறில் துணிவோடு**
**அத்தனேஉளன் என்று இருத்தலின் இருத்தல்**
**அரிதுஅனோன் தனைஉறின் அதனால்.**

எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் நினைத்துக் கருணை காட்டுகிறவன் மற்ற ஆசைகளை எல்லாம் துறந்துவிடுகிறான். ஆனால் வேலையாள் ஒருவனைப் பணிசெய்ய வைத்துக்கொண்டால் அவன் தவறு செய்தால் கோபம் வரும். தனக்கு நோய் வந்தால் சிவனே துணை என்று பொறுத்துக்கொள்ளலாம். ஏவலாளுக்கு நோய் வந்துவிட்டால் அவனைக் காப்பாற்றும் பொறுப்பு வந்து சேரும். இத்தகைய காரணங்களினால் சித்த சஞ்சலம் உண்டாகும்.

54. யாதுயாது ஒருவன் நீங்கியான் நோதல்
அதனினால் அதனினால் இலன்என்று
ஓதலால் அனைத்தும் துயர்தரும் எனநீத்து
உயர்பரம் பொருளினைக் காட்டும்
தீதுஇல்ஓர் குரவன் எங்குஉளன் எனவே
தேடுமால் அலைகடல் சூழும்
பூதலம் மிசைஓர் துறவினோன் நறவு
பொலிமலர் தேடும்வண்டி னைப்போல்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்". *திருக்குறள்*

எத்தனைக் கெத்தனை பொருள்களின் மீது உள்ள ஆசையைத் துறக்கிறோமோ அத்தனைக்கத்தனை அவை கிடைக்கவில்லையே என்ற ஏக்கமும் துக்கமும் இல்லை, என்று வள்ளுவர் கூறுகிறார். ஆகையால் மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய எல்லாமே துன்பத்தைத் தான் தரும் என்று தீர்மானித்துக்கொண்டு அடியோடு துறக்க வேண்டும். துறவறம் பூண விரும்புகிறவன் தேன் உள்ள மலரை வண்டு தேடுவது போல கடல் சூழ்ந்த இந்த உலகத்தில் கருணை, பக்தி, வைராக்கியம், ஞானம் என்ற நான்கும் நிரம்பிய ஞான குருவைத் தேடி அடைவான்.

55. சமரம்உற் றிடாது புறம்திரி ஒருவன்
தனதுஎதிர் அடைதரு படைக்கைக்
குமரரை நோக்கி மிகுபராக் கிரமம்
கூறினும் தேறலர் அதுபோல்
அமர்தரத் துறவு சமாதிஓ திடினும்
அவற்றினுக்கு அயல்நடை யினரேல்
தமர்எனத் துணிவுற்று அவரொடும் பழகார்
தத்துவ நிலைதலைப் படுவார்.

போர்க்களத்தில் புகுந்து ஆயுதம் ஏந்தி யுத்தம் செய்யாமல் வேடிக்கை பார்த்தவன், போரிட்டுக் களைப்படைந்த வீரர்களைப் பார்த்துத் தன்னுடைய வீர பராக்கிரமத்தைப் பற்றிப் பெருமை அடித்துக்கொள்கிறான். அவனை வீரன் என்று ஒப்புக்கொள்ள முடியாது. அதைப் போலத் துறவறம் சமாதி இவற்றைப் பற்றி எவ்வளவு தெளிவாகப் பேசினாலும் அதைப் பின்பற்றி நடக்காதவர்களை ஞானம் பெற முயல்பவன் அணுக மாட்டான்.

56. நீர்இடத்து அன்றி அந்தரத்து இடையே
நிகழும்ஓர் மரைகொள விரும்பார்
பாரிடத்து எவரும் விநோதிகள் சாலம்
பண்ணல்என்று எண்ணிமற் றதுபோல்
சீர்உடைத் துறவு சமாதிபெற்று உலகில்
திகழினும் உயிர்க்குஎலாம் தயவும்
சார்அருள் குருபத் தியும்இலார் தமையும்
தமர்எனப் பழகவும் தகுமே.

உலகத்தோர் நீரில் பூக்கும் தாமரையைப் பறிக்கத்தான் விரும்புவார்கள். ஆகாயத்தாமரை என்ற கற்பனைப் பூவைப் பறிக்க மாட்டார்கள். ஜாலத்தைக் காட்டும் மந்திரவாதி இல்லாததை இருப்பதுபோல் காட்டுவான். சில துறவிகள் துறவு சமாதி நிலைகளை அடைந்தது போல ஜாலத்தைக் காட்டுவார்கள். குருபக்தியும் சீவ காருண்ணியமும் இல்லாத இப்படிப் பட்டவர்களை அணுகிப் பழகக்கூடாது.

57. இதுநெறி எனஓர் ஊர்க்குமற்று ஒருவன்
ஏகினும் ஆத்தன்வாய்க் குறிகள்
அதுதனில் காணா இடத்துஉல கரும்ஓர்
அடிபெயர்த் திடுகலர் அதுபோல்
எதிர்அறு சமாதி ஆதிபெற்று உடையோர்
என்னினும் முன்னவன் உரைத்த
சதுர்மறை யாக மாந்தநிந் தகரேல்
தமர்எனல் அவரையும் தகுமே.

ஒருவன் தன் நண்பன் சொன்ன வழியாக இன்னொரு ஊருக்குப் போகும் போது அவன் கூறிய அடையாளங்களைக் காணாவிட்டால் வழி தவறி விட்டோம் என்று தெரிந்து கொண்டுவிடுவான். அதே வழியில் தொடர்ந்து போக மாட்டான். அதுபோல சமாதி நிலையை அடைந்து உணர்ந்தவர்கள் வேதம், ஆகமம் முதலியவற்றில் சொல்லப்பட்டிருக்கும் மகா வாக்கியங்களைத் திரித்துக் கூறினாலும் நிந்தித்தாலும் அவர்களுடன் தொடர்பு கொள்வது சரியாகுமா? (ஆகாது)

**58. ஈங்குஅறை முறையில் தேர்ந்துபார் இதன்மீது**
**எங்கணும் தேடியோர் இடத்தின்**
**ஓங்குஅருள் முதல நான்கும்ஓர் வடிவாய்**
**உளதுஎன மறையின்ஈற்று உரைகள்**
**தாங்குநா வொடும்செங் குவளைமார் பொடும்பொன்**
**சரணொடும் சரண்என அடைந்தோர்**
**தீங்குஒழித்து அருள்வான் திகழும்ஓர் குரவற்**
**கண்டுளம் குளிர்ந்தனன் தெளிஞன்.**

ஒரு சாதகன் மேற்சொன்ன இலக்கணங்களின்படி சீவகாருண்ணியம், ஈசுவரபக்தி, பாச வைராக்கியம், பிரம்ம ஞானம் இவை நான்கும் ஒரு வடிவமாக விளங்கும் ஞான குருவை உலகில் தேடி அலைந்தான். துளசி மாலை அணிந்து, எப்போதும் வேத வாக்கியங்களையே உபதேசிப்பவரும், பொன்போன்ற திருவடிகளை உடையவருமான குருவைக் கண்டு சரணடைந்து விட்டான். அப்படித் தன்னையே சரண் என்று வந்தவனுடைய மனப்பக்குவம் அறிந்து அஞ்ஞானத்தை நீக்கி அருளக்கூடிய ஆசாரியரை அடைந்து உள்ளம் குளிர்ந்தான் அந்த அறிஞன்.

**59. காரியம் ஆக லால்சகம் படைக்கும்**
**காரணன் குலாலனில் உளன்என்று**
**ஓர்இயல்பு எனஏழ் கடலும்ஒன்று ஆக்கி**
**ஒப்பிடும் கருணைய னேனும்**
**பேர்இயை பிறப்புத் தனைஅடைந் தவர்க்குப்**
**பினைஉறா வகைகெடப் பார்க்கும்**
**கூரிய விழியோன் ஆதலின் அறவும்**
**கொடியனும் ஆகும்அக் குரிசில்.**

(ஒப்புவமை இல்லாத ஈசனை ஒரு குயவனுக்கு ஒப்பிடுகிறார்.) பானை, குடம் முதலியன மண்ணின் காரியம். அது சடம். இதைச் செய்பவன் குயவன், அவன் காரணன். அதுபோல மாயை சடம், இதைக் குயவனைப்போலக் காரியப் படுத்துவது (உருவம் கொடுப்பது) கடவுள். (அதனால் கீழ் நிலையிலுள்ள குயவனை ஈசனுக்கு உவமையாகக் கூறினார். இப்படிப் பொருத்தமற்ற உவமை கூறியதுபோல் கிருபா சமுத்திரமான குருவை கொடிய விழிகளை உடையவர் என்று கூறுகிறார்.) கருணைக்கடல் என்றாலும் தன்னைச்

சரண் அடைந்த பக்குவ மடைந்த சீடர்களுடைய பிறவித் துன்பங்களை நாசம் செய்கின்ற கூர்மையான விழிகளை உடைய குருவாகையால் மிகவும் கொடியவர். (இகழ்வது போலப் புகழ்ந்து குருவின் கருணையை விளக்குகிறார் சாந்தலிங்க சுவாமிகள்)

**60.** **செப்பிரும் கைலைக் குருமுறை மையில்தன்**
**சிரமிசைச் சரணம்வைத்து உளவோர்**
**மெய்ப்பரன் அருளை நினைதொறும் உளம்தீ**
**மெழுகுகல் எனஉரு கிடினும்**
**மைப்பவம் துடைத்துஅன் பினர்க்குவீடு அளிக்கும்**
**வல்லபம் உடையமற்று ஒருதான்**
**ஒப்புமிக்கு இலிஆ கலின்இறை பத்தி**
**உளனும்அன்று ஆகும்அவ் வும்பன்.**

புகழ்பெற்ற திருக்கையிலாய குரு பரம்பரையில் வந்த ஆசான், எனக்குத் திருவடி தீட்சைதந்து அருளியதை நினைக்கும்போதெல்லாம் கல் போன்ற என்மனம் அனலில் பட்ட மெழுகுபோல் உருகி விடுகின்றது. தன்னைச் சரணம் அடைந்த அன்பினர்க்கு அவர்களுடைய பிறவித் துன்பங்களை நீக்கிப் பேரின்ப நிலையை உடனே அளிக்கும் ஒப்பற்ற ஞானி. இவரே வீடு பேறளிக்கும் தன்மை உடையவராதலின் இவர் ஒப்புவமை இல்லாதவர். ஈசனுடைய சொரூபமாகவே இவர் இருப்பதால் பக்தி செய்ய வேண்டிய அவசியம் அவருக்கு இல்லை. (சிவனுக்கு மேல் யாரும் இல்லாதபடியால் யாரை பக்தி செய்வது அதனால் பக்தி இல்லாதவர் என்றார். மீண்டும் இகழ்வது போலப் புகழ்கிறார். ஈசுவர பக்தியை உடையவர் என்பது கருத்து)

**61.** **கருடனை நினைவோர் பார்வையால் பிறர்பால்**
**கடுஒழித் தலில்தனை நினைவோர்**
**ஒருவரை நோக்கின் அவர்கணும் பாசம்**
**ஒழித்தல்செய் துறவொடுஏய்ந்து உறினும்**
**அருள்மகள் புணர்ந்து ஞானசந் ததிபெற்று**
**அவரொடு மகிழ்ந்துஇருத் தலின்அக்**
**குருபரன் தன்னைப் பின்னைநேர் இல்லாக்**
**குடும்பிஎன்று உரைக்கவும் படுமால்.**

கருட பகவானை நினைத்து மந்திரம் ஓதுபவர் பார்வைபட்ட உடனேயே பாம்பு கடித்தவனுக்கு ஏறிய விஷம் இறங்கிவிடும். குருவை சதா நினைத்துத் தியானம் செய்பவன் இன்னொருவனைப் பார்த்த உடனேயே அவனுடைய பாசபந்தங்களை நீக்கி விடும் ஆற்றல் உண்டாகிவிடுகிறது. சீடனுக்கே இப்படிப்பட்ட ஆற்றலை அருளும் தவ வலிமையுடைய குருவைப் பெரிய குடும்பி என்று சொல்லக் கூடும். எப்படி என்றால் கருணை என்ற பெண்ணை மனைவியாகக் கொண்டிருக்கிறார். ஞானம் என்ற புதல்வனைப் பெற்றிருக்கிறார். ஆதலால் ஞானாசிரியனைக் குடும்பி என்று சொல்லக் கூடும். (சிறிதும் பாசம் அற்றவர் என்பதை இப்படி வலியுறுத்துகிறார். பாச வைராக்கியம் உடையவர் என்பது கருத்து)

**62.** **குலவுசெங் கதிரோன் இருளினை உணராக்**
**கொள்கைபோல் தான்ஒரு காலும்**
**சொலும்அறி யாமை அறிகிலா ஞானத்**
**தோன்றலே எனினும்அத் தூயோன்**
**இலகும்ஆனந்த உருவினை அணுக்கட்கு**
**ஈந்ததற்கு இணைஒரு துணையின்**
**மலஉடல் அவர்பால் கவர்தலின் இஃதுஓர்**
**மடமைபெற்று உடையனும் ஆமால்.**

அனைவராலும் போற்றப்படும் செங்கதிர் கொண்ட சூரியன் இருளை அறிய மாட்டான் போல், நான்முகன் முதலியோரால் புகழப்படும் ஞானகுரு அந்த இருளுக்கு ஒப்பு என்று சொல்லும் அறிவின்மையை ஒருகாலும் அறியாத ஞானமுடையவன் ஆயினும், குற்றமற்ற தன் ஆனந்த வடிவத்தினை உயிர்களுக்குக் கொடுத்து, அதற்கு ஈடாக இழிய மலவுடலை அவர் கையில் வாங்கிக் கொள்கிறார். அதனால் அந்த ஞானகுரு அறியாமை உடையவனும் ஆவார்.

**63.** **வதுவைநாள் மறையோர் வழங்கியாத் திரையின்**
**மற்றுஅருந் ததியைநோக் குதலின்**
**இதுவும்ஒன்று எனத்தம் உடல்பொருள் ஆவி**
**ஈயும்எம் போலிகள் தமக்கும்**
**குதிரைகொண் டிடஅன்று அடைந்துஉடல் ஆதி**
**கொடுத்தவன் போல்கொடுப் பவர்க்கும்**

**பொதுமைஉற்று இவன்ஓர் மானுடன் தானாய்த்**
**திகழும்அப் பூரண புராணன்.**

திருமண வேளையில் அந்தணர் தம் குல வழக்கப்படி செல்கின்ற காசி யாத்திரை போலவும், மணப்பெண் அருந்ததியைப் பார்ப்பது போலவும், இதுவும் ஒரு சடங்கு எனத் தம் உடல் பொருள் ஆவி மூன்றினையும் கொடுப்பவர்கள் எம் போன்ற மந்தமான சீடர்கள். பாண்டியனுக்காகக் குதிரை வாங்கச் சென்று, திருப்பெருந் துறையில் ஞான குருவை அடைந்து உடல், பொருள் ஆவி மூன்றினையும் இறைவனுக்குக் கொடுத்த மாணிக்க வாசகர் உண்மையான பக்தர். பரிபூரணனாகிய ஞானாசிரியர் போலி அன்பர்களுக்கு மனித உருவிலும் உண்மை பக்தர்களுக்கு மானைக் கரத்தில் ஏந்திய சிவபெருமானாகவும் காட்சி தருகிறார்.

**64.** **பாரின்அட் டாங்கா திகளொடுஅக் குரவற்**
**பலதரம் வலம்வந்து பணிந்து**
**சீரிய துதிசெய்து அனுதினம் அவற்றால்**
**திருவுளத்து அடைக்கவும் பட்டுத்**
**தூரமோடு அணிமை அறஇறை கருணை**
**சுரக்குநாள் அளவுநின்று ஏவல்**
**ஆர்இவன் தனக்குஒப்பு எனச்செய்து ஒண்சரண்**
**பெற்றுஅறியவேண் டுவமுழுது அறிந்தான்.**

அந்த ஞான குருவைப் பூமியின் மேல் அட்டாங்கமாக விழுந்து பலமுறை வணங்கி, எக்காலமும் வழிபாடு செய்வான். அதன் மூலம் ஞானகுரு இவன் பக்குவன் என்று அறிந்து தன் திருவுளத்தில் அவனை நினைத்துக் கொள்வார். குரு சினங் கொண்டமைக்காக அவரை விட்டுத் தொலைவில் செல்லாமலும், மகிழ்ந்திருக்குங் கால் அண்மையில் நெருங்காமலும் அவருக்குப் பணிவிடைகள் செய்வான். குருவின் மனதில் கருணை பிறக்கும் வரையில் “இவனுக்கு நிகராக யாராலும் தொண்டு செய்ய முடியாது” என்று புகழும்படி அவருக்குத் தொண்டு செய்வான். இதனால், குருவின் திருவடித் தீட்சை பெற்று, வீடு அடைவதற்கான உபதேசத்தையும் பெற்றான்.

**65.** **சற்குரு அருளால் ஐயமும் திரிவும்**
**தான்அற மறைமுடிவு உணர்ந்த**

**பின்குரு பரன்தாள் முன்சரண் புகுந்த**
**பெரியவர் இனமரீஇ இருந்துஒண்**
**சொற்களின் அரிய பொருள்கள்தேர்ந்து அவணம்**
**தொலைத்துஒரு சிறிதுநாள் பின்னர்**
**கற்குதல் ஆதி அனைத்தும்நீத்து என்றும்**
**ஞானசா தகத்தின்நாள் கழிப்பான்.**

சற்குருவின் அருளினால் உள்ளத்தில் எழும் சந்தேகங்கள் எல்லாம் நீங்கும். ஒன்றை மற்றொன்றாகக் காணும் விபரீதமும் நீங்கும். (கயிற்றைப் பாம்பாக எண்ணி மருள்வது போல) அப்படி வேதங்களின் சாரங்களை உணர்ந்து கொண்ட பிறகு குருவின் பாதங்களைச் சரண் அடைந்த பெரியோர்களின் சமீபத்திலேயே இருப்பான். அவர்களோடு சாத்திரங்கள் சொல்லும் நெறிகளைப் பற்றிக் கலந்து பேசுவான். அப்படி உரையாடித் தெளிவு பெறுவான். பிறகு சிரவணம் (கேட்பது) மனனம் (இடைவிடாது சிந்தனை செய்தல்) முதலிய எல்லாவற்றையுமே விட்டு விட்டுத் தனிமையில் ஞானம் பெறுவதற்கான சாதகத்திலேயே தன் நாட்களைக் கழிப்பான்.

**66.** **அரும்பொறி இன்மை பழிஅன்று யார்க்கும்**
**அறிவுஅறிந்து ஆள்வினை இன்மை**
**பெரும்பழி எனலால் ஒருவன்வீட்டு இன்பம்**
**பெறாமைகொடு இகழ்கலர் பெரியோர்**
**விரும்புஅஃது அடையும் வகைஅருட் குருவால்**
**விளங்கியும் உளங்கையில் கனிபோல்**
**வரும்படி நாளும் முயன்றுஉறா என்போல்**
**மதிஇலார் தமைஇகழ் வதலால்.**

ஊழ்வினையின் காரணத்தால் ஒருவன் நல்ல காலம் இல்லாமல் கஷ்டப்பட்டால் அதை யாரும் பழிக்கமாட்டார்கள். ஆனால் தன்னால் செய்ய முடிந்தும் அறிய வேண்டியவற்றை அறிய முயற்சி செய்யாமல் இருப்பவரை உலகம் பழிக்கும் என்று வள்ளுவர் கூறுகிறார். அதைப் போல ஒருவன் சாதகனாக இருந்தும் நிட்டை கூடிவராமல் இருந்தால் அதைப் பெரியோர் பழிக்க மாட்டார்கள். தமக்கு அருள் செய்த குருவின் உபதேசப்படி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் அந்த நிலை கிடைக்குப்படி சாதகம் செய்யாவிட்டால் அந்த அறிவிலிகளைப் பெரியோர் இகழ்வார்கள்.

(இடையறாது ஞான சாதகம் செய்ய வேண்டும் என்பது கருத்து)

**இதுவரை புறப்பற்றுக்களை நீக்கி ஞானாசிரியரை அடைவதைப் பற்றிக் கூறினார். இனி சாதகம் செய்ய வேண்டிய முறைகளைக் கூறுகிறார்.**

**67.** **பகர்தரு தொழில்கள் அனைத்தும்ஓர் சிறிது**
**பண்ணவேண் டுவபணி விடுத்துப்**
**புகல்உரை அடக்கித் தனிஇடத்து இருந்து**
**போற்றிசெய்து அருட்குரு பதம்பின்**
**மிகமுயன்று இதய வருத்தம்எய் தாமல்**
**மெலிந்துகை விடுதல்செய் யாமல்**
**அகமுகம் ஆக்கி மனத்தைநாள் தொறும்ஓர்**
**ஐம்புலன் ஒழித்துஅசைவு அறுப்பான்.**

விதிக்கப்பட்ட தினசரிச் செயல்கள் அனைத்தினுள்ளும் அவசியமான சிலவற்றை விரைவில் செய்து, பின் பேசாது மவுனமாகித் தனிமையில் இருந்து அருள் செய்த குருவின் திருவடிகளை வணங்க வேண்டும். பின் அவர் கூறிய முறைப்படி மனத்தை அடக்கி, முயற்சியுடன் எவ்வித மனவருத்தமும் இன்றி இருக்க வேண்டும். எப்படி அடக்கினாலும் இது அடங்குவது இல்லை என்று உள்ளம் வருந்தி அவ்வழியை விட்டு நீங்காது இருக்க வேண்டும். மெல்ல மெல்ல அம்மனத்தினை வெளியே செல்ல விடாது தடுத்து உள்முகமாக்கி ஐந்து புலன்களையும் அடக்கி, மனம் கருதும் பிற எண்ணங்களை நீக்குபவனாக இருக்க வேண்டும்.

**68.** **உச்சிஅம் போதில் மீதரும் பசிக்குஅவ்**
**வூர்வல மாய்இலம் தோறும்**
**பிச்சைகை இடையில் காடிகூ ழேனும்**
**பெற்றது பற்றிஉள் வெறுப்போடு**
**இச்சைஅற்று அருந்திப் பொருந்த ஏகாந்தத்து**
**இடையினும் தாகம்வந்து அடையின்**
**நச்சிநீர் ஊரில் புகுந்துஉறாது ஏரி**
**ஆதியில் அருந்துதல் நன்றே.**

உச்சிப் பொழுதில் மிகுந்த பசி வரும் போது, அந்த ஊரினை வலமாக வந்து, வீடுதோறும் சென்று காடியோ கூழோ இவற்றைக் கையில் பிச்சையாக ஏற்று, விருப்பு

வெறுப்பு இன்றி உண்ண வேண்டும். பின் தனியிடத்தில் இருக்க வேண்டும். நீர்த்தாகம் ஏற்பட்டால் அதற்காக ஊருக்குள் செல்லாது, ஏரி போன்ற நீர் நிலைகளுக்குச் சென்று நீர் அருந்த வேண்டும்.

69. ஞானசா தகன்மற்று உதயம்ஆ தியில்ஊண்
நயக்கொணா மயக்கம் ஆதலினும்
ஈனம்ஆர் விந்து மிகும்எனா அகன்றோர்
இகழ்ந்துகை விடுத்தவா தலினும்
தான்இரந்து ஒருபோழ்து அருந்திடும் உணவும்
சமம்அலால் தாழினும் மிகினும்
ஊனதுஆர் உடற்கண் நோய்உறும் அற்றைக்கு
உறக்கமும் மிகுந்திடும் அன்றே.

ஞான சாதகம் பண்ணுபவன் உச்சிக் காலம் தவிர, உதய காலம் முதலிய மற்றைய காலங்களில் அன்னம் முதலியவற்றை உண்ணக் கூடாது. அதனால் உடல் மயக்கம் ஏற்படுவதாலும், விந்து வெளிப்படுவதாலும், துறவிகளால் இகழ்ந்து நீக்கப்படுவான். தான் பிச்சை ஏற்று ஒரு வேளை உண்கின்ற உணவும், எந்நாளும் ஒரே நிலையில் உண்ணவேண்டும். குறைந்தாலும் மிகுந்தாலும் தசைப் பொதியாகிய இவ்வுடம்பில் நோய் வந்து சேரும். அத்துடன் தூக்கமும் மிகுந்து வரும்.

70. மிகுத்திடும் முனம்இல் படுதழல் அவிப்பான்
விடுபவன் கலங்கல்நீர் தெளிநீர்
பகுத்திடான் அதுபோல் காடிசோ றேனும்
பசித்தவன் புசித்திடல் தகுமால்
நகத்தவர் மனைதோறும் உழன்றுஎனக்கு அடிசில்
நல்கிடுஎன்று ஒருவன்வேட்டு உணலால்
அகத்துறு பசியும் போக்கிமற்று அதுகொடு
அதிகம்என் பயன்அடை வானோ.

வீடு பற்றி எரியும் போது, ஒருவன் அதனை அணைக்கவே முயல வேண்டும். அதனை விட்டு அதற்காகப் பயன்படும் நீரைக் கண்டு, இது கலங்கல் நீர் என்றும், இது தெளிந்த நீர் என்றும் பிரித்துப் பார்க்கமாட்டான். அது போல் நம் வயிற்றில் உள்ள பசி

என்னும் தீ எரியும் முன்னர், இதனை அவிப்பதற்கான நீர் என்று எண்ணி, நாவின் சுவை விரும்பி நல்லது தீயது என்று பகுத்துப் பார்க்கக் கூடாது. கிடைத்த உணவு நல்லதானாலும் புளித்த சோறானாலும் உண்பதே தவத்தோனுக்கு முறை. நாவின் சுவை கருதி வீடுதோறும் சென்று எனக்குச் சோறு போடுங்கள் என்று தவமுடைய ஒருவன் வாங்கி உண்டால் அது பசியை நீக்குமே தவிர, அதன் மூலம் வேறு என்ன பயனைப் பெறுவான்?

**71.** எரிந்துஎழு பசிநோய் தணிக்கஓர் மருந்துஎன்று
ஏற்றுஉணாது ஒருவன்நாச் சுவைவேட்டு
அருந்திடும் அளவும் வருந்திஅப் பிண்டம்
அளித்தவர் தம்மை நோவதுஎன்
இருந்துஉள கிரக வாழ்க்கையும் பினைவந்து
எய்திய துறவும் அல் லதுவீண்
திரிந்துஉடல் வளர்த்தி எனத்தனை விடுத்த
தெய்வத்தை நோவது மறந்தே.

வயிற்றில் எழுகின்ற பசி நோயை மாற்றுதற்கு ஈது ஒரு மருந்து என்று வந்த பிச்சையை வாங்கி உண்ண வேண்டும். நாவின் சுவையை விரும்பிக் காடிகூழ் முதலியன பிச்சையாகக் கிடைத்தால் அதனை உண்ணும் போது உள்ளம் வருந்தி அவ்வாறு பிச்சை இட்டோரை நொந்து கொள்வது என்ன முறை? முன்னர் இருந்த இல் வாழ்க்கையும் அல்லாது துறவும் அல்லாது பிறர் தூற்ற வீணாய்த் திரிந்து உடலை வளர்க்கிறான் அவன். அந்த ஊழ் வினையை நொந்து கொள்ள மறந்தது ஏன்?

**72.** எய்தவன் உறமற்று ஏவைஎன் நோவது
எனஉலகு உரைத்தலின் ஒருதாம்
செய்துள வினைக்குத் தக்கபேறு இறைவன்
சேர்க்குதல் தனைமறந்து என்னோ
உய்தவம் அறியாக் கைதவர் ஐயம்
உதவிடார் தமைஉத வினரை
வைதல்வாழ்த் திடுதல் செய்துமற்று ஒருசாண்
வயிறுநாள் தொறும்வளர்ப் பதுவே.

எய்தவன் இருக்க அம்பை நொந்து கொள்வது ஏன்? என்று சொல்வது உலக வழக்கு. அதனால் தாம் செய்துள்ள நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு இன்ப துன்பங்களைக் கடவுள் நம்பால் கூட்டுகின்ற முறையினை மறந்துவிடுகிறார்கள். வீட்டினை அடைந்து தவம் செய்ய அறியாத வஞ்சகர் பிச்சை இடாதவரையும், அது இட்டவரையும், வைதும் வாழ்த்தியும் தம் ஒரு சாண் வயிற்றை நாள்தோறும் வளர்ப்பது எதற்காக?

**73.** தன்அருகு உறுசேய் சிரத்துஓர் அங்குலியால்
தான்புடைத்து ஒருவன்மீது ஒருவன்
சொன்னமாத் திரத்தின் அவனைஅச் சேயும்
துணிவுகொடு எழுந்துஅறை குதல்போல்
முன்னவன் விளையாட்டு ஆயஐந் தொழிற்கு
முன்னிலை ஆயசீ வரைப்பார்த்து
இன்னல்செய் சாபம் இட்டுமா தவரும்
என்கொலோ தவம்இழப் பதுவே.

ஒரு தந்தை வேடிக்கையாகத் தன் பக்கத்தில் இருக்கும் குழந்தையின் தலையில் ஒரு விரலால் தெறிக்கிறான். குழந்தை அவனைப் பார்க்கும்போது "அதோ அவன்தான் அடித்தான்" என்று தந்தை சொன்னால் குழந்தை அதை நம்பிவிடுகிறது. தந்தை யாரைச் சுட்டிக் காட்டினானோ அவனை அடிக்கும். அதுபோல நாம் செய்த கர்ம வினைகளுக்குப் பலனாக நன்மை தீமைகளைப் பிறர் மூலம் தருகிறார் கடவுள். ஐந்தொழில் செய்கின்ற சிவபெருமானின் லீலைகளை மறந்துவிட்டு மாதவம் செய்யும் முனிவர்கள் கூட தமக்குத் தீங்கு செய்தவரைச் சபித்து விடுகிறார்கள். சாபம் இடுவதால் தம் தவவலிமையை இழக்கிறார்கள். இது என்ன அறியாமையோ!

**74.** பெண்ணைவிட்டு அகலா ஒருவிடன் தன்னைப்
பிறர்வழக் கினில்கொடு போகக்
கண்ணைவிட்டு அகலாது அவள்வரல் போலும்
கண்டுகொண்டு ஏகிஆங்கு அஃதுஎவ்
வண்ணம்ஆ யினும்சீக் கிரத்தினில் முடித்துஅவ்
வனிதைபால் மறிதரல் மானப்

**பண்ணிய சமாதி விடுத்துஅறி ஞரும்தம்**
**பசிதணித்து அதைஉறும் பரிசே.**

அழகுடைய ஒரு பெண்ணைக் கணப் பொழுதாயினும் நீங்காத ஒரு காமியை, அவனுக்குக் கடன் கொடுப்பார் சிலர் வந்து அழைத்துச் செல்ல அவன் தன் கண்ணை விட்டு நீங்காது அப்பெண் வருவது போலப் பார்த்துக் கொண்டே சென்று, அங்கு அவ்வழக்கினை எப்படியாயினும் சீக்கிரம் தீர்த்துக் கொண்டுவந்து மீண்டும் அவளுடன் கூடி இருப்பான். அதுபோல, அறிஞரும் இடைவிடாது தாம் பழகிக்கொண்டிருக்கும் ஞான சமாதியை விட்டு நீங்கிக் காடியையாவது கூழையாவது விரைவில் வாங்கி உண்டு, தம்பசி மாறி மறுபடியும் ஞான சமாதியைக் கூடுவர்.

**75.** **நடந்துஉறங்கு ஒருவன் தனைமலர் அமளி**
**நண்ணுமா புரியின்மற்று அவனும்**
**கிடந்துஉறங் குவதைக் குறித்துமுன் உறக்கம்**
**விழித்தவா கிளக்குதல் போலும்**
**தொடர்ந்துஒரு கணமும் இடைவிடா ஞான**
**நிட்டரைத் தூயதம் சமாதி**
**அடைந்தனர் விடுத்தார் என்பர்ஏ காந்தம்**
**அவர்க்குஅனு கூலம்ஆ தலினே.**

சிலர் தூக்கத்திலேயே எழுந்து நடப்பார்கள். அவர்களைப் பஞ்சணையில் உறங்கச் செய்தால் சுகமாகத் தூங்குவார்கள். நடந்து கொண்டே தூங்குபவனை விழிப்புடன் நடக்கிறான் என்றுதான் பார்ப்பவர்கள் நினைப்பார்கள். அதுபோல ஞான நாட்டம் உடையவர் தனித்திருந்து சமாதி நிலையில் ஆழ்ந்துவிட்டால் அவர் நிட்டை கூடியிருக்கிறார் என்று தெரிந்து கொள்வார்கள். சதா நிட்டை கூடியிருக்கும் சீவன் முத்தர் ஆனாலும் அவர் நின்று கொண்டும், நடந்து கொண்டும் காரியங்கள் செய்து கொண்டிருந்தால் அவர் சமாதி நிலையில் இல்லை என்று தான் காண்போர் நினைப்பார்கள். ஆதலால் சாதகனுக்கு சமாதி பழக ஏகாந்தமே சிறந்தது.

**76.** **நித்திரை தடைமீ றிடில்கைகால் போர்த்து**
**நிசிஇடைப் பூஅணை துயில்வார்**
**ஒத்துஉறா இடையில் கிடையும் அப் பயிக்க**
**ஊனும்எங் ஙனம்இதம் என்னில்**

இத்தரை யோர்நித் திரைமிகில் பாயும்
எரிகொடும் பசிமிகில் கறியும்
சித்தமே வேண்டா என்றசொல் அன்றோ
தெரியுமோ அவர்க்குஅவை மிகலான்.

ஞான சமாதியில் இருக்கும் போது தூக்கம் வருமானால் அதனை விவேகத்தால் தடுக்க வேண்டும். அப்படியும் நில்லாது தடை மீறி வருமாயின் இரவில் கையும் காலும் ஆகிய போர்வையைப் போர்த்துக் கொண்டு பூமியாகிய பஞ்சணை மீது தூங்குவார்கள். உடலுக்கு சுகம் தராத இப்பூமியின் மேல் தூங்குவதும், பிச்சை எடுத்து உண்பதும் எப்படி சாதகனுக்கு இதமாக இருக்கும் எனில், இவ்வுலகத்தார் தூக்கம் மிகும் போது பாய் வேண்டாம் என்றும், கொடிய பசி மிகுந்ததால் நிச்சயமாக கறியும் வேண்டாம் என்பர். உலகத்தார்க்கு அந்த நித்திரையும் பசியும் மிகுதலால் சுகம் என்பது தெரியுமோ? தெரியாது.

77. தென்பர வையின்உள் கழிவட பரவை
சேர்நுகத் துளையினில் செலல்போல்
ஒன்பதிற்று ஒன்ப தோடுமூ இலக்கம்
உளயோ னியும்பிழைத்து ஏறிப்
பின்பிறப்பு இதுபெற்ற தனினும் பாதி
பிறப்புஉறா நாளதுஆக் குநரில்
இன்பம்ஈது எனமிக்கு உறங்கலர் பிறவிக்கு
அறவெரீஇ உளம்துளங் கிடுவோர்.

ஊழிக்காலம் வந்த போது ஏழ் கடலும் ஒன்றாகித் தென்கடலில் கிடக்கின்ற கழி வடகடலுள் கிடக்கின்ற நுகத் தடித்துளையின் வழியே தெய்வத்தின் அருளால் செல்லும். அது போல எண்பத்து நான்கு இலட்சம் வேறுபாடுள்ள பிறவிகள் தோறும் அளவற்ற காலம் பிறந்து பிறந்து சுழன்று அவற்றில் எல்லாம் தப்பி, இந்த மானிடப் பிறவி அரிதாக கிடைத்துள்ளது. இப்படி அரிதாகக் கிடைத்துள்ள மனிதப் பிறவியில் பாதி நாட்களை உறங்கிக் கழித்து பிறக்காத நாட்களாக வீணாக்குகிறோம். சாதகர்கள் தூக்கத்தையே இன்பமெனக் கருதித் தூங்க மாட்டார், பிறவித் துயருக்கு பயப்படுவர்.

78. அறவும்நித் திரையைத் துறந்திடின் உடற்கண்
அடைதரும் பிணிகள் மற்றுஅதனால்

**குறைதலும் மிகலும் இன்றியோர் சமமாக்**
**கொண்டு கண் துயின்றுபின் விழிக்கில்**
**உறுசுகா தனத்தில் எழுதுசித் திரம்ஒத்து**
**உறைகுவர் இறைதலை கழுத்துஊன்**
**செறிஉடல் வாங்காது ஓங்கநேர் அவர்பால்**
**சேருமோ காமநோய் சிறிதும்.**

தூங்காமலேயே இருந்தால் உடலின்கண் நோய்கள் வந்து சேரும். அதனால் குறைதலும் இன்றி, மிகுதலும் இன்றி ஒரு சமமாய்த் தூங்கிப் பின் விழிக்கும் போது சுகாசனத்திலே இருக்க வேண்டும். கொஞ்சமாவது தலையும், கழுத்தும், ஊன் செறி உடலும் வளையாமல், நேராக எழுதிய ஓவியம் போல இருப்பர். இத்தகையவரிடம் காம நோய் சிறிதேனும் வந்து சேருமோ?

**79.** **உறக்கமும் பசியும் மிகுந்திடில் காமம்**
**உற்றிடாது அற்றபோழ்து உள்ளம்**
**இறக்கும்ஒண் சமாதி அடைதலின் அடையா**
**இடையிலும் அடுபவத் துயரை**
**மறக்கலா மையினால் அச்சமும் வீட்டை**
**மதித்தலால் இச்சையும் உடலை**
**வெறுக்குநிக் கிரகத் தால்களிப்பு அறலும்**
**மேவலால் மேவிடாது அதுவே.**

துயில் மிகுந்த காலத்திலும், பசி மிகுந்த காலத்திலும் காமம் சேராது. அத்தூக்கம், பசி இல்லாத காலத்தில் சிறந்த ஞான சமாதி கூடுதலால் உள்ளம் இறந்து போகும். அதனால் காமம் அடையாது. இந்த உறக்கம், பசி, சமாதிநிலை இவற்றுக்கு இடைஇடையே காமம் தோன்றாதோ என்றால், வருத்தும் பிறவித் துன்பத்தை மறவாமையால் பயமும், வீட்டு இன்பத்தை என்று அடைவோம் என்று அதனை எண்ணி அதன்மேல் ஆசையும் உண்டாகும். உடலை வெறுத்து அழித்து மனச் செருக்கு இன்றி இருத்தலால் காம நோய் சாதகனை அண்டாது.

**80.** **எங்குஉள புனல்மற்று இதுகழீஇ இடுதற்கு**
**என்றுகால் இடைப்படும் அசுத்தக்கு**

**அங்குஉடல் குலையும் ஒருமகன் மலம்புக்கு**
**ஆடவும் நாடுமே அதுபோல்**
**பொங்குபுன் மலஊன் பொதிஇதுஎன்று ஒழிப்பல்**
**எனஅரு வருத்துஉடல் பொறுக்கும்**
**துங்கமா தவற்கும் எங்ஙனம் மடவார்த்**
**தோயவும் நேயம் உள் தோன்றும்.**

காலில் பட்ட அசுத்தத்தைக் கழுவிவிட நீர் எங்கு உள்ளது என்று அவ்வசுத்தம் பட்ட இடத்திலேயே மனம் பொறாது உடல் நடுங்கும், ஒரு தூய ஆடவன், மலங்களே நிறைந்துள்ள குளம் புகுந்து மூழ்கவும் நினைப்பானோ? அற்ப மலங்கள் வெளியே ஒன்பது துவாரங்களிலும் கசிந்து ஒழுகும், இந்த மாமிசச் சுமையை என்று நீக்குவேன் என்று உள்ளத்தில் அருவருப்புடன் உடலைத் தாங்கி நிற்கும் உயர் தவம் உடையவனுக்கு, பெண்களைக் கூடும் அன்பு எவ்வாறு மனத்தில் தோன்றும்?

**81.** **அருந்தவம் புரிவோர் எதிர்ஊரு வசிதான்**
**ஆதிய மாதர்வந்து உள்ளம்**
**வருந்திநின்று யாது புரியினும் நோக்கார்**
**மற்றுஇவண் உற்றமா தரையும்**
**பொருந்தும்ஓர் வெளின்மீது ஏறவிட்டு உளநாய்**
**போல்நனி நோக்கும்என் போல்வார்**
**இருந்துஉள இடத்துஆங்கு அவர்வரின் விழியோடு**
**என்படு மோபதைத்து இதயம்.**

ஊர்வசி முதலிய தேவ மாதர்களே வந்து, பல விதமாகப் பணிவிடைகள் செய்து எங்கள் மீது கருணை வைக்க வேண்டும் என்று கேட்டாலும், பெருந்தவமுடைய பெரியோர்கள், திரும்பியும் பார்க்க மாட்டார்கள். அணிலைத் துரத்தும் நாய், அணில் மரத்தில் ஏறி எட்டாத உயரத்தில் இருக்கும்போது, அதையே ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருக்கும். எம்போன்ற சாமானியர்களோ பெண்களைப் பார்த்த மாத்திரத்தில் மயங்கக் கூடியவர்கள். அப்படி இருக்கும்போது தேவ மாதர் வந்தால் மனம் கலங்கி என்ன பாடு படுமோ?

82. பெற்றதாய் முதலோர்ப் புரையமா தரைஎண்
பெருந்துறவு அடைந்துளோன் தவழும்
சிற்றுஒரு மினைத்தன் மனைஎன விநோதத்
திறத்துஉரைப் பினும்முனம் கிரகத்து
உற்றநாள் தனது மகள்தனை அவணம்
உரைத்திடா மையிற்பழுது என்றால்
பொற்றொடி அவர்தோள் தழுவவும் விழைதல்
புரியின்என் ஆம்கொல் அவ் வறமே.

தன்னைப் பெற்ற தாய் முதலியவரைப் போலப் பிற பெண்களை எண்ணும் பெரிய துறவினை அடைந்தவன், தவழ்ந்து வரும் பருவமுள்ள சிறிய பெண் ஒருத்தியைத் தனது மனைவி என்று விளையாட்டாகச் சொல்லினும், இல்வாழ்க்கை வாழும் காலத்தில் ஒருவன் தம் மகளை அவ்வாறு சொல்லமாட்டான். பொன் வளையல் அணிந்தாரது தோளினைச் சேர மனத்தால் விரும்பினும் குற்றம் என்று அறிந்தும் அப்படிச் செய்யின்,அத்துறவினை எதனோடு சேர்ப்பது?

83. சிறந்தகற் புடைய மாதரும் பரத்தை
யரும்அலாத் தெரிவையர் புவி மேல்
பிறந்தநாள் பிறந்தான் போலும்நெஞ் சகத்தைப்
பிரிநடை உரியனாம் ஒருவன்
இறந்ததன் இச்சை எவ்வணம்அவ் வண்ணம்
இகத்திலும் செயப்படாது உடலைத்
துறந்தகா லையிலும் நரகில்வீழ்த்தி இயம
தூதுவர் வருத்தலின் அன்றே.

கற்புடைய மாதர்கள் அல்லாமலும், வேசையோராகவும் இல்லாமலும் உள்ள சில பெண்கள் தவறான நடத்தை உடையவராக இருப்பார்கள். ஆனால் கற்புடைய பெண்கள் என்றும் பிறர் நம்பும்படி நடப்பார்கள். இப்படிப்பட்ட பெண்கள் பிறந்த வேளையில் பிறந்தவனைப் போல நெஞ்சில் வஞ்சகம் வைத்துக்கொண்டு துறவிபோல் வேடமிட்டுத் திரிபவனை யம தூதர்கள் நரகத்தில் தள்ளி வாட்டுவார்கள்.

**84.** **மைப்படு விழியார் இன்பம்ஓர் முள்ளி**
**மலரின்வாய்த் தேனைஒப்பு எனக்கண்டு**
**ஒப்புஇல் பேர்இன்பம் வேண்டினோன் வேண்டி**
**உலகர்வேறு எவைகொடுத் திடினும்**
**துய்ப்பமற்று உடுப்ப இரண்டுமே அன்றித்**
**தொடுவனோ பிறிதுஇவற் றினுக்குஊர்**
**குப்பைசார் இடம்புக்கு இடுதலின் அவற்றைக்**
**குறித்துஒரோர் இடம்புகா மையினே.**

மையுண்ட கண்ணுடைய பெண்களால் வரும் இன்பம் ஒரு முள்ளி மலரிலுள்ள தேனுக்குச் சமம். இதனை அறிந்து, இவற்றை நீக்கிப் பேர் இன்பம் அடைய விரும்பினோன் உலகோர் வேறு எதனைக் கொடுத்தாலும் உண்பனவும் உடுப்பனவும் ஆகிய இரண்டைத் தவிரப் பிரிதொன்றினைத் தன் கையாலும் தொடுவானோ! இவை இரண்டையும் வாங்கலாமோ என்று கேட்டால் உணவுக்காக ஊரினிடத்தும், துணிக்காகக் குப்பை சாரிடத்தும் செல்லுகையால் வாங்கிக் கொள்ளலாம். மற்ற பொருள்களைத் துறவியானவன் தேடி அலைய மாட்டான்.

**85.** **தனைநனி இரந்து வருந்திமற்று ஒருவன்**
**சந்தனம் ஆதிய பூசி**
**இனமலர் மாலை புனையினும் முனியா**
**இழுத்துவைது அடித்துஉதைத்து உடலில்**
**பிணமலம் ஆதி பூசினும் அன்னோன்**
**பிரியம்அப் பிரியம்ஒன்று இன்றி**
**வினைவழி முனைவன் ஐந்தொழில் புரியும்**
**விதத்தையே நோக்கிஉள் மகிழும்.**

பிறன் ஒருவன் வந்து தன்னிடம் மிகவும் வற்புறுத்தி வேண்டிக் கொண்டு சந்தனம் முதலியன பூசி, பல மலர்களால் செய்யப் பெற்ற மாலையை அணிவித்தான் ஆயினும், அவன் சினந்து இழுத்து, வைது, அடித்து உடம்பிலே மலம் முதலியன பூசினான் ஆயினும், தவம் உடையோன் இரண்டையும் சமமாகக் கருதுவான். நல்லது செய்தான் என்றும், தீயது செய்தான் என்றும் கருதி விருப்பு வெறுப்பு சிறிதும் இன்றி இருப்பான். தன் நல்வினை தீ வினைகளுக்கு ஈடாக இறைவன் செய்யும் ஐந்தொழிலை சிறப்பித்து நோக்கி மனம் மகிழ்ந்திருப்பான்.

86. **தந்தைதாய் பலம்ஆ தியகொடுத் திடவும்**
**தக்கைபுண் செவியினுக்கு இடவும்**
**மைந்தவா எனலும் குதித்துஎழுந்து ஓடி**
**வருதல்போ குதல்செயும் மகவின்**
**ஐந்தொழில் புரியும் எந்தைஊழ் வழியீந்து**
**அருள்சுகம் ஆதிய வருங்கால்**
**சிந்தையுள் விழைந்து முற்செலார் அழிந்து**
**பிற்செலார் மாசுஅறத் தெளிந்தோர்.**

பெற்றோர் பழங்களைக் காட்டி அழைத்தால் குழந்தை குதித்துக் கொண்டு ஓடிவரும். காது குத்தித் தக்கை இடக்கூப்பிட்டால் குழந்தை மருண்டு ஓடும். ஞானிகள் இவ்வாறு செய்ய மாட்டார்கள். முன் வினைப்படி இன்பம் வரும்போது மகிழ்ச்சியும், துன்பமும் வரும்போது துயரமும் அடைய மாட்டார்கள். இவை ஐந்தொழில் புரியும் ஈசனின் செயலே என்று சம பாவனையுடனும் அமைதியுடனும் ஏற்றுக் கொள்வார்கள்.

87. **இத்தரை இடைப்பாழ் ஆயஆ லயம்மற்று**
**இருள்மிகு முடுக்கரா திகளில்**
**சுத்தமெய்த் தவர்எப் பொழுதுஅடைந்து உறினும்**
**தோன்றுறாது அச்சம் அங்கு அவர்பால்**
**அத்தன்இவ் உடலைப் புரக்குஞான்று அழிப்பார்**
**இலைஅவ னேபினும் அழிக்கின்**
**வைத்துஇவண் புரப்பார் இலைஎனும் துணிவு**
**மனத்தினுள் இருத்தலின் அன்றே.**

தூய்மையான மெய்த்தவம் உடைய ஞானிகள் மலைக் குகையில் இருந்தாலும், பாழடைந்த கோவிலிலோ மண்டபத்திலோ வசித்தாலும், அவர்கள் உள்ளத்தில் எந்தவிதமான பயமும் தோன்றாது. ஈசன் தன் உடலைப் பாதுகாக்கும்போது இதை யாராலும் அழிக்க முடியாது. ஈசனே இவ்வுடலை அழிக்கக் கருதினால் யாராலும் காப்பாற்ற முடியாது. இப்படிப்பட்ட துணிவு அவர்கள் மனத்தில் எப்பொழுதும் இருக்கும்.

88. **ஊனைஓம் புதல்கை விடுத்துஉனை உவப்பார்**
**உணர்வர்என்று ஆளுடை நம்பி**

**தான்உரைத்த மையான் உடல்விழைந் திடின்அத்**
**தத்துவ நிலையும் கைதவறி**
**ஈனம்ஆர் பிறப்புஉற் றிடுவன் ஐந்தொழிற்கும்**
**இறைஅதி காரிஎன்று எண்ணா**
**ஞானம் ஒன் றனையே தொடரும்ஓர் புருடன்**
**நண்ணுவன் பரகதி திண்ணம்.**

தன் ஊனுடம்பைப் பாதுகாப்பதைக் கைவிட்டவர்களே பரமனை உணர்ந்து மகிழ்வார்கள் என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடுகிறார். ஊன் உடலின்மேல் ஆசை வைத்தால் தத்துவ ஞானம் கை தவறிப் போகும். இழிவான பிறவியே கிடைக்கும். ஐந்தொழில்களையும் புரிபவர் சிவபெருமானே என்று நம்பித் தன் சரீரத்தை அவனிடம் ஒப்படைத்துவிட்டு உடலைப் பாதுகாப்பது ஈசனே என்று உணர்பவர்கள் ஞானத்தையே தேடுவார்கள். அப்படிப்பட்டவர்கள் நிச்சயமாகப் பரகதி அடைவார்கள்.

**89.** **உள்ளதுஉண் டாம்மற்று இல்லதுஇன்று எனவெண்**
**காடர்ஓ திடுதலின் உறும்ஊழ்**
**தள்ளஒணா மையின்எவ் விதத்தினும் நுழைந்து**
**தவம்புரி காலைஊன் உயிரை**
**விள்ளல்செய் திடினும் ஞானசா தகன்உள்**
**மேவும்அவ் வாதனை யொடும்போய்த்**
**தெள்ளிய போகம் உண்டுமீண்டு அடைவன்**
**சிவமதுஉற் பவம் அதுஒன்று இரண்டில்.**

உள்ளதை ஒளித்து வைத்தாலும் இருக்கும், இல்லாத பொருள் ஒரு காலத்தும் இல்லை என்று திருவெண் காடர் கூறியுள்ளார். ஆதலால் யாவராலும் ஊழ் வினையைத் தள்ள இயலாது. தவம் செய்யும் போது ஊழ்வினை எவ்விதத்திலாவது வந்து சேர்ந்து உயிரையும் உடலையும் வேறு ஆக்கும். அப்படிச் செய்தாலும் ஞான சாதகன் தன் உள்ளத்தில் உண்டான அந்தச் சத்திய வாதனையுடன் அனைத்துலகமும் சென்று எல்லா இன்பங்களையும் அனுபவித்துப் பின்னர் மீண்டும் பூமிக்கு வந்து ஒரு பிறப்பையோ இரு பிறப்பையோ அடைந்து முடிவில் பூரண ஞானம் பெற்று சிவத்தினை அடைவான்.

**90.** **அருந்தவ விலக்குஇவ் உடல்பரிப் பதுதான்**
**அச்சமா திகள்தரும் மூலர்**
**திருந்துநம் சிந்தை சிவன்கணே யாவர்**
**வரினும்என்ற மையில் பேதிப்பான்**
**பொருந்தினும் வானோர் எதிர்முதிர் கொலைவெம்**
**பூதம்ஆ தியவளைந் திடினும்**
**இருந்ததம் சமாதி நிலைகுலை யாதோர்**
**எண்ணிய எண்ணியாங்கு அடைவர்.**

இவ்வுடம்பைத் தாமே பாதுகாத்தல் தவத்துக்கு இடையூறாகும். அதனால் அச்சம், ஆசை, பற்று முதலியன மனத்தில் உண்டாகும்,. தவத்துக்கு இடையூறு செய்ய யார் வந்தாலும் நமது சிந்தை சிவன் திருவடியிலேயே இருக்கவேண்டும் என்று திருமூலர் கூறியுள்ளார். எனவே ஞானம் அடைய விரும்புகிறவர்கள் மனத்தினை வேறு படுத்தும் பொருட்டு தம் எதிரே தேவர்கள் வந்தாலும், கொலைத் தொழிலை உடைய பூதங்கள் முதலியன வளைத்துக் கொண்டாலும் தாம் இருந்த சமாதி நிலையில் இருந்து மாற மாட்டார். அவரே தாம் எண்ணியவாறே வீட்டு இன்பத்தை அடைவார்.

**91.** **தேவர்மா முனிவர் அசுரர்வாள் அரக்கர்**
**சித்தர்வித் தியாதரர் முதலோர்**
**யாவரும் விரும்பிச் சித்திபுத் திகளும்**
**எள்துணை அச்சம்ஆ தியஉள்**
**மேவுறாது அகற்றித் தவம்புரிந்து அடைந்தான்**
**மேலதாம் மூலபண் டாரம்***
**ஓவற அவையே குடிகொள்என் போல்நெஞ்சு**
**உடையரால் அடையவும் படுமே.**

தேவர், மாமுனிவர், அரக்கர், அசுரர், சித்தர், வித்தியாதரர் எனப்படும் இவர்கள் அட்டமா சித்திகளையும், மேலான போகங்களையும் விரும்பும் போது அச்சம், ஆசை, கோபம், பற்று முதலியன எள் அளவேனும் மனத்தில் தோன்றாது, தவம் செய்து அவற்றை அடைய வேண்டும். அப்படியானால் அந்தச் சித்தி புத்திகளுக்கு மேலாய் உள்ள

---

*மூலபண்டாரம் = பேரின்பமாகிய வீடு.

மூலபண்டாரத்தினை அச்சம் முதலியன நீங்காது இருக்கும் என்போல் மனமுடையவரால் அடையவும் இயலுமோ?

**92.** **ஒருவனுக்கு இருள்அற்று உரியசிற் சொரூபம்**
**உள்ளவா விளங்கின்அன்று அறும்இப்**
**பருவரல் உருவப் பற்றுமற் றதுநேர்**
**படுமள இறைபுரி தரும்ஐங்**
**கருமம்எவ் இடத்தும் கண்டுதற் செயலைக்**
**கைவிடுத்து அச்சம்ஆ தியஉள்**
**மருவுறாது அகற்றித் தவம்செயல் வழக்கால்**
**வாழிஎம் குரவன்நீ டூழி.**

ஒருவனுக்கு அறியாமை இருள் நீங்கித் தனக்குரிய ஞான வடிவம் உள்ள படியே விளங்க வேண்டும். அப்படி விளங்கினால் துன்பம் செய்யும் உடல் பந்தம் நீங்கும். அந்த ஞான வடிவம் தனக்கு வந்து வாய்க்கும் வரை, இறைவன் எங்கும் செய்கின்ற ஐந்தொழில்களைக் கண்டு, (சீவனுடைய செயலை சிவன் செயலாகப் பார்த்து அச்சம், வெகுளி, காமம், மயக்கம் இவற்றை உள்ளத்திலிருந்த அகற்றி)பயம் முதலியன மனத்திற் பொருந்தாது மாற்றித் தவம் செய்வதே முறை. இவ்வாறு சொன்ன எம் ஞானகுரு நீடூழி வாழ்க.

**வைராக்கிய தீபம் மூலமும் உரையும் நிறைவுற்றது**

